# வெற்றிதரும் வினாயகரும் வழிபடும் முறைகளும்

## சக்கர விளக்கங்களுடன்

கலியுகச் சித்தர்

டாக்டர் ஜி.டி. அன்பரசன்



# வெற்றிதரும் வினாயகரும் வழிபடும் முறைகளும்

(விஞ்ஞான தத்துவச் சக்கர விளக்கங்கள்
யோகாசன பயிற்சி முறைகள் அடங்கியது)

'கலியுகச் சித்தர்' டாக்டர் **ஜி.டி. அன்பரசன்**
நிறுவனர் முதல்வர் வாழ்க்கை சக்தி யோகாசன மையம், சென்னை 72.
முன்னாள் பேராசிரியர் பாண்டிச்சேரி பல்கலைகழக சமுதாயக்
கல்லூரி யோகா மற்றும் இயற்கை மருத்துவ துறை.



**ஏகம் பதிப்பகம்**
163/10, பொன்விழா அடுக்ககம், பாடிக்குப்பம் சாலை,
அண்ணாநகர், சென்னை - 600 040.
✆ 2626 38 96, 2852 91 94

வெற்றிதரும் விநாயகரும் வழிபடும் முறைகளும் - ஆத்மஞான அபிவிருத்தி விஞ்ஞான நூல் ❖ கலியுகச்சித்தர் டாக்டர் ஜி.டி. அன்பரசன் ❖ உரிமை - ஆசிரியருக்கு ❖ முதல் பதிப்பு - டிசம்பர், 2002 ❖ அளவு -1/8 கிரௌன் ❖ பக்கங்கள் - 144 ❖ தாள் - 10.5 கி.கி. ❖ அச்சு - 10 புள்ளி ❖ பதிப்பாளர் - ஏகம் பதிப்பகம், 163/10, பொன்விழா அடுக்ககம், பாடிக்குப்பம் சாலை, அண்ணாநகர், சென்னை 600 040. ✆ 2626 3896, 2852 9194 ❖ ஒளி அச்சுக்கோவை - ஏகம் கம்ப்யூட்டர், சென்னை -5. ❖ அச்சாக்கம் : சபரி பிராஸஸ், சென்னை - 14. ✆ 2848 0647

**விலை : ரூ. 35**

---

ஏகம் பதிப்பகம் - வெளியீடு எண் : 1

---

**VETRITHARUM VINAYAGARUM VAZHIPADUM MURAIGALUM** - Devotional Science ❖ Dr. G.T. Anbarasan ❖ Copyright : Author ❖ First Edition - December, 2002 ❖ Size : 1/8 Crown ❖ No. of Pages : 14 ❖ Paper : 10.5 kg. ❖ Printing Type : 10 Point ❖ Publisher : Yegam Pathippagam, 163/10, Golden Jubilee Flats, Padikuppam Road, Annanagar, Chennai - 40. ✆ 2626 3896,2852 9194. ❖ Laser Typeset : Yegam Computer, Chennai-5. ❖ Printer : Sabari Process, Chennai - 14. ✆ 2848 0647

**Price : Rs. 35**



தவத்திரு. கிருபானந்த வாரியார் சுவாமிகளுடன்
'கலியுக சித்தர்' 'ஹதயோகி' டாக்டர்.ஜி.டி. அன்பரசன்

## பொருளடக்கம்

# வினை தீர்ப்போம்... வெற்றி பெறுவோம்!

நற்குடி மரபில் தோன்றி வளர்ந்து வருபவர்களுக்கு, இரு வகையான பசிகள் வாட்டும். ஒன்று உடற்பசி. மற்றொன்று ஆன்மப்பசி. உடற்பசியை போக்குவதற்கு எத்தனையோ விதவித மான உணவுகள். அவைகள் உடல் இயங்குவதற்கு தேவையான சக்தியை அளித்து உடலுக்கு உரமேற்றும். அதுபோலவே ஆன்மப் பசியை போக்குவதற்கு விதவிதமான தெய்வீக வழிபாடுகள்.

மனிதன் தன்னுடைய சுவைகளுக்கேற்ப உணவுகளைத் தேர்வு செய்து கொள்கிறான். அவற்றை சிலகாலம் விரும்பி வேண்டி உண்கிறான். அவைகள் சில நாட்களில் அவனுக்கு வெறுத்துப் போகின்றன. பிறகு உணவுப் பழக்கத்தில் வேறு சுவையை மாற்றிக் கொள்கிறான். இயற்கையின் விதி 'பசி' என்ற தாக்கம் தான். இதனை ஈடு செய்யவே எத்தனை எத்தனை வகையான உணவுத் தயாரிப்புக்கள்.

மனித மனம் நிலையில்லாமல் சதா சுழன்று கொண்டேயி ருக்கும். அவனது ஆன்மபசியை போக்கவே இந்துச் சமயத்தில் எத்தனையோ வகையான தெய்வ உருவங்கள், வழிபாடுகள், மந்திரங்கள், தத்துவங்கள், புராணங்கள் ஆகியவற்றை உருவாக்கி மனிதனை உயர்ந்த வாழ்க்கை வாழ அழைத்துச் சென்றார்கள்.

மனிதனின் மனஎழுச்சிக்கேற்ப ஆன்மீகப் பாதையில் முன்னேறி மூலத்தோடு முக்திபெற ஆயிரக்கணக்கான தெய்வங் கள், தத்துவங்கள், இறுதியில் எல்லாமும் 'பிரம்ம மயமாக' தெரிகிறது. மனிதன் ஆன்ம பூர்வமாக விரும்பிய தெய்வத்தோடு ஐக்கியமாகிறான்.

தாயின் கருவறையில் கால்களை ஊன்றுவதற்கு முன்பும், பிறகு மண்ணில் கால்களை பதித்த பின்பும் எத்தனையோ வினைகள் சூழ்ந்து வாழ்க்கைப் பயணத்தை அலைக் கழிக்கிறது. படும் துன்பங்கள் ஏன்? எப்போது? யாரால்? எதற்காக? எத்தனை காலம்? என்ற புரியாத புதிரான வினாக்களை கேட்டால் விடை தெரியாமல் எல்லாம் நிர்மூலமாக தெரிகிறது. இறுதியில் குழப்பமும், விரக்தியுமே மிஞ்சுகிறது. ஒவ்வொரு வினைக்கும் பரிகாரமாக ஒவ்வொரு தெய்வங்கள் விளங்குகின்றன. அவற்றுள் முழுமுதற் கடவுளாக விளங்குபவர்தான் விநாயகர் பெருமான்.

கர்ம வினை, ஊழ்வினை, முப்பொழுதும் ஏற்படும் வினைகளை தீர்ப்பவனாக திட உருவமாக காட்சித் தருபவன்தான் விக்ன விநாயகன், வினை தீர்க்கும் வெற்றி விநாயகன் ஆவான்.

அவனை வழிபடும் முறையறிந்து, தத்துவம் புரிந்து, நித்தமும் வழிபட்டால் வெற்றி பெறுவோம். விநாயகப் பெருமான் பல்லாயிரமாண்டுகளுக்கு முன்பிருந்து பல்வேறு உருவங்களில். தோன்றி இன்றைய கலியுகக் கணிப்பொறி. விநாயகர், கிரிக்கட் விளையாடும் விநாயகர் வரை உருவங்களில் தோன்றியுள்ளார். கால வர்த்தமானங்களை விஞ்சி வெற்றிகளை வாரி இறைத்துக் கொண்டிருக்கின்றான் விநாயக பெருமான்.

வருடந்தோறும் விநாயகர் சிலைகளும், வழிபடுவோர்களும் அதிகமாகிக் கொண்டே வருகின்றனர், விநாயகர் வழிபாடு சாதி, சமயம், மொழி, இனம், வருணம் என்ற பாகுபாடின்றி அழகிய பிறந்த குழந்தையை எல்லோருமே கொஞ்சி விளையாடுவதுபோல எல்லோருமே விநாயகனை உள்ளும் புறமும் ஏற்று, மகிழ்ச்சியாக கொண்டாடி வருகின்றனர். எதிர் காலத்தில் விநாயகர் வழிபாடும். சிவ வழிபாடும் உலகம் முழுவதும் மிகைத்தோங்கி நிற்கும்.

விநாயகனை எப்படி வழிப்பட்டாலும் ஏகாந்தமாக ஏற்றுக் கொள்வர். சடங்கு சம்பிரதாயங்களை விஞ்சி குழந்தையாக நம்மோடு வாழ்வில் விளையாடி வேடிக்கையாகவே வினைகளைத் தீர்த்து வைப்பார்.

ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் யோகிகளின் கூற்றுப்படி மூலாதாரம், சுவதிஷ்டானம், மணிபூரகம், ஹநாஹதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதார சக்கிரங்கள் முள்ளந்தண்டில் சக்தி மையங்களாக இருந்து ஆன்மீக ஆற்றலை வெளிப்படுத்து கின்றன. இதில் மூலாதாரச் சக்கரமான முதல் சக்திமையத்தில் விநாயகப் பெருமானே குடியிருப்பதாக சித்தர்கள் வாக்கு. ஆகவே முதல் 'ஏர்' சரியாக சென்றால் பின் 'ஏர்' சரியாக வரும் என்ற பொன் மொழிப்போல் மூலாதார கடவுளான விநாயகனை சரியாக முறையாக வழிபட்டால் மற்ற எல்லா ஞானசக்கர வழிகளும் திறந்து விடப்படுகிறது.

எனது பிள்ளை பிராயத்தில் சாலையில் வரும் யானையைக் கண்டு 'பிள்ளையார்' வருகிறார். ''அவரை வணங்கி கன்னத்தில் போட்டுக் கொள்'' என்றார் பெரியோர்கள். மேலும் எனது பெற்றோர் சில காசுகளை கொடுத்து ''யானையின் தும்பிக்கையில் வை'' 'அதைப் பெற்று உனக்கு ஆசீர்வாதங்கள் புரியும்' என்றார்கள், ஒரு புறம் பெருத்த உருவத்தை கண்டு பயம், மற்றொரு புறம் ஆசீர்வாதம் பெற ஆசையின் உந்துதல்கள் மனோ தைரியத்தை உண்டாக்கியது.

விநாயகர் சதுர்த்தி தினத்திற்கு முந்நாளில் பள்ளியை பகைத்துக் கொண்டு குயவர்களோடு சென்று களிமண் வெட்டி எடுத்து அதை பக்குவப்படுத்தி விநாயகரை உருவாக்கும் வித்தையை உடனிருந்து அறிந்து கொண்டேன். நானே களி மண்ணில் விநாயகரை உருவாக்கி அதற்கு பூசையும், அபிஷேக மும் செய்ததில் எத்தனை மன மகிழ்ச்சியை ஏற்படுத்தியது எனக்கு அந்த பாலபருவத்தில். விநாயகருக்கு விதவிதமான குடை களையே சிறிய வயதில் உருவாக்கியதில் எத்தனை பேரானந்தம்.

விநாயகர் சதுர்த்தியின் மூன்றாம் நாளில் களிமண்ணால் உருவாக்கி வழிப்பட்ட விநாயகரை மீண்டும் நீரிலே கலந்திட செய்யும் போது ஏற்பட்ட துக்கம் மேலோங்கி என்னில் ஆன்மீகத் தேடல்களையும், சிந்தனையையும் துண்டிவிடச் செய்தது. ஒவ்வொரு ஆன்மீக செயல்பாடுகளுக்கும் இந்துச் சமயத்தில் ஏதேனும் ஒரு தத்துவார்த்தமும் நன்மையும் இருக்கும் என எனது

ஞானத் தேடல்களை துவங்கினேன். விளைவுதான் யோகம், தியானம், பிராணாயாமம், சித்தர் மருத்துவம், எண் சோதிடம், வர்மக் கலை, போன்ற சித்தர் ஞானத் தத்துவங்களுக்கு வித்திட்டது. சிறிய வயதிலேயே சித்தியும் கிடைத்தது.

''பித்தன் மகன் பெரு வயிற்றோன்
வித்தகம் தரும் விநாயகனை - நித்தம்
சித்தியில் வைத்தே யான் நிகண்டநூல்
தத்துவமாய் தரணிக்கு தந்தேன் காண்''

பரிதிமலர் விரிப்பதோறும் எம்கைமொட்டு குவிப்ப
பெரியகணபதியே அரியதொரு பொருளும் ஆயுளும்
குறையாது கொடுப்ப வென்றி ஞானக்கலையால்
மறையாது மாந்தர்தம்மை மாண்படையச் செய்.

என்ற விநாயகனின் துதிபாடலுடன் யான் துவங்கி, ''கலியுகச்சித்தரின் ஞானக் கலை 1500'' பாடல்களாக பதினெட்டு வயதிலிருந்து தியானத்தில் எழுதி வந்துள்ளேன். மேலும் பல சித்தர்களின் தொடர்பும் அருளும் கிடைத்து வருகின்றது.

ஆகவே வினைத் தீர்த்து வாழ்வில் வெற்றி பெற வேண்டும் என்ற ஆன்மீக தாகம் கொண்டவர்களுக்கு விநாயக பெருமான் அருள்வார். எவ்வாறு யெனில் அகத்தியரின் கமண்டலத்தில் அடங்கிக் கிடந்த காவேரி நதியை, விநாயகப் பெருமான் காக்கை வடிவில் கவிழ்த்து விட்டு பலரது தாகத்தை போக்கினார். அதுபோலவே தன்னை முழுமையாக நம்பி முறையாக வழி படுபவரை முக்காலமும் காத்து நின்று ஆன்மீக தாகத்தை போக்குவான். பதினாறு செல்வங்களை தன்பார்வையால் என்றும் நோக்குவான் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. எனவே வெற்றி தரும் விநாயகனையும் வழிபடும் முறைகளையும், விஞ்ஞான தத்துவங்களையும் புரிந்து கொண்டு வாழ்வாங்கு வாழுங்கள் என வாழ்த்துகிறோம்.'

*கலியுகச் சித்தன்*
ஜி.டி. அன்பரசன்

*© 2634 1881*
*சென்னை - 72*
*2002*



# உள்ளும் புறமும் உயர்த்துபவன் 'ஓங்கார நாதன்'

விநாயக பெருமானின் வலது தந்தத்தில், பார்வையை தொடங்கி மேல் நோக்கி நெற்றியின் வழியே சென்று, பிறகு கீழ் நோக்கி இடது தந்தத்தின் வழியாக வந்து மீண்டும் கீழ்நோக்கி தும்பிக்கையின் நுனியில் வந்து பார்வையை நிறுத்தி பார்த்தால் 'ஓம்' என்ற பிரணவம் முகத்தில் புலப்படும். யானை முகம் பிரண வத்தை உணர்த்துகிறது. யானையின் 'பிளிரல்' ஓங்கார நாதமாக வெளிப்படுகிறது. ஆகவே ஓங்கார ரூபமாய் விநாயகன் நின்று உலக உயிர்களை இரட்சிக்கின்றார். வலம்புரி விநாயகரிடம் 'ஓம்' என்ற பிரணவத்தை சிறப்பாக காணலாம்.

முற்சந்திகளிலும், ஆற்றோரமும், அரச மரத்தடியிலும், ஆலயங்களிலும் வீற்றிருந்து காண்பவர்களுக்கு கதிமோட்சம் தருகின்றார். பல்வேறு பணிகளில் பயணப்பட்டாலும் சாலை ஓரங்களில் சங்கடம் தீர்ப்பவனாக நின்று வாழ்வின் வழித்துணை யாக விநாயகர் வருகின்றார்.



புறத்தில் முற்சந்தியில் இருப்பதால் அங்கே வசிப்பவர்களின் (நடுகுத்து) கண்ணேறுகளை தான் (திருஷ்டி) பெற்றுக் கொண்டு பொறப்பிள்ளையாக பொதுச் சேவை செய்கிறார். பயணத்தின் போது பாது காவலான பக்தரின் துயர்தீர்க்க பாதை எல்லாம் வீற்றிருக்கின்றார்.

அகத்தில் முற்சக்தியான இரு கால்களின் இணைப்பும், (குறி)

நாபிக்குக் கீழே உடல் இணையும் பகுதியான எருவாயிடத்தில் (மூலாதாரத்தில்) நின்று யோகச் சக்திகளையும், போகச் சக்திகளையும் வழங்கி வருகின்றார்.

விநாயகர் முன்னின்று நாம் வலது காதினை இடது கைகளாலும், இடது காதினை வலது கைகளாலும் பிடித்துக் கொண்டு தோப்புக் கரணம் போடுகிறோம். இவ்வாறான புற வழிபாடால் நம்மை பிடித்துள்ள ஆணவம் குறைந்து, எல்லாம் பரம்பொருளின் வடிவமாகக் காண்கின்ற மனப்பக்குவத்தைத் தருகிறது. மேலும் இவ்வாறு பிடிப்பது, யோகபயிற்சியில் கவச முத்திரையாகும் சின்முத்திரை, சின்மயா முத்திரை போன்று இதுவும் ஒரு முத்திரையாகும்.

காதுகளைப் பிடித்துக் கொள்வதால் உள்புறத்தில் விஞ்ஞான ரீதியில் காதுகளிலும் கை விரல்களிலுமுள்ள அக்கு பிரஷர் புள்ளிகளான, பிட்டியூட்டரி, பினையல் ஆகிய சுரப்பிகளையும், மூளை நரம்புகளையும், தைராயிடு, கழுத்து நரம்புகள், கண் ஆகியவற்றிற்கு தினசரி வழிபாட்டின் மூலம் (அக்கு பிரஷரை) சக்தி அழுத்தத்தை ஏற்படுத்தி நோயின்றி வாழ வழி செய்கிறது.

விநாயகப் பெருமான் முன் காதுகளை பிடித்துக் கொண்டு உட்கார்ந்து எழுந்து தோப்புக் கரணத்தை ஐந்து முறையோ அல்லது ஒன்பது முறையோ அல்லது பன்னிரெண்டு முறையோ போடலாம். இவ்வாறாக முழுமையாக உட்கார்ந்து எழும்போது தொப்புள் பகுதியான நாபியின் கீழ் குண்டலி சக்தி எப்போதும் உறங்கி கிடக்கும். இது பாம்பிற்கு நிகரான நரம்பாக உள்ளது. இதனைத் தோப்புக் கரணத்தின் வாயிலாகத் தட்டியெழுப்பி ஞானநிலை பெற தூண்டுதலை அளிக்கின்றோம்.

இறைவன் எங்கும் நிரம்பியவன். தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான். ஆனையிலும் இருப்பான், அணுவிலும் இருப்பான் என்ற தத்துவ ஞானத்தை உலகியலார் அறிந்திட வேண்டி விநாயகர் அவதாரம் எடுத்துள்ளான்.

ஆற்றோரம், குளத்தின் ஓரம் அமர்ந்த பிள்ளையாரை காண வருபவர்கள் குளித்து ஈரத்துணியை இடுப்பில் கட்டிக் கொண்டு

விநாயகரை தொழும் பொழுது ஆற்றோரத்திலும், குளத்தின் ஓரத்திலும் இயற்கையாக கிடைக்கக் கூடிய பிராண சக்தி நிரம்பிய (ஓசோன்) காற்றை சுவாசிப்பதால் ஆயுள் கூடுகிறது. ஈரத்துணியை இடுப்பில் கட்டிக் கொண்டு வழிபடுவதால், அடிவயிற்றில் தங்கியுள்ள மூலதார கொதிப்பு தணிந்து, நீர்கடுப்பு, மலச்சிக்கல், பிரம்மச்சரியம் தவிர்த்தல், போன்றவற்றை வராமல் தடுக்கிறது. நாபிஸ்தானத்திலுள்ள 72,000 நாடிகள் குளிர்ச்சி பெறுகிறது. மூலக்கொதிப்பை குறைத்து. ஞானக் கனலாக மாற்றுகிறது.

அரச மரத்தடிப் பிள்ளையாரை அனுதினமும் சுற்றி வரும் பொழுது அநேக மாற்றங்கள் உடலினுள் நடக்கிறது. இயற்கை அன்னையின் வரப்பிரசாதங்களில் ஒன்று அரச மரம். இது மரங்களுக்கெல்லாம் அரசனாகக் கருதப்படுகிறது. இதனை சமஸ்கிருதத்தில் 'அக்ஷய வடம்' என்று அழைக்கப்படுகிறது. அரச மரத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில் களைச் செய்யும் மும்மூர்த்திகளின் உருவமாக வணங்கப் படுகிறது. இதனுடைய மருத்துவத்தன்மை எண்ணிலடங்கா.

அரச மரத்திற்கு 'திரு மரம்' என்ற பெயருமுண்டு. அரச மரம் ஆனி முதல் ஆவணித் திங்களில் பூ பூக்கும், அது போலவே விநாயகர் சதுர்த்தியும் `ஆவணித் திங்கள் வளர் பிறையில் நான்காம் நாள் சதுர்த்தி தினமாகும். ஆகவே பிள்ளையாருக்கும் அரச மரத்திற்கும் நிறைய தொடர்புண்டு. திருமணம் போன்ற சடங்குகளில் ஆல், அரசு கன்றுகளை வைத்து மஞ்சளில் பிள்ளையார் பிடித்து சுபகாரியங்



அரச இலை 'விநாயகர்'

களைத் துவக்குவது நன்மையாகவே முடியும் என்பது சமயத்தின் வழிபாட்டில் ஒன்றாகும்.

அரச மரத்தடி விநாயகனைத் திருமணமான பெண்களோ, அல்லது கன்னிப் பெண்களோ சுற்றி வலம் வருவதால் அரச மரத்திலிருந்து உண்டாகும் காற்று சுவாசத்தின் வழியே சென்று கருவறை நோய்களை குணப்படுத்துகிறது. தோப்புக் கரணமும், அங்கப் பிரதட்சிணமும் செய்யும் பொழுது கருவறைகள் கசக்கப் பட்டு நோயில்லா நல்ல குழந்தைகள் பெற வழி செய்கிறது.

அரசமரத்தின் கொழுந்தான சில இலைகளைக் கசக்கி வெறும் வயிற்றில் உண்டுவரக் கர்ப்பப்பை நோய்களைப் போக்கி கருப்பையை பலப்படுத்துகிறது. மேலும் ஆண், பெண் இருவருக்கும் வாதம், பித்தம், சிலேத்துமம் ஆகிய முக்குறை யைப் போக்கும்.

விநாயகன் விரும்பி அமர்ந்த இடமான 'அரச மரம்' பல்வேறு மருத்துவப் பயன்கள் கொண்டது. அரச மரத்தின் கொழுந்து, இலை, விதை, பட்டை, வேர், பால் இவை ஒவ்வொன்றும் தனித்தனியாக மருத்துவப் பயனுண்டு.

அரசங் கொழுந்து இலையைப் பசும்பாலில் அரைத்து நாட்டுச் சர்க்கரை கலந்துண்ண சுரமும், வாதப் பித்தசிலேத்தும் பிணிகளும் தீரும்.

அரச மரப்பட்டையை இடித்து நுண்ணிய தூளை ஆறாத புண்களின் தூவி வர புண்கள் ஆறும். அல்லது பட்டையை கருக்கி தேங்காய் எண்ணெயில் கலந்து புண்களிலும், சொறி, சிரங் களிலும் போட குணமாகும்.

உலர்ந்த பட்டை தூளை இரண்டு தேக்கரண்டி வெந்நீரிலிட்டு காய்ச்சி ஆறின பின்பு வடிகட்டி வாய் கொப்பளிக்க வாய்புண் ஆறும். விக்கல், தொண்டை கட்டு, குரல்வளை நோய்களும் போகும்.

அரச மரத்தின் விதைத்தூள் விந்து உயிரணுக்களை பெருக்கும் சக்தி கொண்டது. ஆகவே இதனை தேனில் கலந்துண்ண ஆண் மலடு நீங்கும். அரச மரத்தின் சுவை துவர்ப்பு மிக்கது. பெண்



களின் வெள்ளைப்படும் நோய்களுக்கு யோனித்தாரையின் வழியாக, பட்டையின் நீரை செலுத்தி தூய்மை செய்து வெள்ளை படும் நோய் தீர்க்கவும் உதவுகிறது. அரச மரத்திலிருந்து கீறுவதால் வடியும் பால் கால் பாதங்களில் காணுகின்ற பித்த வெடிப்புகளுக்கு பித்த வெடிப்பு நோயை போக்கும் நல்லது.

பிள்ளைப்பேறு இல்லாத பெண்களுக்கு மாதவிடாய் நாள்களுக்கு மூன்று தினத்திற்கு முன்பு இம்மரத்திலுள்ள புல்லுருவியின் இலையை அரைத்து எலுமிச்சம் பழம் அளவிற்கு வெறும் வயிற்றில் காலை நேரத்தில் மூன்றுநாட்கள் கொடுத்தால் கரு உருவாகும். மருத்துவத் தன்மை உடையது. ஆகவே அரச மரத்தடி விநாயகனிடம் இத்தனை சிறப்பு குணங்கள் உண்டு.

'ஆ' என்றால் இறைவன். 'லயம்' என்றால் ஒன்று படுதல் என்று பொருள். 'ஆலயம்' என்பது இறைவனோடு ஒன்றுபடுக்கின்ற இடமாக, அவனது பேரருளை பெறும் இடமாகவும் உள்ளது. அதுபோன்றே 'கோ' என்பது இறைவனையும் 'இல்' என்பது தங்கி அருள் புரிவதையும் குறிக்கும். ஆகவே 'கோவில்' என்பது இறைவன் நீக்கமற நிறைந்து அருள் புரிகின்ற இடத்தைக் குறிக்கிறது.

கோவிலில் கொலுவிருந்து, நுழைவாயிலிலேயே முழுமுதற் கடவுளாக இருந்து ஆன்மாவிற்கு அருள் ஆட்சிதனைத் தருகிறான் விநாயகப் பெருமான். எனவே முற்சந்தி, ஆற்றோரம், அரசமரத்தடி, கோவில் ஆகிய இடங்களில் வீற்றிருந்து உள்ளும் புறமும் உயர்த்துபவனாக ''ஓங்கார நாதன் விநாயகப் பெருமான்'' விளங்குகிறார். இனி அந்த பிள்ளை - யார்? என்று காண்போம்.

* * *



# உ

## பிள்ளை - யார் ? சுழியும் சூட்சும தத்துவமும்

நான் சித்த மருத்துவ மூலிகைச் சரக்குகளை வாங்குவதற் காக வேண்டி நாட்டு மருந்து கடை சென்றேன். என்னோடு நவீன கல்வியை மெத்த படித்த நண்பர் ஒருவரும் வந்திருந்தார். மூலிகை சரக்குகளை பட்டியல் இடுவதற்காக கடைக்காரர் ஒரு காகிதத்தை எடுத்தார். அதன் மேற்பகுதியில் நடுவில் சிறிய வடிவில் 'உ' என்ற எழுதினார். பிறகு அதிமதுரம் திப்பிலி, தாளிச பத்திரி என்று நான் சொன்ன மருந்துச் சரக்குகளை எழுதிக் கொண்டார். பிறகு எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டு நண்பரோடு வண்டியில் வந்து கொண்டிருந்தேன் வரும் வழியில் நண்பர் கேட்டார், பெரும்பாலான வயதானவர்கள் ஏதேனும் ஒன்றை எழுதி வேண்டுமானால் முதலில் 'உ' என்று போடுகிறார்கள். அப்படி என்றால் என்ன? என்று கேட்டார். 'உ' என்பது ''பிள்ளையார் சுழி'' என்று கூறுவார்கள் என்றேன்.

பிள்ளையாருக்குச் சுழியா? என்று கேளிக்கையாகக் கேட்டான். அதற்கு நான் சிரித்தேன். அவனோ ஏன் சிரிக்கின்றாய்? எண்றான். பிறகு நான் ஒன்றுமில்லை. நீ சட்டைப் பையில் வைத்திருக் கின்றயே அது என்ன? என்றேன் அதுதான் 'கைத் தொலைபேசி' (Cellular Phone) என்றான். இதில் என்ன செய்யலாம்? என்றேன். இந்த தொல்லைபேசி வைத்து இருப்பவர்கள் யாரிடம் வேண்டு மாளும் உலகம் முழுவதிலும் பேசலாம் என்றான். இந்த போனில் கம்பிகளோ அல்லது மிகப் பெரியதாக மின்னனு சாதனங்களோ வெளியே தெரியவில்லை. ஆனாலும் இதில் விஞ்ஞான நுட்பத் தால் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ள முடிகிறது. நகர் புறத்தில் நவீன வாழ்வோடு ஒன்றியவர்களுக்கு நன்கு செல்

போனைப் பற்றி தெரியும் இல்லையா? என்றேன். ஆமாம் என்று தலையசைத்தான் நண்பன்.

ஆனால் நீ ஒரு குக்கிராமத்தில் எந்த ஒரு விஞ்ஞான வளர்ச்சியுமே இல்லாத ஊரில் சென்று ஒரு வயல் வரப்பின் மீது சென்று காதில் செல்போனை வைத்துக் கொண்டு நீ பேசினால், அந்த கிராமத்து மக்கள் உன்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்? என்றேன். அதற்கு நண்பன் சொன்னான் என்னை ஏதோ புத்தி சுவாதீனம் இல்லர்தவன் , என்றோ அல்லது ஒரு பைத்தியக் காரன் என்றோ நினைப்பார்கள். மேலும் காதில் ஏதோ ஒரு டப்பாவை வைத்துக் கொண்டு கத்துகிறான் என்பார்கள். நீ அவர்களைப் பற்றி என்ன நினைப்பாய்? என்றேன். அதற்கு அவன் உலகத்தை பற்றி எதுவுமே தெரியாத ''நாட்டுப்புறத் தானுங்க நம்மை பரிகாசமாக பார்க்கிறானுங்க'' என்று நினைத்துக் கொள்வேன் என்றான்.

இதிலிருந்து என்ன தெரிகிறது. கிராமத்து மக்கள் அல்லது விஞ்ஞான வளர்ச்சியே சரியாக கண்டிராத மக்கள் இதுவரை அவர்களது வாழ்க்கையில் பார்த்திராத ஒன்றை, உன் கையில் சிறிய 'டப்பா' வடிவில் செல்போனை பார்ப்பது அவர்களுக்கு கேலிக்கையாகத் தெரிகிறது. அதுபோலவே கிராமத்தாரின் அறிவியல் முன்னேற்றமின்மை உனக்குக் கேலிக்கையாகத் தெரிகிறது. இதுபோன்றுதான் இந்து சமய செயல்பாடுகள் புரியாதவர்களுக்கு தூரமாக நின்று பார்க்கும் கேலிக்குரிய செயல்களாகத் தெரிகிறது. இந்து சமயத்தை அறிந்து அதன் நுட்பங்களைக் கண்டவர்களுக்கு, கால பொக்கிஷங்களாகத் தோண்டத் தோண்ட மகத்துவம் புரிகிறது. உலகத்திலுள்ள எல்லா சமயங்களைக் காட்டிலும் இந்து சமயம் சற்று விஞ்சி உடல் நல மருத்துவம், மன நலம், சமுதாய இணைப்பு, பரோவுபகாரம், இல்லற இயல், துரவற ஒழுக்கம் என்று சமயத்தோடு வாழ்விலும் கலந்துள்ளது என்றேன். பலர் இந்துச் சமயத்தை கேலிக்குரிய பொருளாக்கி பணம் சம்பாதிக்க முனைந்துள்ளனர். இதனால் அப்பாவிகளைக் குழப்புகின்றனர். இதனை நீ தீர்க்கதனமாக

உணர்ந்து கொள் என்றேன். பிறகு பிள்ளையார் சுழியின் தத்துவத்திற்கு வந்தேன்.

'சுழி' என்பது 'வட்டம்', அண்டம்' என்று பொருள்படும். அது போன்று 'சுழித்தல்' என்பது 'வட்டமிடுதல்' என்பதாகும். உதாரண மாக மாணவன் எழுதிய தேர்வில் விடை சரியில்லாததால் ஆசிரியர் 'சுழித்தார்' என்றால் 'பூஜ்ஜியம்' என்றுதானே பொருள்படும்.

ஒரு திருமணச் சடங்கிளோ, அல்லது பொது விடங்களிலோ, அல்லது பள்ளி வகுப்பறையிலோ, ஒரு பையனைப் பார்த்து வயதில் மூத்தவர் ஒருவர் பக்கத்திலுள்ள நண்பரிடம் அந்த பையனை சுட்டிக் காட்டி இந்த பிள்ளை யார்? என்று கேட்பார் களானால், அதற்கு பக்கத்திலுள்ள நண்பர் 'பிள்ளை யார்?' எனில் இன்னார் தாய், இன்னார் தந்தை இவர்களின் பிள்ளைதான் நீங்கள் சுட்டிக் காட்டிய பையன்' என்று தாய், தகப்பனை முன்கூறி பிறகு பையனைக் கூறுவர். ஆகவே அன்னையும், பிதாவும் முன்னெறி தெய்வமாகும். ஆகவே பிள்ளை யார்? என்று கேட்டால் பெற்றோர்களை முன் கூறி பிறகே வழித் தோன்றலைக் கூறுவர்.

அண்டமாகிய இவ்வுலகத்தில் ஒரு குழந்தை பிறக்க வேண்டு மானால் தாயின் சினை முட்டையும், (Ovum), தந்தையின் வேல் போன்ற 'சுக்கில அணுவும் (Sperm) ஒன்று சேர்ந்தால் தான் புதிய மனித உயிர் தோன்றும். இது பரம்பொருளின் படைத்தல் இரகசியம், தாயின் கருமுட்டை "O" வட்ட வடிவமாகவும், தந்தையின் சுக்கில அணு வேல் போன்றிருக்கும், இவ்விரண்டும் சேர்ந்து நாம் தாயின் தகப்பன் கருவில் பிறந்ததை நினைவுப் படுத்துவதே பிள்ளையார் சுழி எழுத்தின் 'உ' தத்துவமாகும். எந்த ஒரு செயல்களைச் செய்ய துவங்கும் பேதும் மாதா, பிதா, குரு, தெய்வத்தை மனதில் நினைத்து வணங்கிய பின்பே நம் முன்னோர்கள் காரியத்தைத் துவக்கினார்கள். ஆகவே சுழியாகிய 'அண்டத்தில்' மாதா, பிதா அணுக்களினாலே நாம் பிறந்துள் ளோம் எனவே அவர்களைப் ''பிள்ளையார் சுழியின்' வாயிலாக மனதில் வணங்கி எழுத்தால் சுழிபோட்டு காரியங்களைத் துவங்கிச் சித்திகளை அடைந்தார்கள்.

இது பிள்ளையாருக்குப் போடுகின்ற 'சுழி' இல்லை. நம்மைப் பெற்றவர்களுக்கு மனதில் நினைத்துப் போடும் ஞானச் சுழியாகும், விநாயகர் வழிபாட்டில் வடமொழி பாடலிலுள்ள முதல் சொல்லை சூட்சுமாக நினைத்து பாருங்கள்.

''சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸந்தவதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப சாந்தயே! ''

என்ற இந்த வரிகளை வணக்கச் செய்யுளாகப் பாடுவர். 'சுக்லாம்' அதாவது 'சுக்கிலம்' (sperm) வழியாக, 'சசிவர்ணம்' சந்திரனின் வடிவமான 'சுரோணிதமான (Ovum) வழியே தான் பிறந்தேன் என்பதாகும். ஆன்மீகப் பொருளில் சுக்கிலமான வெண்ணிற ஆடையை அணிந்தவர், சந்திரனின் நிறமும், நான்கு வேதங் களான ரிக், யஜுர், சாம, அதர்வணமாகிய நான்கு தோள்களை (சதுர் 'புஜங்களை) கொண்டவராகிய விநாயகனை வணங்கித் துவங்குகின்றேன். அருள்புரியட்டும் என்பதாகும். ஒரு புறம் மெய்ஞான ரீதியாகவும், மறுபுறம் விஞ்ஞான ரீதியாகவும் விளக்கம் அமைந்துள்ளது.

''விநாயகப் பெருமான்'' தாய் தகப்பனே முதல் தெய்வம் என்றும், அவர்களே இவ்வுலகத்திற்கு மட்டுமின்றி சகலவுலகத் திற்கு முதல் தெய்வமென்று புராணக் கதையில் முன் உதாரணமாக நின்று விளங்குகின்றார்.

பண்டைய வழக்கிலுள்ள ஞானக் கதை இது. இதிலுள்ள தத்துவங்களைப் புரிந்து கொள்ள வேண்டுமே ஒழிய சரித்திர ஆய்வுகளுக்கு உட்படுத்தி உற்று நோக்கிக் கொண்டிருக்கக் கூடாது. 'புராணங்கள்' ஞானக் கதைகளைக் கூறி மனிதனை நல்வழிப்படுத்தும் ஞானபாட்டைகளாகும்.

ஒரு முறை கயிலையில் சிவபெருமானும் பார்வதியும், அவர்களது குழந்தைகளான மூத்தவனும் இளையவனுமான விநாயகப் பெருமானும், முருகனோடு வீற்றிருந்தனர். அப்பொழுது நாரதர் கையில் பக்குவமாகப் பழுத்திருந்த மாங்கனியான (ஞானப் பழத்தை) கொண்டு சிவபெருமானிடம்

அளித்தார். அம்மாங்கனியைத் தம் புதல்வர்களான விநாயகன், முருகன் ஆகிய இருவருக்கும் ஒரு போட்டியை வைத்து வெற்றி பெறுபவருக்கு அப்பழத்தை முழுமையாக அளிப்பதாகக் கூறினார். அப்போட்டி யாதெனில் இவ்வுலகத்தை யார் முதலில் சுற்றி வருகின்றாரோ அவருக்கே இக்கனி உரியது என்று கூறுகிறார். உடனே முருகன் தானே பரிசினைப் பெற வேண்டும் என்ற இளமைக்கே உரிய துடிப்போடு, மயில் மீது ஏறி உலகைச் சுற்றி வர புறப்பட்டுச் சென்றார்.

மூத்தோர்கள் எப்போதும் சற்று நிதானித்துச் செயல்படு வார்கள் என்பதற்கேற்ப விநாயகப் பெருமான், தம்பியான முருகனின் முகம் மறைந்த பின்னர், தனது புஜத்தில் கிடந்த ஆடையை எடுத்து இடுப்பிலே பக்தியுடன் கட்டிக் கொண்டார், அதன் பிறகு தனது தாயும், தகப்பனான சிவபெருமானையும், பார்வதியையும் வணங்கிவிட்டு அவர்களைக் கை கூப்பி தலைமேல் வணங்கியவாறு சுற்றி வந்து அவர்களது பாதார விந்தங்களில் விழுந்து வணங்கினார். அவர்களும் ஆசிகளைக் கூறினார்கள். உடனே விநாயகப் பெருமான் தனக்கு மாங்கனியை வெற்றி பெற்றதற்காகத் தருமாறு வேண்டினார்.

சிவபெருமானோ விநாயகனைப் பார்த்து, உனது இளையவன் முருகனோ உலகை வலம் வரச் சென்று விட்டான். நீயோ இங்கிருந்தபடியே எங்களை வலம் வந்து சுற்றி விட்டு பழம் கேட்கின்றாயே இது என்ன செயல்? நியாயமா? என்று கேட்டார்.

அதற்கு விநாயகப் பெருமானோ, தனது பெற்றோர்களான சிவபெருமான் பார்வதியை பார்த்து, என்னை ஈன்றவர்களே, உங்களது அண்டத்திலிருந்து தான் நான் முதலில் தோன்றினேன். அதுவே எனக்கு முதல் உலகம். மேலும் அண்ட சராசரங்களி லுள்ள எல்லா உலகமும் உங்களுக்குள் அடக்கம்.

உங்களை வலம் வந்தாலே உலகத்தையெல்லாம் வலம் வந்ததற்கு நிகராகும். பிறக்கும் முன்பு வயிற்றின் அண்டத்தில் சுற்றி வந்தேன். பிறந்த பின்பு நீங்களே உலகமாக சுற்றி வந்தேன்.

எனவே ''அண்டத்திலுள்ளது பிண்டத்தில், பிண்டத்திலுள்ள அண்டத்தில்'' அதனால் தான் உங்களை வலம் வந்து வெற்றிக் கனி ஈன்றேன் என்றார். இதனை கேட்டு மகிழ்வுற்று மாங் கனியை விநாயனுக்கு இறையானார் அருளினார்.

பிறகு முருகனும் உலகை வலம் வந்து நின்றார். நடந்த செயல்களை கண்டு மனம் வெதும்பினார். இறைவனோ இளையவனை நீயும் வெற்றி பெற்றவனே, உனக்கும் வேறொரு கனியைத் தருகிறேன் என்று வழங்கினார்.

எனவே தாய் தந்தை தான், முதல் கடவுள் என வலம் வந்து விநாயகனே வணங்கினார், அதுபோன்று பிள்ளையார் - 'சுழி'யின் சூட்சும தத்துவமாக அக வழிபாட்டிற்கும், புற வழிபாட்டிற்கும் ஞானப் பொருளாக விளங்குவது இக்கதையின் வாயிலாக உணரலாம்.

சிலருக்கு ஊழ்வினை காரணமாகவும், கிரகக் கோளாறுகள் காரணமாகவும், தாயும், தகப்பனும் சரியாக அமையாமல் போய்விடும். தாய், தகப்பனுடைய தொல்லைகளால் மனம் தடுமாற்றமும், வாழ்க்கைப் பாதையும் நிலை குலையும், இதனால் பெற்றவர்களது மீது வெறுப்பும், விரக்தியும், ஆத்திரமும், கோபமும் ஏற்பட்டு கொந்தளிப்புடன் இருப்பார்கள். அவர்கள் எனது ''தாய், தகப்பன், சரியில்லை'' அவர்கள் வணங்கத் தகுதியில்லாதவர்கள் அவர்களை நான் எப்படி வணங்குவேன் என்ற குறை கூறி கொண்டு இருக்கலாம்.

அவர்களின் செவிகளுக்கு சில வார்த்தைகள். உலக மாயை யின் சீற்றம் மிக மோசமானது. அழகான வற்றை கண் முன்காட்டி கருத்தினுள் நிறைவை ஏற்படுத்தி, இறுதிக் காலத்திலோ, அல்லது சில கால்கட்டங்களிலோ மனத்தினுள் உண்மை நிலையை உணர்த்தும். புராணங்களிலும் இதிகாசங்களிலும் இதற்கு எத்தனையோ உதாரணங்களைச் சொல்லாம். சிவபெருமான் தனது பக்தனை உயர்த்துவதற்காக விருந்தினராக சிறுத் தொண்ட நாயன்மார் ஒருவரின் வீட்டிற்கு மாறு வேடத்தில் விருந்துண்ண வந்தார். ஞானத்தழல் மேனியான சிவபெருமான் சிறுத் தொண்ட

நாயனாரின் ஐந்து வயது மகனை அறுத்துக் கறிசமைத்து விருந்து தர வேண்டுமென்று மறைமுக கோரிக்கையை வைத்தார். அந்த நாயன்மாரும் அவரது மனைவியும் சற்றும் முகம் கோணாமல் தான் பெற்ற பிள்ளையை அறுத்து, அவனது கறியை சமைத்து விருந்துண்ண அழைத்தனர். அதற்கு சந்நியாசி வடிவிலே இருந்த சிவன் யான் தனியாக விருந்துண்ண மாட்டோம். நீவிருவரும் என்னுடன் அமர்ந்து உணவருந்த வேண்டும் என்று சோதித்தார். சிறுத்தொண்டரும் மனமும் முகமும், மலர்ச்சியோடு தான் பெற்ற பிள்ளையின் கறியை உண்ண அமர்ந்து கொண்டார். மீண்டும் சிவன் சிறுத்தொண்டரை சோதிக்க வேண்டி, யாதும்யறியாதவன் போல் உனது மைந்தனையும் கூப்பிடு. அவனும் பசியாறட்டும் என்றார். அதற்கு சிறுத்தொண்டநாயனாரும், அவரது இல்லாளும் எப்படியாவது வீட்டிற்கு வந்துள்ள சந்நியாசியின் பசியை போக்க வேண்டும் என்ற நோக்கில், எவ்வித உடல் மாற்றமும் கொள்ளா மல், ஒரு பாசாங்கிற்காக வீட்டின் வாசலிலிருந்து உரத்த குரலில் ''மகனே சீராள தேவனே ஓடி வாடா'' உணவு உண்பாய் என்று அழைத்தார்கள். அப்போது ஒரு அதிசய சம்பவம் நடந்தது. எப்பொழும் போல சிறுதொண்டரின் மகன் பள்ளியிலிருந்து வருவதை போல வந்து நின்றான்.

வீட்டினுள் சிறுத்தொண்டரும் அவரது மனைவி, மகன் சீராளதேவன் மூவரும் விருந்துண்ண அமர்ந்திருந்த அடியவரின் இருப்பிடத்தைச் சென்று பார்த்தபோது அங்கு அவரில்லை. உணவுப் பண்டங்களும் காணாமல் போயிருந்தன. இதைக் கண்டு மனங்கலங்கிய சிறுத்தொண்டர் மயக்க முற்றார். அதன் பிறகு சிவபெருமான், உமா தேவியோடு காட்சியருளி அறம், பொருள், வீடு, பேறு, இன்பத்தை நல்கினார்.

இக்கதை அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான சிறுத்தொண்ட நாயனாரின் கதையாகும். இக்கதையில் சிவபெரு மான் சீராள தேவனின் பெற்றோர்களைச் சோதித்து மகனையும், பெற்றோர்களையும் உயர்ந்த நிலையை அடையச் செய்ய அவர்களது குடும்பத்தில் பல குழப்பங்களை செய்வித்து பிறகு

மோட்சத்தை அருள் செய்தது போலவே, சில தாய், தகப்பன் செய்கின்ற கொடுமைகளுக்கு பிள்ளைகள் பல சோதனைகளை அனுபவிப்பார்கள். எனவே 'எல்லாம் நன்மைக்கே' என்று இறைவன் மீது பாரத்தைப் போட்டுவிட்டு உங்களது கடமை களை மட்டும் சரியாக செய்யுங்கள் உங்களது வாழ்க்கை எதிர் காலத்தில் சிறப்பாக அமையும். பிறந்தது நம்மிடமில்லை இறப் பதும் நம்மிடமில்லை. பிறகு ஏன் வருத்தம். எல்லாம் அவன் செயல். பெற்றோர்கள் எவ்விதத்திலும் உதவியாக இல்லாவிட்டாலும், உங்களை தன் உதிரத்தால் பத்துமாதம் சுமந்து, உடல் ஊனம் இல்லாமல் பெற்றதற்காகவாவது மனதில் நினைத்து பிள்ளையார் சுழி போட்டு காரியத்தை தொடங்குங்கள். உடல் ஊனம் பிறப்பில் இருப்பினும் மனம் ஊனமில்லாமல் மாட்சிகள் செய்யுங்கள்.

சிறுத்தொண்டர் கதையின் வாயிலாக இவ்வுலகில் யாவும் நிலையில்லாதவை. பந்த பாசங்களுக்கு அதிகம் கட்டுண்டு பிறகு திடீரென சிலவற்றை இழக்க நேரிட்டால், அந்த இழப்பே உடல் ரீதியான நோயையும், மனநோயாளியாகவும் மாற்றி விடும். ஆகவே எல்லாபாரத்தையும் இறைவன் மீது போட்டுவிட்டு எல்லா நற்காரியங்களையும் முழுமனததாக செய்யுங்கள். அதுவே வினைகளை தீர்த்து வெற்றியாக உங்களுக்கு மலரும்.

நம் முன்னோர்கள் தன் தலையின் மீதுள்ள சுழியை (விதியை) மாற்ற பிள்ளையார் சுழியுடன் காரியத்தைத் துவக்கினார்கள் என்றேன். இவ்வாறு எனது நண்பனுக்கு பிள்ளை யார்? சுழியின் தத்துவம் பற்றிக் கூறி அவனது ஞான விழியை திறந்தேன். அவனோ நாசியின் வழியே பெருமூச்சை விட்டு அதிசயத்துப் போனான் இந்து சமயத்தின் தத்துவத்தில். அப்போது அவனது சட்டைப் பையிலிருந்த கைத் தொலைப் பேசியில் (Cellular phone) விஞ்ஞானத்தில் மெய்ஞான ஒலி ஒலித்ததுபோல சமிக்ஞை செய்து அழைத்தது. அதைச் சிரித்துக் கொண்டே கையில் எடுத்துப் பேசினான்.

* * *



# விநாயகன் பிறந்த கதை...

மேற்கத்திய நாடுகளில் கணிப்பொறிகளையும், புகைப்பட கருவிகளையும் கொண்டு புதிய படைப்புகளை விஞ்ஞான சாதனங்களால் மனித மனங்களை கவர்ந்து, பொழுது போக்கு அம்சங்களை நிறைத்து, திரைப்படங்களில் காண்பிக்கின்றனர். இதன் வாயிலாக பொருளாதாரத்தை தேடிக் கொள்கின்றனர். இவைகளில் சில இயற்கைக்கு மீறிய கதைகளாகவும், காட்சி களாகவும் வருகின்றன. அறிவுப் பூர்வமாக ஏற்றுக் கொள்ள முடியாது.

இந்துச் சமயத்தில் முன்னோர்கள் பதினெட்டு புராணங் களை வகுத்து வைத்தனர். அதில் பல்வேறு வித்தியாசமான கதா பாத்திரங்களையும், உருவாக்கி அதன் மூலம் மனிதனை நல்வழிப் படுத்தினர். சடங்குகள், பூசைகள், பிரசாதங்கள், உபவாசம், தானம், தர்மம், வேள்விகள், மனுநீதி தர்மம் ஆகியவற்றை முறை யாகப் பின்பற்றுபவனுக்கு முக்தியும், ஞானமும், நல்வாழ்வும் கிடைக்குமென்று கூறினர். அதற்காக உவமான கதைகளையும் நிசமான கதைகளையும் கதா பாத்திரங்களாக உருவாக்கினார்கள். அவற்றில் மனித மனங்களை கவர்ந்திழுக்க வேண்டி சில அற்புத சக்திகளையும் காட்டினர். இவற்றில் பெரும்பாலும் நன்மை பயக்கும் உண்மைகளாகவே இருக்கும், சில கற்பனைகளும் கலந்து நிற்கும் மனோ தத்துவங்களும் நிரம்பியிருக்கும். இருப்பினும் மனிதன் உயர்ந்த நிலையை அடைய வழிகாட்டுவ தாக அமையும். தீய வழிகளில் செல்லும் கதா பாத்திரங்கள் தேய்ந்து போவதாகவே அமையும். இதனால் மானுட சமுதாயம் உளவியல்

ரீதியிலும், உடலியல் ரீதியிலும், நன்மை பயப்பதாகவே இருக்கும்.

விஞ்ஞான நுட்பத்தால் பொழுது போக்காக கதைகளைப் படைத்து பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்து கொள்ளும் மேற்கத்திய நாடுகளைப் போல, மெய்ஞான நுட்பத்தால் விழுதுகளைப் போன்ற கதைகளைப் படைத்து அருளானந் தத்தை இந்தியாவில் இந்து சமயம் அபிவிருத்தி செய்து கொண்டது. அதன் விளைவு தான் புராணங்கள், இதிகாசங்கள், உபநிடதங்கள், வேதங்களாகும். இவற்றை எழுதியவர்கள் முனிவர்கள், ரிஷிகள், சித்தர்கள் போன்றவர்கள். அத்தகைய இறையருளைப் பற்றிக்கூறும் புராணங்கள் எண்ணற்றவை யாகும். புராணங்கள் என்றால் பழங்கதைகள் என்ற பொருளு முண்டு. புராணங்களின் உட்கருத்து இவ்வுலகம் தோன்றிய வரலாறு; வளர்ச்சி உலகத்தின் அழிவு போன்றவற்றையும், நாட்டை ஆண்ட அரசர்களின் வம்ச வரலாறு அவர்களின் 'தெய்வாம்சம்' பொருந்திய குணநலன்களை இலக்கிய நயமோடு மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான அறநெறி கருத்துக்களை கூறுவதாகும். இவற்றில் சில அவதார புருஷர்களும் உண்டு; இறைவன் மீது மட்டில்லா பேரன்பு கொண்ட மனிதர்களுக்காகப் ''பரம் பொருளே'' இவ்வையகத்தில் மானுடனாக பிறந்து மக்களின் குறைகளைத் தீர்த்து வைத்துள்ளனர். இதையே 'அவதாரம்' எனப்படும்.

'அவதாரம்' என்றால் இறைவனே எளிய வடிவில் இறங்கி வந்து 'அருளாட்சி' புரிந்து ஆன்மநேயத்தை வளர்த்ததாகும்'' இவைகளே புராணங்களாகும். அவற்றில் மிக முக்கியமாக உள்ளது 18 புராணங்களாகும். பதினெட்டு புராணங்கள் 1. பிரம்ம புராணம், 2. பத்ம புராணம், 3. விஷ்ணு புராணம், 4. சிவ புராணம், 5. பாகவத புராணம், 6. லிங்க புராணம், 7. வராஹ புராணம், 8. நாரதீய புராணம், 9. மார்கண்டேய புராணம், 10. அக்னி புராணம், 11. பவிஷ்ய புராணம், 12. பிரம்ம வைவர்த்த புராணம், 13. ஸ்காந்த புராணம், 14. வாமன புராணம், 15. மத்ஸ்ய புராணம்,

16. கூர்ம புராணம், 17. கருட புராணம், 18. பிரம்மாண்ட புராணம் ஆகியன்வயாகும். இவைகளை சிவபெருமான் நந்தி தேவருக்கு சொன்னார். நந்தி தேவரோ அவற்றை சனத்குமார முனிவருக்கு உபதேசமாக கூறினார். சனத்குமார முனிவரோ தம்மிடம் அன்போடிருந்த வியாச முனிவருக்கு கூறினார். வியாச முனிவரோ அந்த பதினெட்டு புராணங்களையும் சுலோகங் களாக்கி உலகெங்கிலும் பரவிடச் செய்தார்.

இதைப் போன்றே வேறு சில யோகஞான பரம்பரை வழியாகவும் கேட்டு முனிவர்கள் இம் மகா புராணங்களுக்கு, உபபுராண்ங்களாக பதினெட்டு புராணங்களை உருவாக்கம் செய்தார்கள். அப்புராணங்களில் தலையாயபுராணமாக இருப்பதுமே 'பார்க்கவ புராண''மாகும். இந்த பார்க்கவ புராணத்தில் விநாயகப் பெருமானின் மகிமைகளை எண்ணற்ற கதைகளை வாயிலாக விளக்குவதாக அமைந்திருக்கிறது. அதனால் ''பார்க்கவ புராணத்தை'' 'விநாயகர் புராணம்' என்றும் மகரிஷிகள் கூறுவார்கள். அதுபோலவே 'முத்கல' புராணமும் விநாயகனின் மகிமைகளை ஞானவெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் வண்ணம் அமைந்துள்ளது.

## விநாயகனின் பிற பெயர்கள்

விநாயகனுக்கு கணபதி என்றும் 'கணாதிபதி' கணேசன், அங்குசபாசமேந்தி, அம்பிக்கைதனயன், ஆகுவாகனன், ஏகாந்தன், ஏரம்பன் ஐங்கரன், ஒற்றை கொம்பன், கங்கை பெற்றோன், முக்கண்ணன், முன்னோன், மூத்தோன், கயமுகன், நால்வாயன், பாசாங்குசன் என்ற பல்வேறு பெயர்களுமுண்டு.

'கணபதி' என்றால் 'க' என்பது ஞானத்தையும் 'ண' என்பது மோட்சத்தையும் 'பதி' என்பது 'தலைவனையும் குறிக்கும். எனவே 'கணபதி' என்ற சொல் ஞான மோட்சத்தை அளிக்கின்ற 'தலைவன்' என்றது பொருளாகும்.

'விக்னேஸ்வரன்' என்றால் 'விக்னம்' என்பது 'தடை' அல்லது துன்பத்தை குறிக்கும். 'ஈஸ்வரன்' என்றால் பரம்

பொருளை குறிக்கும். எனவே 'துன்பத்தை நீக்கும் ஈஸ்வரன்' என்ற பொருளாகும். 'வினாயகன்' என்றால் மானிட பிறவியின் பயன் யாது? என்று 'வினா'வை எப்போதும் 'அகத்தில்' கேட்டுக் கொண்டிருப்பவனே 'வினா' 'யகன்' ஆவான்.

'விநாயகன் பிறந்த கதையைப்பற்றி புராணங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறப்பு அவதாரத்தை அடிப்படையாகக் கொண்டு கூறப்படுகின்றன. இவைகள் 'பிள்ளையார்' பிறந்த கதைகளாயினும் அவ்வற்றுள் விஞ்ஞான, மெய்ஞான, தத்துவங்களும், அறநெறி கருத்துக்களும், மருத்துவ மகத்துவங்களும், உளவியலின் கோட்பாடுகளும் எண்ணற்றவை பொதிந்துள்ளன. இவைகள் காலங்களை கடந்து நின்று எக்காலத்திலும் புதிய புதிய பரிமாணங்களில் மக்களுக்கு நற்பயண பாதைகளாக அமைந்துள்ளதை காணும் போது இந்து சமயத்தை வியக்க வைக்கிறது.

## பிள்ளையார் பிறந்த கதை

சிவ மகா புராணங்களில் பிள்ளையார் பிறந்த கதையைப் பற்றி கூறும் கதையை, உங்களுக்கு இங்கு நான் சொல்கின்றேன்.

சிவபெருமான் வீற்றிருக்கும் கைலாயத்தில் ஒருமுறை பார்வதிதேவியானவள் தன் தோழிகளோடு விளையாடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது, பார்வதி, தேவியின் தோழிகளுள் ஒருத்தியான விஜயை என்பவள் பார்வதி தேவியை பார்த்து கூறினாள். அம்மா, சகல உலகினையும் தாயாகக் காத்து இரட்சித்து அருள் தரும் ஆதிபராசக்தியே, உமையே, உங்கள் சிந்தைக்கு ஒன்று கூறுகின்றேன். உங்களின் ''பதியான சிவனுக்கோ 'நந்தி' 'பிருங்கி' '' போன்ற பிரதமகணங்கள் பலர் இருக்கின்றனர். ஆனால் உங்களுக்கென்று 'கணபாலர்' ஒருவரும் இல்லையே. அதற்காக நீங்கள் சிந்தையில் புகுந்து சீர்படும் செயலால் கணபாலகனை வகுத்துக் கொள்ளுங்கள் என்றாள். பிறகு சில நாட்கள் உருண்டோடியது.

பிறகு ஒருநாள் பார்வதி தேவி அந்தப்புரத்தில் நீராடிக் கொண்டிருந்தாள். வாயிலில் சிவகணங்களில் ஒன்றாக நந்தியம் பெருமான் காவல் காத்து நின்றிருந்தார். அப்பொழுது சிவ பெருமான் பார்வதி தேவியின் அந்தப்புரத்தில் நுழைய முற்பட் டார். வாயில் காப்போன் நந்தியம் பெருமான் எவ்வளவு கூறியும், தன்னுடைய சேவகன் தான் 'நந்தி' என்று அதைப் பொருட்படுத்து தாட ல் சிவன், அந்தப்புரத்தில் நீராடிக் கொண்டிருந்த பார்வதி தேவியாரைக் கண்டு விட்டார். பார்வதி தேவி வெட்கத்தால் வெளிறிய முகத்துடன் வேகமாக சென்று மறைந்து கொண்டாள். அப்பொழுது தான் தன் தோழி விஜயை கூறிய வார்த்தைகள் மீண்டும் தனக்குள் ஒலித்ததை உணர்ந்தாள். ''தனக்கென்று பிரதம கணங்கள் ஒன்று இல்லாமல் போனதே, 'இதற்கு காரணம், அதனால் இப்படியொரு சம்பவம் நடந்தது என உணர்ந்து பிரதம கணத்தை உருவாக்கும் பணியில் இறங்கினாள்.

பார்வதி தேவி தனது கைகளில் கொஞ்சம் நீரை எடுத்து தனது உடலின் மீது தேய்த்து உருட்டினாள். கரிய மெத்தென்ற உருவம் கொழகொழுவன திரண்டு வந்தது. பிறகு தன் கணவரை போன்றே, மூன்ற கண்களையும், உடைய விநாயக புத்திரனை தான் உருவாக்கினாள். பின் உயிர் கொடுத்தாள்.

பார்வதி தேவி தனது அன்பு புத்திரனான விநாயகரை அந்தப் புரவாசலில் காவலுக்காக நிறுத்தி ''என்னரும் புதல்வனே, என்னுடைய அனுமதியின்றி யாரையும் உள்ளே நுழைய அனுமதிக்காதே'' என்று கூறி விநாயகனின் கையில் ஒரு தண்டத்தையும் கொடுத்து விட்டுச் சென்றாள். விநாயகப் பெருமான் தன் தாயின் நிமித்தம் காவல் தெய்வமாக அந்தபுரத் தில் அமர்ந்து கொண்டார்.

சில நாட்கள் சென்றது. அந்தபுரத்தில் பார்வதி தேவி நீராடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது சிவபெருமான் தம் பிரதம கணங்கோளோடு உள்ளே நுழைய முயன்றார். அங்கே வாசலில் காவலிருந்த தாயின் பிள்ளை விநாயகன் 'யாரங்கே நில் என்று' என் தாயானவள் நீராடிக் கொண்டிருப்பதால் உள்ளே போகக்

கூடாது' என்று கூறியதோடு கையிலிருந்த தண்டத்தால் அடிப்பது போல ஓங்கி சிவனை அச்சுறுத்தினார்.

அதற்கு சிவபெருமான் விநாய்கனிடம், நான் யார் என்று தெரியுமா? நான் தான் சிவன் என்று கூறி நான் அந்தப்புரத்தில் நுழைவேன் என்று நுழைய எத்தணித்தார். உடனே விநாயகன் தன் கையிலிருந்த தண்டாயுதத்தால் ஓங்கி ஓரடி அடித்து சிவனாக இருந்தாலும், யாராக இருந்தாலும் எனக்கென்ன? எனக்கு என் அன்னை இட்டக் கட்டளையை, நான் செவ்வனே செய்வேன் என்று கூறினார்.

சிவபெருமானோ மிகவும் கோபமுற்றவராக இவன் யார்? என்று தெரியாமல் கோபம் கொண்டவராக எழுந்து 'மூர்க்கத் தனமானவனே பிள்ளையே நான் யார் என்று நீ அறியவில்லையா? உள்ளே அந்தப்புரத்தில் நீராடிக் கொண்டிருக்கின்றாளே, அவளது கணவன் நான் தான். உன்னை காவலுக்கு வைத்துச் சென்றவளின் சரிபாதி'' என்றார். மீண்டும் விநாயகனுக்கு கடுங்கோபம் வந்து சிவனை தண்டத்தால் ஓங்கி அடித்தார். சிவனின் கண்களில் கோபம் கொப்பளிக்க தனது நந்தி முதலான சிவ கணங்களை அழைத்து ''அந்தச் சிறுபிள்ளையின் துடுக்குத்தனத்தால் என்னை தடுப்பதை அடக்கி, பாடம் புகுத்துங்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

சிவகணங்கள் எல்லாம் விநாயகனை மிரட்டி உருட்டிப் பார்த்தார்கள். ஆனால் பிள்ளயையார் தனது கைத்தடியால் சுழற்றி அனைவரையும் ஓட ஓட விரட்டினார். எல்லோரும் சென்று சிவனிடம் கூறி முறையிட்டார்கள். சிறு பிள்ளையான அவனை அடக்குவது அவ்வளவு எளிதாக முடியாது என்றார்கள். சிவன் அவர்களைப் பார்த்து, ''உங்களுக்கு வெட்கமாக இல்லையா? திரும்பி இங்கிருந்து சென்று அவனை ஒரு வழிப்படுத்தி விட்டு வாருங்கள்'' என்றார். மீண்டும் பிள்ளையாரிடம் சென்று, வாக்கு வாதம் செய்தார்கள். அதற்கு பிள்ளையார், ''நீங்களோ சிவனின் கணங்கள், நானோ பார்வதி தேவியின் புத்திரன்' ஆகவே சமபலம் படைத்துள்ளோம், இருவருமே போராடுவோம், வாருங்கள்.

இறுதியில் நான் தனியனக இருந்த போதிலும் அன்னையின் ஆணைக்குட்பட்டு உங்களோடு போரிடுவதால் நானே வெற்றி பெறுவேன்.'' என்றார்.

உங்களது தலைவன் 'சிவன்' என்னுடைய அன்னையின் அந்தப்புரத்தில் நுழைய வேண்டுமானால் என்னிடம் ஒன்று உத்தரவு பெற்ற பின்பு செல்ல வேண்டும், அல்லது என்னைப் போ. ..டு வென்றுஅதன்பின் செல்ல வேண்டும் என்று பிளிறினார். இதனை செவியுற்றதும் சிவன் சிந்திக்கலானார். நான் உத்தரவு பெற்று அந்தபுரத்தின் உள்ளே நுழைந்தால் பெண்ணின் கட்டளைக்கு கீழ்ப்பணிந்து சென்றது போலாகும். ஆகவே ஒரு காலும் இது நடக்காது. போர் புரிவதே உசிதம் என்றார்.

இதனை அந்தப்புரத்திலிருந்து அகக் கண்களால் பார்த்திருந்த பார்வதி தேவிக்கு உள்ளும் புறமும் மகிழ்ச்சியடைந்தது. எனது கணவனாகஇருப்பினும் தன் பாலகனிடம் பக்குவமாகப் பேசி அனுமதி பெற்று வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று தோழிகளிடம் குறைப்பட்டுக் கொண்டாள். பிறகு தோழியிடம் பார்வதி தேவி சொல்லி அனுப்பினாள். யாராக இருந்தாலும் கண்டிப்பாக உள்ளே அனுமதிக்க வேண்டாமென்று விநாயகப் பெருமானிடம் நான் கூறியதாக கூறிவிட்டு வரும்படியாக உத்தரவிட்டாள்.

விநாயகப் பெருமானுக்கு இன்னும் சற்று தாயின் உறுதுணையால் உடல் முறுக்கேறியது. தனது ஆடையை இறுக்கிக் கட்டிக் கொண்டு இரு தொடைகளையும் தட்டிக்கொண்டு என்னோடு போரிட வாருங்கள்'' என்று சிவகணங்களைக் கூவி போருக்கு அழைத்தார்.

இறுதியில் போர் மூண்டது. சிவகணங்கள் பிள்ளையாரின் பெருத்த அடியினை தாங்க முடியாமல் ஓடினர். நான்முகனும், இந்திரனும் அவரைச்சார்ந்த தேவர்களும் சிவனுக்கு உறுதுணையாக சேர்ந்து கொண்டனர். சிவபெருமான் ப்ரம்மாவை அருகில் அழைத்து, ''ப்ரம்மா நீ போய் பிள்ளையாரிடம் பவ்யமாக பேசி'' ''இனியும் போர் தொடராதவாறு வசிகரித்து வா'' என்று

உத்தரவிட்டார். பிரம்மன் பிள்ளையாரிடம் சென்றவுடனே பிரம்மனின் மீசையை பிடித்திழுத்து துன்பப்படுத்தினார். பிரம்மாவும் மற்ற தேவர்களும் பிள்ளையாரின் போருக்கு இணைத்தரமுடியாமல் ஓடி விட்டனர்.

சிவனோ மிகவும் கோபம் கொண்டு தன்னிடமுள்ள இந்திரன் போன்ற தேவர்களையும், பூதகணங்கள், பிசாசு போன்றவர்களையும் சுப்பிரமணியனையும் அனுப்பி பிள்ளையாரோடு யுத்தம் செய்திட மீண்டும் பணித்தார். இறைவியான பார்வதி தேவியோ இரண்டு சக்திகளைப் படைத்து, தனியாகப் போரிடும் விநாயகனுக்கு துணையாக நின்று போரிடச் செய்தாள். போரில் சிவகணங்கள், சுப்பிரமணியனும் தோற்கவே விரைவாக சிவனிடம் தஞ்சமடைந்தனர்.

சிவபெருமானே, '' விநாயாகப் பெருமான் மூர்க்கத்தனமாக போர் புரிந்து முகங்களை கிழித்து விடுகிறான். ஆகவே இதுபோன்ற போர் தொடர்ந்து கொண்டிருந்தால், உலக அழிவுதான் மிஞ்சும்'' என்று ஒப்பாரி வைத்தனர்.

சிவனோ முக்கண்களில் கோபம் கொப்பளிக்க எல்லாவிதப் படைகளையம் சேர்த்து ஆர்பரிக்க விநாயகனோடு போர்புரியப் புறப்பட்டார். எதிரிலே நாரதர் முற்பட்டு 'சிவனே' உலகத்தின் தலைவனே. யான் கூறுவதைச் சற்றுக் கேளும். விநாயகனோ தனது தாயின் நலன் கருதி கொடுத்த கட்டளையை நிறை வேற்றுகிறான். அப்படி பட்டவனை உங்களால் வெல்ல முடியாது. எனவே விநாயகனை ''நட்புநிலைப் பாராட்டி வசப்படுத்திக் கொள்ள முயற்சி செய்யுங்கள்'' என்றார். சிவனோ நாரதரின் வார்த்தைகளை சற்றும் பொருட்படுத்த வில்லை. போருக்குப் புறப்பட்டார்.

மகாவிஷ்ணு, சிவனை நோக்கி 'ஆதிநாதனே' அற்புத ருத்தரனே, நான் சொல்வதை ''சற்று கூர்ந்து நோக்கி, விநாயகனை வெற்றி கொள்வோம்'' என்றார். என்ன என்று கேட்டார்? சிவன் அதற்கு மகா விஷ்ணு நான் எனது சக்தியால் விநாயகனுக்கு உறுதுணையாகஇருக்கின்ற இரு சக்திகளையும் மறைக்கின்றேன்.

அத்தருணத்தில் விநாயகன் தனித்திருப்பான். அப்பொழுது நாம் வேடிக்கைக் காட்டி வீழ்த்தி விடுவோம்'' என்றர். சிவனும் சரியென்றார்.

மகா விஷ்ணு, இரு சக்திகளை சறுக்கி விழச் செய்தார். விநாயகனோ மிகவும் கோபம் கொண்டு மகா விஷ்ணுவின் மண்டையில் ஓங்கி இரும்பு உலைக்கையால் அடித்து அவனது சங்கு சக்கரத்தைப் பறித்துக் கொண்டார். மீண்டும் தனது பரசாயுதத்தால் போரிட்டார். மகா விஷ்ணுவோடு மும்முரமாக விநாயகன் போர் புரிந்து கொண்டிருக்கும் போது, சிவன் தந்திரமாக விநாயகனின் பின் சென்று கழுத்தில் பாசக் கயிற்றால் இருக்கினார். விநாயகனோ இதனை சற்றும் எதிர்பாராததால் மூர்ச்சையாகி நிலத்தின் மீது நெடுமரம் போல்சாய்ந்தார். இதைக் கண்ட போர்களம் ஒரு நிமிடம் யாதும் அறியாமல் ஸ்தம்பித்தது.

''ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்கு கொண்டாட்டம்' என்ற பழமொழிப் போல் இத்தருணத்தில் 'நாரதர்' பார்வதிதேவியிடம் மூச்சிரைக்க ஓடி சென்று அன்னையே உனது திருமேனிப் புதல்வன், உனது கணவனின் அடாதசெயலினால் சாகாமல் சரிந்து கிடக்கின்றான் என்ற பார்வதியின் கோபத்தைக் கிளறிவிட்டார்.

அதனால் பராசக்தியான, பார்வதி தேவி உடலும் உள்ளமும் கோபக்கனலால் கொப்பளிக்க பல்லாயிரக் கணக்கான சக்திகளை உண்டாக்கினாள். பின் அவைகளுக்கு கட்டளை இட்டள். 'ஏ சக்திகளே நீங்கள் எல்லோரும் சென்று என் பால கனான விநாயகனை எதிர்பவரை சுக்கு நூறாக்குங்கள். இதில் என் கணவனென்று பார்க்காமல் போரில் உக்கிரத்தை காட்டுங்கள் என்று ஆணையிட்டாள்.

இதனால் போர்க்கட்டுக் கடங்காமல் உலகமே உதிரத்தில் மிதந்தது. இதுபோன்று முடிவேயில்லாமல் போர் தொடர்ந்தால் சீவராசிகளெல்லாம் சிதைக்கப்பட்டு விடுமே என்ன செய்வது? என்று கவலையில் தோய்ந்தனர் தேவர்கள்.

எனவே நாரதரை தூதுவராக நியமித்து பராசக்தியிடம் இதற்கு முடிவுகட்ட வேண்டி விண்ணப்பித்தனர். நாரதரோ, பார்வதி

தேவியின் உக்கிரம் குறையும்படி பலவாறு போற்றி, துதி செய்து வேண்டி உலகினை இயக்குகின்ற பராசக்தியே, அன்னையே போரைநிறுத்த வேண்டி நின்னைப் பணிகின்றோம். அருள் புரிந்து உலக நலன் கருதி போரை நிறுத்திட வேண்டும்'' என்று மன்றாடி னார்கள்.

அதற்குப் பராசக்தியான, பார்வதி தேவி, எனது கட்டளை யின் பொருட்டு, எனக்காக காவல் நின்ற எனது தனயனான விநாய கனை, நீங்கள் அனைவரும் ஒன்று கூடி தர்மத்திற்கு எதிராக போர் புரிந்தது மயக்க முற செய்தது, மிகவும் வெட்கத்திற்குரியது. எனவே அதற்கு பிராயச்சித்தமாக நீங்கள் எல்லோரும் விநாயக னான எனது புத்திரனை முதலில் வணங்கிட வேண்டும். எல்லா காரியங்களையும் துவங்குவதற்கு முன்பு அவனிடம் அனுமதி பெறவேண்டும் என்று கட்டளையிட்டாள். மேலும் எனது புதல்வனான விநாயகனை என் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தும் வரை போரை நிறுத்த மாட்டேன், என்று உக்கிரமாக பார்வதி தேவி கூறினாள்.

தேவியின் திருவாக்கின் படி நடப்பதாக சிவனும், தேவர் களும் முனிவர்களும் வாக்கு தத்தம் செய்து கொண்டார்கள். உடனே போர் களத்தில் புத்வேகம் புகுந்தது போல் எல்லோரும் பரபரப்பிற்கு ஆளானார்கள். ஒரு குழுவினர், துரோணச் சலம் (கவிழ் தும்பை) என்ற மலையை சிவனருளால் கொண்டு வந்து நிறுத்தினர். இதிலுள்ள சஞ்சவி, முதலான மூலிகைகளின் வேர் காற்றினாலும், மூலிகைகளாலும் இறந்து கிடந்தவர்கள், தூங்கி எழுந்தது போல எழுச்சியுடன் எழுந்தனர். எங்கும் அழுது கிடந்தவர்கள் விழுந்துவிட்டதுபோல் எழுந்து அகமகிழ ஒருவரை ஒருவர் ஆர்ப்பரித்து தழுவிக் கொண்டு மகிழ்ந்தனர். எங்கும் மகிழ்ச்சியின் மிடுக்குகள் வானத்தையும் பூமியையும் மிரட்சி யடைச் செய்தது..

சிவனோ, மூர்ச்சையாகிக் கிடந்த விநாயகனின் அருகில் சென்று பாச மிகுதியால் மெல்லமேனியை வருடலானார் விநாயகனும் லேசாக கண் விழித்துப் பார்த்ததும், அருகில் சிவன்

நிற்பதை பார்த்ததும், மிகவும் ஆவேசமாக எங்கே எனது இரும்புலிக்கை என்று கர்ஜனையிட்டு எழுந்து தண்டத்தை தேடினார். உடனே அங்கு குழுமியிருந்த தேவர்களும், முனிவர்களும் நடந்ததைக் கூறி விநாயகனைச் சமாதானப் படுத்தினர். பிறகு அவரை ஆசுவாசப்படுத்தி அபிஷேக ஆராதனைகளை செய்தனர், பலவகை மந்திரங்காளல் துதி பாடி மகிழ் வித்தனர். அதன்பின் விநாயகப் பெருமானை கணங்களுக்கெல்லலாம் தலைவனாக இருக்கும் படி அனைவரும் வேண்டி, சிவனால் பட்டாபிஷேகம் செய்து அவரின்தாள் பணிந்தனர். மிக மிடுக்கான ஆடைகளையும் அணிகலன்களையும், அணிவித்து அத்துடன் அவர் போரிலே வென்ற சங்கு, சக்ரம், சூலம் போன்றவற்றை சூட்டி, பார்வதி தேவியிடம் அழைத்துச் சென்று நிறுத்தினார்கள். பார்வதி தேவியும் மனம் மகிழ்ந்து, உக்கரம் தணிந்து போரை நிறுத்தி பாரை காத்து நின்றாள்.

முனிவர்களும், ரிஷிகளும், தேவர்களும், ஞானிகளும், சித்தர்களும், புடைசூழ சிவனை அழைத்து வந்து அவரது மடியின் மீது விநாயகனை அமர்த்தினர். சிவபெருமான், விநாயகனைப் பார்த்து தாயினால் உருவாக்கப்பட்ட நீ இனி என் பிள்ளை தான் என்று உச்சி முகர்ந்தார். விநாயகனும் தந்தையே பிறந்தது முதல் தாயையே கண்டு வந்ததால், தந்தையராகிய தங்களுக்கு நான் நிறைய அவமரியாதை செய்துவிட்டேன், மன்னித்து விடுங்கள்?'' என்றார். சிவனும், சிறியவர் தவற்றை பெரியவர் பொறுப்பது தான் பெருமை என்று வாழ்த்தினார்.

சிவபெருமான், அருகில் கூடி நின்ற முப்பத்து முக்கோடி தேவர்களையும் ஞானிகளையும், பக்தர்களையும் பார்த்து, உலகத்தார்கள் முதலில் என்னை பூசிப்பதற்கு முன்பாக, உபவாசம் இருப்பதற்கு முன்பாக, விநாயகனை தான் முதலில் பூசிக்க வேண்டும். அதன்பின் என்னை எவ்வாறெல்லாம் வழிபடுகிறீர்களோ அதுபோலவே விநாயகனையும் ஆத்ம பூர்வமாக வழி பட வேண்டும் என்று கூறினார். விநாயகனை மதியாமலும், துதியாமலும், வேறு பூசைகளெல்லாம் செய்

தாலும் காரியங்கள் சித்தி பெறாது. ஆகவே 'விக்ன விநாயகனான' தடைகளை நீக்கும் தலைவனான "கணபதியை முதலில் கருத்தில் வைத்து காரியத்தில் வெற்றி பெறுவீர்களாக" என சிவனும், பார்வதியும் வாழ்த்துக் கூறி செல்வ வளங்களை அருளினார்கள். இக்கதை சிவமகா புராணத்தில் வருகின்ற விநாயகன் பிறந்த கதைப் பற்றி பேசும் தத்துவக் கதையாகும்.

விநாயகனின் பிறந்த வரலாற்றை 'மத்ஸ்ய புராணத்தில் சற்று வேறுபடுத்தி காட்டுகிறது. அதுயாதெனில் அந்தபுரத்தில் பார்வதி தேவியார் தோழிகளோடு நீராடும் போது தன்னுடைய சரீரத்தில் கங்கை நீர் கலவையையும், மற்றும் எண்ணெயையும் சேர்த்து, குழைத்தாள். அப்போது கொழ கொழப்பாக மனித உருவம் திரண்டு வந்தது. அதற்கு உயிர் கொடுத்து விநாயகனாக உருபெற செய்தார் என்கிறது. இப்புராணத்தில் மேலும் பார்வதி தேவி குளிக்கச் செல்லும் பொழுது தனக்கென்று ஒரு காவல் தெய்வம் வேண்டுமென்று விரும்பினாள். ஆகவே குளியலுக்கு பயன் படுத்தும் 'மஞ்சளை குழைத்து' அதில் அழகிய உருவம் அமைத்து, உயிர்கொடுத்து உத்தம விநாயகனை உருவாக்கினாள் என்ற வரலாறும் உண்டு. இதனால் தான் எக்காரியத்தை துவங்கும் முன்பு 'மஞ்சளில்' பிள்ளையாரை பிடித்து வைத்து வழிப்படும் வழக்கம் இன்றும் தொடர்கிறது.



விநாயகனைப் பற்றிய கதைகள் ஸ்கந்த புராணம், வராக புராணம், லிங்க புராணம் போன்ற

அநேக புராணங்களில் பல்வேறு கதைகளும், அற்புத சக்தியால் அருளியதும் உள்ளது. விநாயகனது பல்வேறு வடிவங்களும் அதற் கேற்றது போல சித்தரிக்கப் பட்டுள்ளது. இவைகளெல்லாம் விநாயகனின் அவதாரக் கதைகளென்று அரும் செய்திகளாக்கப் பட்டுள்ளது.

## யானை முகம்

விநாயகனின் முகம் யானை முகமாக காட்சியளிப்பது ஏன்? என்ற ஐய வினாவிற்கு 'சிவபுராணம்' பதிலளிக்கிறது.

பார்வதிதேவி மிகவும் நேசத்தோடு உணர்ச்சி பெருக்குடன் அழகாக மனித உருவுடனே விநாயகனை உருவாக்கி மகிழ்ந்தாள். ஆனால் சிவகணங்களுடன் நடந்த போரில் விநாயகனின் தலையானது வெட்டுப்பட்டு தடம் புரண்டு போயிற்று என்று 'சிவ புராணம்' கூறுகிறது.

மேற்சொன்ன ''சிவ மகா புராணத்தில்'' சொன்னவாறு பார்வதிதேவியின் புத்திரனான விநாயகனுக்கு இரு சக்திகளை உறுதுணையாக வழங்கி போர்க்கு துணை செய்தாள். இதனால் சிவகணங்களோடு வெந்தணல் வீசிட போர் புரிந்தார் விநாயகப் பெருமான். போரின் உக்கிர நிலையில் சிவனுக்கு உறுதுணையாக நின்ற விஷ்ணு, தனது மாயச் சக்தியால், விநாயகனோடு இருந்த இரு சக்திகளையும் மறைத்து விட்டார். அப்போது விநாயகப் பெருமான் சற்று துவண்டு விட, அத்தருணத்தில் விநாயகனின் தலையை துண்டித்து விட்டார்.

பார்வதிதேவி விநாயகனின் தலையை துண்டித்து விட்டதை யறிந்து மிகுந்த கோபம் கொண்டு ஆயிரக்கணக்கான சக்திகளைப் படைத்து, அச்சக்திகளின் உதவியால் தேவர்களையும், முனிவர் களையும் அழிக்கத் தொடங்கினாள். இதனைத் தாங்க முடியாத முனிவர்களும், தேவர்களும் பயந்து நடுங்கி பார்வதி தேவியை சாந்தமாகி சரீரத்தை காத்து, மன்னித்தருளம் படி வேண்டி நின்றனர். ஆனால் பார்வதி தேவியோ சற்றும் மனமிரங்காமல்,

தேவர்களை நோக்கி எனது மைந்தன் விநாயகன் உயிருடன், வந்தாலொழிய நான் எனது கோபத்தை நிறுத்த மாட்டேன், என்று உறுதிபட கூறிவிட்டாள்.

இதனை அங்கிருந்த கண்ணுற்ற சிவபெருமான் தனது துணை களாக விளங்கிய படைகளையும், கணங்களையும் அழைத்தார். நீங்கள் எல்லோரும் வடக்குத்திசை நோக்கி பயணம் செய்யுங்கள். அவ்வாறு பயணம் செல்லுகையில், முதன் முதலில் எந்த ஒரு உயிர் ஜீவராசி உங்கள் கண்களின் முன்னே தெரிகிறதோ, அந்த ஜீவராசியின் தலையைக் கொய்து வரும்படி உத்திரவிட்டார்.

அதன்படியே சிவ கணங்கள் வடக்கு நோக்கி பயணத்தைத் துவக்கியது. அப்போது அவர்களின் எதிரே ஒற்றை 'தந்தம்' மட்டுமுள்ள யானை ஒன்று வந்தது. உடனே சிவகணங்கள் அதன்தலையைக் கொய்தனர். அதனை அப்படியே சிவனிடம் கொண்டு வந்து கொடுத்தனர்.சிவன் அதைப் பெற்று, உடனடி யாக தலைத் துண்டிக்கப்பட்டிருந்த விநாயகனின் உடலில் பொருத்தி உயிர் பெறச் செய்தார். பிறகு விநாயகனைப் பலவாறு போற்றி அவரை தனது பூத கணங்களுக்கெல்லாம் தலைவனாக்கி மகிழ்ந்தார். பார்வதி தேவியும் தனது மகனைக் கண்டு மகிழ்ந் தாள். போரும், புலம்பலும் நின்று ஆனந்த ஆறு பெருக்கெடுத்து ஓடியது. தேவர்கள், முனிவர்கள், ரிஷிகள், மற்ற யோகிகளும் அனைவரும் சிவபார்வதி, புத்திரன் விநாயகனின் தரிசனம் பெற்று அகம் மகிழ்ந்தார்கள்.

விநாயகனைப் பற்றி 'சிவ மகா புராணத்திலும்' சிவ புராணத் திலும் சில அடிப்படை தத்துவங்களைக் கொண்டு பிறந்தக் கதையை போற்றுகின்றன. இது போன்றே விநாயகனின் அவதாரத்தைப் பற்றி அபிஷேகக் கதைகளும், காட்சிகளும், உருவங்களும், உருவாக்கப் பட்டுள்ளது.

விநாயகனின் புராணக் கதை ஒரு கற்பனைப் படைப்பாக இருக்கலாம், அல்லது இந்து சமயத்தின் நன்னெறி வாழ்க்கைக் காக ஒரு கதா நாயகனாகவும் உற்பத்தி செய்திருக்கலாம்.

ஆஸ்திக வாதிகளுக்கு விநாயகன், துன்பங்களை நீக்கி துணை வருபவனாகவும், தத்துவ ஞானியாகவும், தனக்கு வந்த பிள்ளை யாகவும் ஐந்தறிவும், ஆறறிவும் கலந்த மெய்ஞானச் சுடராகவும் காட்சியளிக்கின்றான். தன்னையும் தன் குடும்பத்தையும், காக்கும், முதல்வனாகவும், மூர்ச்சை அளித்து குலத்தைக் காக்கும், குலதெய்வமாகவும், நல தெய்வமாகவும் இருக்கின்றான். வங்கக் கடலலைப்போல் சங்கடம் தொடர்வதே வாழ்க்கை, அவ்வாழ்க் கையில் சங்கடச் சதுர்த்தியின் நாயகனாக நின்று வாழ்க்கையை ஆகாயமளவு உயர்வடைய வைக்கின்றான். இதுபோன்றுநிறைய காரிய காரணத்திற்கும், இந்து சமய ஆஸ்திகர்களுக்கும், பக்திகளும், முக்தர்களும் விநாயகன், ஞான விளக்கொளியாக வாழ்வில் வழிகாட்டுகிறான்.

ஆகவே முழு முதற் கடவுள் 'விக்னேஸ்வரன்' சங்கடங்களை களைகின்ற சாத்வீக ஞானி, வணங்குபவனுக்கு இணங்கி வருபவன். தலைகணம் (Ego) கொண்டவரை, தன் தலைகணத்தால் (யானைத்தலை) நின்று நோக்கி, நிலை குலையச் செய்பவன், ஆனை முகத்தான், 'ஓம்' என்ற முகத்தான்.

பக்திநெறியாளனுக்கு எப்போதும் ஆன்மீகத்தில் சந்தேக மில்லை. ஆனால் அஞ்ஞானத்தால் உழன்று, விஞ்ஞானத்திலும், மெய்ஞானத்திலும் மோதி முகக் களையை இழந்து கொண்டி ருப்பவர்களுக்கு, விஞ்ஞானப் புதிராக முன்னோடியாக விநாயனின் அவதாரம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மறை பொருளாக புதைந்துள்ளது. அதனை எனது பல்லாண்டு யோக, ஞான சாதனையால் கிடைத்த சித்திகளாக, சித்தர் பெருமக்களின் உள் உந்துதல்களால் தருகிறேன். இத்தகைய விஞ்ஞான மறை பொருளை இந்து சமயத்தின் வாயிலாக உலக நலன் கருதி எழுதுகின்றேன். இதுவரை எந்நூலிலும் வெளிவராத எனது ஆத்ம அனுபவ ஞானங்களாகும். இனி பார்ப்போம்.

***



# விநாயகன் கதைக்குள் விஞ்ஞான புதையல்கள்!

உலக நாடுகளுக்கிடையே 'இந்திய நாடு' எப்போதும் தனித்துப் பொன்னொளி வீசிக் கொண்டிருப்பது அதற்க்கே உரிய தனி பாரம்பரிய குணம், கலாச்சாரம், பண்பாடு, நாகரீகம், வாழ்க்கை நடைமுறை, மருத்துவ முறை, கலை நுட்பங்கள், ஆன்மீகச் செல்வங்கள் என சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால் இவைகளெல்லாம் பிறநாடுகளிலும் அளவில்லாமல் கொட்டிக் கிடக்கிறது. இருப்பினும் அது தனது சுய நலத்தின் பொருட்டே பிற, நாடுகள் பயன்படுத்திக் கொள்கிறது.

இந்திய நாடோ, எல்லாவற்றிற்கும் மேலாக பல்லாயிர மாண்டுகளுக்கு முன்பிருந்தே, சுயநலம் பேணாமல் மனித நேயம், சகோதரத்துவம், உலக உயிர்களின் மீது இறக்கம், தன்னைப் போலவே பிற உயிர்களையும் நேசிக்கும் உயர்ந்த பண்பு, உலக நேயத்திற்குப் பொதுமறை படைத்த திறன், இது போன்று மேலான உயிர் நாடிகளையே ஆணிவேராக பண்டைய காலந் தொட்டே பேணி வருகிறது. ஆகையால், இன்றும் இதனை எந்த ஒரு தீய சக்தியாலும் அசைக்க முடியாமல் இன்னமும் பொன்னொளி, வீசி புதுயுகத்திற்கு தன்னை ஆயத்தப் படுத்திக் கொள்கிறது.

கலியுக காலமாதலால் சில நேரங்களில் கருமேகங்களால் பொன்னொளி மங்குவது போல் தோன்றினாலும், அவைகள் வேரூன்றுவதில்லை. ஆன்மீக வேகக் காற்று வீசி வேறு திசையில் சென்று விடுகிறது. மேலும் தீய சக்திகள் விட்டவனையே, கட்டிப் பிடித்து காலனுக்கு இரையாக்கி விடுகிறது. இவைகள் கண் கூடாக காணுகின்ற உண்மைகளாகும்.

முன்னோர்களின் தத்துவங்களையெல்லாம் முச்சந்திக்குக் கொண்டு வந்து, நாசூக்காக பேசி நாலுகாசு சம்பாதிக்க தெரிந்து கொண்டவர்கள் தான் நாத்திகவாதிகள். மேடையில் பேசுவார்கள். பின் ஆடையை இறுக்கிக் கட்டிக் கொண்டு ஆஸ்திக வாதிகளின் கால்களின் அந்தரங்கத்தில் வீழ்ந்து வணங்குவார்கள். அத்தகைய கொள்கை பிடிப்பில்லா கோமாளிகளைப் பற்றி கோவிலுக்குள் உள்ள ஆண்டவன் கவலைப் படுவதேயில்லை.

'ஆட்டை' அம்மன் பெயரால் காவு கொடுத்துவிட்டு வீட்டை கறிச்சோறால் காப்பாற்றும் மூட பக்தனைப் போல், நாட்டு மக்களை நஞ்சு வார்த்தையால் சீரழித்து விட்டு, தன் வீட்டு மக்களுக்காக விதவிதமான சொத்துக்களை சேர்க்கும் அரக்கர் களின் மத்தியில் அகப்பட்டு அல்லல்படும் அப்பாவி மக்களை தான் இன்றைய ஆன்மீகம் விழிப்படையச் செய்ய வேண்டும்.

புதியதாக ஏதேனுமொன்றைக் கண்டுபிடிக்க வேண்டு மானால் அதற்கு முன்னோடியாக ஏதேனும் ஒரு அடிப்படை இருக்க வேண்டும். விமானத்தைக் கண்டு பிடித்த 'ரைட் சகோதரர் கள்' அதனை கண்டு பிடிப்பதற்கு சில மாதங்களுக்கு முன்னதாக தன்னுடைய கனவில் ஆகாயத்தில் பறப்பதாகக் கனவு கண்டார் கள். அதனுடைய விளைவு ஆகாய விமானத்தைக் கண்டு பிடித்தார்கள்.

சமீபத்தில் 'ஜுரோசிக் பார்க்' திரைப்படம் மிருகத்தை அடிப்படையாக கொண்ட ஆங்கிலப் படமானது. உலகம் முழுவதிலும் ஒரு சக்கை போடு போட்டது. அப்படத்தின் கதையின் மையமானது. புதைப் பொருள் கண்டு பிடிப்பில் ஈடுபட்டிருந்தவர்கள் சிறிய அளவில் வேறுபட்ட வித்தியாசமான விலங்கின் அனுக்கூறு ஒன்றை கண்டுபிடிப்பார்கள். அதனைக் கொண்டு முறைப்படுத்தி உண்மையான மிருகத்தை உருவாக்கி விடுவார்கள். அந்த மிருகத்தின் சாகசம் தான் படத்தின் கதை. இது ஒரு விஞ்ஞான யுக்தி தான். இருந்த போதிலும் பல்வேறு கண்டுபிடிப்புகளுக்கு வழிச் செய்கிறது.

இதுபோன்று தான் புராணக் கதைகளும் இதிகாசங்களும், பலதரப்பட்ட படைப்புகளுக்கு விஞ்ஞான யுக்திகளுக்கும் தூண்டுதல் அளிக்கும். மூலாதாரமாக இருக்கின்றன. கதைகளின் தன்மைகளையும், இடங்களையும் கொண்டு காலத்தின் ஆழத்தை அறிந்து கொள்ள முடியும்.

விநாயகனின் கதைக்குள் பொதிந்து கிடக்கின்ற விஞ்ஞான மெய்ஞான, நாத்திக கருத்துக்களை தெளிவுபட தெரிந்து கொண்டால் மூலத்தை அறிந்து கொள்ளலாம். முப்பொழுதும் தப்பால் வருகின்ற விஞ்ஞான வளர்ச்சிகளுக்கு அடிகோலுவதாக அமைகின்றன. இனி மீண்டும் விநாயகன் கதைக்குள் செல்வோம்.

பார்வதி தேவி அந்தபுரத்தில் நீராடும் பொழுது தன்னுடலில் கங்கை நீரையும், எண்ணெயையும் கலந்து வழித்தெடுத்து, அதற்கு உருவம் கொடுத்து உயிர் கொடுத்து அழகிய விநாயகனை உருவாக்கினாள். இதில் சிவபெருமானின் பங்கில்லை. தன்னிச்சையாக தனக்காக உருவாக்கினாள் என்பது புராணக்கதை. இது கற்பனை கதையாக இருப்பினும் ஆக்க பூர்வமான கற்பனைக்கு வித்திட்டுள்ளது. நாத்திக வாதிகள் தனித்த ஒருவரால் ஒரு உயிரியை உருவாக்க முடியாது என்று கூறலாம்.

ஆனால் இன்று விஞ்ஞானிகள் மெய்ப்பித்திருக்கும் 'குளோனிங்' (Cluoning) முறையில் ஆணின், அல்லது பெண்ணின் திசு செல்லிருந்து மூலத்தைப் பிரித்து அவர்களைப் போல உருவாக்கியுள்ளனர். இதில் ஆண், பெண் புணர்ச்சி விதியே இல்லை. ஆணிலிருந்து ஆணையும், பெண்ணிலிருந்து பெண்ணையும் உருவாக்குகிறார்கள். இன்னும் சில ஆண்டுகளில் ஆண் திசு அணுவிலிருந்து பெண்ணையும், பெண் திசு அணுவிலிருந்து ஆணையும் உருவாக்கு நிலைக்கு விஞ்ஞானிகள் வந்து விடுவார்கள்.

இந்த குளோனிங் வித்தையை விநாயகனின் படைப்பின் வாயிலாக அன்றே சொன்னது இந்து சமயம். இதை சொன்னவர்கள் மெய்ஞானிகள் விஞ்ஞானிகளுக்கு 'குளோனிங்' முறை சாத்தியமாகும் பொழுது, ஆன்மீக மெய்ஞானிகளுக்கு விநாயகனின் கதை சாத்தியமாகிறது.

பார்வதி தேவி விநாயகனுக்கு உறுதுணையாக இரு சக்திகளை படைத்துப் போருக்கு பக்கபலமாக அனுப்புகிறாள். இங்கு உளவியல் கோட்பாடுகள் உருவாக்கப்பட்டுள்ளன.

ஒரு தாய் குழந்தையை பெற்றெடுத்து வளர்க்கும் பொழுது வாழ்க்கையில் உலக மனிதர்களோடு போராட இரு சக்திகளை தருகிறாள். ஒன்று மனோ சக்தி. இரண்டாவது அறிவின் சக்தி. இவையிரண்டையும் கொண்டு தான் அக்குழந்தை வாழ்வில் வெற்றி பெற வேண்டும் என்ற உளவியல் தத்துவத்தை விநாயகர் புராணம் தருகிறது. அதுபோலவே தான் தாயின் அன்பு பிள்ளையாக இருப்பதால் என்னை யாரும் வெல்ல முடியாது என்ற உளவியல் தத்துவத்தின் அடிப்படையில் விநாயகனின் கதையில் சொல்லப்படுகிறது.

ஒரு குழந்தை தாயின் அரவணைப்பில், கட்டுப்பாட்டில் வளருக்கும் பொழுது அக்குழந்தை மன ரீதியாலும், உடல் ரீதியாகவும் ஆரோக்கியமாக உற்சாகமாக வளர்ச்சி பெறுகிறது. அதுவே தந்தை மட்டுமேயிருந்து அவனால் வளர்க்கப்படும் குழந்தை ஏதோ ஒன்றை இழந்ததைப் போல காணப்படும் உளவியல் ரீதியில் ஏதேனும் ஒரு குறைபாடுகள் இருக்கும்.

விநாயகர் புராணக் கதையால் தாயின் வளர்ப்பின் முக்கியத் துவத்தை எடுத்து காட்டுகின்ற உளவியல் கதையாக இருக்கிறது.

எவ்வளவு தான் சக்தி வாய்ந்தவராக இருப்பினும், அல்லது எத்தனையோ அதிகாரங்களை பெற்றவராக இருப்பினும், அல்லது மிகுந்த நெருங்கிய உறவாக இருப்பினும், அல்லது மிகவும் புகழ் பெற்றவராக இருப்பினும், தவறான வழியில் சென்றால் தனயனே தண்டிப்பார்கள். மேலும் நீதியும், காவலும் நெறிபட உண்மையாக இருக்க வேண்டும் என்பதை விநாயகர் கதையால் சமூக நீதியும், குடும்ப நீதியையும் விளக்குவதாக இருக்கிறது.

அந்தப்புரத்தில் நீராடுமிடத்தில் யாரும் நுழையாமலிருக்க பார்வதி தேவி விநாயகனைக் காவல் காரணாக அமர்த்துகிறாள்.

தாயின் கட்டளையை எவ்வளவு துன்பம் வந்த போதும் பின் வாங்காமல் தன் தலையையே இழந்த போதும், வழுவாமல் போரிட்டது பெண்மையையும், தாய்மையும் உயர்த்திட வேண்டி 'பெண்மைக்கே' விநாயகனின் கதை பெருமை சேர்க்கிறத. இங்கு ஆணுக்கு பெண் சளைத்தவளில்லை. தேவையேற்பட்டால் போராடி வெற்றி பெறவும் முனைவோம் என்று பெண்ணித் திற்கே அறை கூவல் விடுவதாக பார்வதி தேவியின் பங்குள்ளது சிறப்பம்சமாகும்.

மருத்துவ அறிவியலுக்கும் மாசற்ற உதாரணமாக விநாயகனின் கதை உள்ளது. பல்லாயிரமாண்டுகளுக்கு முன்பாகவே அறிவியலின் முனைப்பைக் கதைகளில் கலந்து வைத்தனர் முனிவர்கள்.

விநாயகனின் கதையில், போரில் தலையை துண்டித்தனர்; எதிரிகளால் நிலை குலைந்து விநாயகன் சாய்ந்தார். பிறகு சிவன் தனது பூத கணங்களை அழைத்து, ''வடக்கு நோக்கிச் செல்லுங்கள்; முதலில் எதிர்படும் ஜீவராசியின் தலையைத் துண்டித்துக் கொண்டு வாருங்கள்'' என்று கட்டளை இட்டார். அதுபோலவே வடக்கு திசையில் பயணப்பட்டனர் பூத கணங்கள். அப்பொழுது முதன் முதலில் ஒற்றை தந்தமுள்ள யானை ஒன்று எதிர் வந்தது. உடனே சிவகணங்கள் அதனுடைய தலையை வெட்டிக் கொண்டு வந்து சிவனிடம் கொடுத்தனர். சிவனோ, தலை துண்டிக்கப் பட்டிருந்த விநாயகனின் உடலின் மீது 'யானைத் தலையை பொருத்தித் தடவி கொடுத்தார். உடனே உயிர்ப் பெற்று விநாயகன் எழுந்தார். இது விநாயக புராணக் கதையாகும்.

இக்கதையானது, நவீன மருத்துவ இயலில் மாற்று உறுப்புகளைப் பொருத்தி உயிர்களைக் காப்பாற்றும் யுக்திக்கு, வித்திட்டதென்று அது போன்று அறுவை சிகிச்சையின் அஸ்திவாரமாகவும் உள்ளதெனக் கொள்ளலாம். ஆனால் இவற்றை விஞ்ஞானக் கூறு ஏற்றுக் கொள்ளாது.

இது எப்படியெனில் நம் நாட்டில் காடு, கழனி, பட்டி தொட்டிகளில் எல்லாம் விளைந்து கிடைக்கும் 'கீழ்காய் நெல்லி'

என்னும் மூலிகைச் செடியாகும். இதன் இலைகளின் அடியில் சிறிய அளவில் நெல்லிகாய் போன்று காய்கள் வரிசையாக அழகாக இருக்கும். அதனால் இதனை சித்தர்கள் 'கீழ்காய் நெல்லி' என்று அழைத்தார்கள். இந்த மூலிகை மஞ்சள் காமாலை, நோயை குணப்படுத்தும் ஆற்றல் மிக்கது. எத்தனை விதமான கொடுமையான மஞ்சள் காமாலை நோயாக இருந்தாலும். அதனை பே ்கும் ஆற்றல் மிக்க மூலிகையாகும். இதன் மருத்துவ தன்மையை அறிந்தவர்கள் நம் பண்டைய முன்னோர்கள். இதனை காலம் காலமாக பயன்படுத்தியும் வந்துள்ளனர்.

கீழா நெல்லியை வளர்ந்து வரும் நவீன விஞ்ஞான வளர்ச்சி பெற்ற நாடுகள் ஆய்வகத்தில் இதன் தன்மையை அறிந்தனர். அதன் பின் நம்முடைய நாட்டிலிருந்து மூலிகையை இறக்குமதி செய்துள்ளனர். கீழாநெல்லி மூலக் கூறுகளை திரவ நிலைக்கு பக்குவப்படுத்தினர். பிறகு நவீன ஆங்கிலப் பெயர்களை மருந்துகளுக்கிட்டு உலகம் முழுவதும் விற்பனை செய்து தன்னிலையை உயர்த்திக் கொண்டு வருகின்றனர். இதனோடு நில்லாமல் 'கீழாநெல்லி' போன்ற மூலிகைகளில் வேறு எந்த நாடுகளும் பயன்படுத்தக் கூடாது என காப்புரிமையை செய்துக் கொண்டும் உள்ளனர்.

கீழா நெல்லி மூலிகையின் மருத்துவ குணத்தை பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே அறிந்தவர்கள், இந்தியர்களாகிய நாம், மஞ்சள் காமாலைக்குப் பயன்படுத்தி வெற்றியும் கண்டுள்ளோம். அதன் நுட்பத்தை மேலைநாடுகள் நம்மிடமிருந்து பெற்றுக் கொண்டு, நம் மூலிகைகளையே இறக்குமதியும் செய்து கொண்டு பிறகு நம்மையே காப்புரிமையால் ஏய்கின்றனர். இதுதான் நிதர்சன உண்மையாகும்.

இதுபோலவே தான் நம்முடைய புராணக் கதைகளிலும், இதிகாசங்களிலும், உபநிடதங்களிலும், வேதங்களிலுமுள்ள மூல உக்திகளை நுட்பமாகப் புரிந்துக் கொண்டு அத்னை நவீனமாக்கி தாங்கள் வெற்றி பெற்றதாக கண்டு பிடித்ததாகத் தொலை தொடர்பு சாதனங்களால் மக்களை மயக்குகின்றனர்.

புராணங்களில் புஷ்ப விமானத்தையும், கருட விமானத்தையும் முதலில் பறக்க வைத்தது நாம் தான். தொலைக் காட்சிகளுக்கு முன்னோடியாக, வெற்றிலையிலும், கைகளிலும் மைகளைத் தடவி தொலைக்காட்சிகளைப் போல் புராணங்களில் புதுமைகளுக்கு வித்திட்டது நாம் தான்.

அதுபோலவே விநாயகனின் தலையை மாற்றிப் பொருத்தி, மாற்று உறுப்பு மருத்துவ சிகிச்சைக்கு புராணத்தின் வாயிலாக வித்திட்டதும் நாம் தான்.

சிவபெருமான் தனது கணங்களை நோக்கி, கிழக்கு, மேற்கு, தெற்கு போன்ற திசைகளை நோக்கி போகச் சொல்லாமல், ஏன்? வடக்கு திசை நோக்கி போகச் சொன்னார் என்பதில் தான் சில நுணுங்கங்கள் உள்ளன.

யோகமும், ஞானமும், நல்லறிவும் பெற வேண்டுமானால் வடக்கு திசை நோக்கித் தான் முகமிருக்கும் படி தியானம் செய்ய வேண்டும். யோக தவம் செய்ய வேண்டும். ஏனெனில் வடக்குத் திசையில் தான் மிகவுயர்ந்த மலையான கைலாய மலை (இமய மலை) உள்ளது. அங்கு தான் காலங்காலமாக ரிஷிகளெல்லாம் தவம் செய்து வருகின்றனர். ஆகவே வடக்குத் திசை நோக்கி உட்கார்ந்தால் ரிஷிகளின் அருள் ஆசிகள் கிடைக்குமென்று யோக தத்துவங்கள் கூறுகின்றன.

நவீன காந்த சிகிச்சை (Magnetic Therophy) முறையின் தத்துவப் படி மனிதனின் நாபி (Noval) பகுதியிற்கு மேலுள்ள பாகம் வடக்கு பாகமும், நாபிக்கு கீழுள்ள பாகம் தெற்கு பாகத்தையும் குறிக்கும். அதன்படியே காந்த சிகிச்சையால், காந்தங்களின் திசையை பயன்படுத்துகின்றனர். ஆகவே இதுவும் ஒரு மருத்துவ அறிவியலாகும்.

நமது யோக விஞ்ஞானிகள் உறங்கும் பொழுது வடக்குப் பக்கம் தலை வைத்து உறங்கக் கூடாது. என வகுத்து வைத்தனர். ஏனெனில் பூமியின் வடக்கு திசையும், தலையின் காந்த சிகிச்சையின் படி வடக்கு திசையும் உறங்கும் போது ஒன்றை ஒன்று

எதிர்ப்பதால், மூளையிலுள்ள இரத்த நாளாங்களும், இரத்த அணுக்களும் ஒன்றை ஒன்ற எதிர் கொள்கின்றன. இது போலவே தொடர்ந்து நீண்ட நாட்கள் வடக்கு திசையில் தலைவைத்து உறங்கும் பொழுது மூளை அயர்ச்சி நோய்கள், தலைவலி, ஒற்றை தலைவலி, மயக்கம் போன்ற நோய்களை உண்டாக்கும். அதுபோன்று மூலிகை தாவரங்களிலும், பூமியின் கீழ் நான்கு திசைகளிலும் வேர்விட்டு வளர்கின்றது. இவ்வேர்களில் கிழக்கு, மேற்கு, தெற்கு இத்திசையில் செல்லும் வேர்களைக் காட்டிலும் வடக்கு திசையில் செல்லும் வேரின் அணுக்களில் பிறதிசை வேரிலுள்ளதைக் காட்டிலும், அதிகம் சக்தி வாய்ந்ததாக இருக் கிறது. அதன் காரணமாகத் தான் சித்தர்கள் மூலிகை வித்தைக்கும், மந்திர வித்தைக்கும், மூலிகைகளுக்கு மஞ்சள் காப்பு கட்டி வடக்குத் திசை செல்லும் வேரை எடுத்து குளிசம் (தாயத்து) காட்டி னார்கள். பல்வேறு நோய்களுக்கு பயன்படுத்தி வெற்றி கண்டார்கள்.

இதனால் தான் விநாயகர் புராணத்தில் சிவ பெருமான் தனது கணங்களை நோக்கி வடக்கு திசை நோக்கி செல்லுங்கள் என்று உத்தரவிட்டது ஒரு விஞ்ஞான நுட்பத்தின் மகத்துவத்தை மெய்ஞானத்தில் உணர்த்துவதாக இருக்கிறது.

சிவ கணங்கள் வடக்கு நோக்கி செல்லும் பொழுது முதலில் கண்களில் பட்டது 'யானை' என்ற மிருகம் தான். இதனை ஏன்? குறிப்பிட்டார்கள் என்றால், யானையைப் போன்ற பலசாலியு மில்லை, அதனைப் போன்று ஒரு 'தலைகணம்' பிடித்து நாச மாக்கும் விலங்கினமுமில்லை. நன்மைக்கு நன்மையாகவும் தீமைக்கு தீமையானதாகவும் உள்ளது.

யோகதவத்தில் வடக்கு திசையில் நோக்கி தியானம் செய்யும் பொழுது முதலில் மிருக புத்திகளும் தானென்ற அகம் பாவமும் யோக சாதகர்களுக்கு வரும். அவற்றைத் தலையிலிருந்து நீக்கி விட்டால் ஞான நிலையை அடையலாம் என்றொரு ஞான தத்துவத்தை 'விநாயக புராணம்' சூட்சமாக தெரிவிக்கிறது. அதனால் தான் யானையின் தலை வெட்டுப்பட்டு விநாயகனின்

ஞான உடலில் இணைப்பதாக விநாயக புராணத்தில் உள்ளது. எனவே மிருக உடலாக இருப்பினும் கீழான மிருக இச்சை களையும், அகம்பாவத்தையும், தலையிலிருந்த விட்டொழித்தால் ஞான உடலாக மாற்றிக் கொள்ளலாம் என்ற தத்தவமேயாகும்.

பொறுப்புமிக்க ஒரு குடும்பத்தில் உள்ள ஒரு ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர். தலை கனம் கொள்ளாமல் விட்டுக் கொடுத்தால் அதன் மூலம் பிள்ளைகள் பாதிக்கப் படமாட்டார்கள். அதன் வாயிலாக சமுதாயம் பாதிக்காது என்ற ஒரு உளவியல் (Psychology) நோக்கில் பார்வதி, பரமசிவன், விநாயகன் ஆகிய மூன்று கதாபாத்திரத்தின் வாயிலாக, 'விநாய கன் புராணம்' விளக்குகிறது. தனி மனிதர்களின் கோபாதங்களை மூன்றாவது நபர்கள் பகடக் காய்களாக பயன்படுத்தி ஒரு போரையோ, வன்மைகளையோ தூண்டி விட்டு வேடிக்கை பார்க்கும் மனிதராக நாரதரின் கதாபாத்திரம் உருவாக்கப் பட்டுள்ளது. ஒரு தேவையற்ற போரினால் எவ்வளவு உயிர் சேதங்களும், உலக இயக்கங்களும் பொருளாதாரமும் பாதிக்கும் என்றொரு அறிவியல் உண்மையை பல்லாயிரமாண்டுகளுக்கு முன்பே முனிவர்கள் முத்தாய்ப்பாக விநாயக புராணத்தில் கூறியுள்ளனர்.

விநாயகன் கதைக்குள் ஆன்மீகம், விஞ்ஞானம், பொருளா தாரம், நீதி நெறி சமூக ஒழுக்கம், குடும்பத்தின் பாங்கு, உளவியல் தத்துவங்கள், உலக ஜீவராசிகளின் மீது கழிவிரக்கம், பூகோள மாறுபாடு, மருத்துவ இயல் போன்ற எத்தனையோ செய்திகளை உள்ளடக்கி முனிவர்கள் எழுதி வைத்துள்ளனர். இன்னும் ஆறறி விற்கு புரியாத புதினங்களும் நிறைய புதைந்து கிடக்கின்றன.

ஒரு சூரியனானது கவிஞனின் கண்களுக்கு கவிதை ஊற்றாக வும், விஞ்ஞான விற்பன்னர்களுக்கு அறிவியல் கூறுகளின் தொகுப்பாகவும், ஆன்மீக ஞானிகளுக்குப் புனித ரூபமாகவும், ஜோதிடர்களுக்குக் காலத்தை கணக்கிடும் காலக் கண்ணாடி யாகவும், தத்துவ ஞானிகளுக்கு அறிவின் வெளிப்பாடாகவும், தாவரங்களுக்கு உணவைத் தயாரிக்க உதவும் மூலக் கனலாகவும்

பல்வேறு கோணங்களில் பரிணமிக்கின்றது. சூரியன் ஒன்று தான் ஆனால் அவரவர் பார்வைக்கேற்றபடி வேறு வேறு கோணங் களில் கவர்கின்றது.

அது போன்றே இந்து சமய பதினென்புராணங்களும், இன்னும் பலதரப் பட்ட நூல்களும், யார்? யார்? எவ்வாறு நோக்குகின்றார்களோ அதற்கேற்றது போல பன்முக பரிணமிப்பை வெளிக்காட்டுகிறது. ஒவ்வொரு புராணத்திற் குள்ளும் பல்வேறு உண்மைகளும், நன்மைகளும் உள்ளன. இவைகள் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக அகிலம் முழுவதும் பொன்னொளி வீசி புன்னகை பூத்து வருகிறது இந்திய பூமி.

விநாயகன் கதைக்குள் விஞ்ஞான புதையல்கள், இன்னும் எண்ணிலடங்காமல் ஏராளமாக உள்ளன. சிலவற்றை உங்கள் சிந்தனைக்காக சுருங்க விளங்க வைத்துள்ளேன். இது ஒரு திசைக்காட்டி தான். இன்னும் பயணம் முற்று பெறவில்லை.

***



# விழுதுகள் வேறு வேறானாலும் ஆலம் - மூலம் ஒன்று தான்!

பள்ளியில் பணியாற்றிய போது பாலப் பருவ மாணவர்களை பரவசப்படுத்த வேண்டி இன்பச் சுற்றுலா அழைத்துச் செல்கின்ற பொறுப்பில் இருந்தேன். பிள்ளைகளோ இரண்டாம் வகுப்பு படிக்கும் கள்ளமில்லாக் கடவுளின் வடிவங்கள், அனைவரையும் அழைத்துக் கொண்டு எழும்பூர் வரலாற்று நினைவகத்திற்கு (Musium) சென்றேன். அதற்கு பின்பு அடையார் ஆலமரத்தை பார்ப்பதற்கு அழைத்துச் சென்றேன். மாணவர்களின் மனத்தில் தான் எத்தனை விதமான மனவெழுச்சிகள், சந்தேகங்கள், ஆச்சரியங்கள், ஐய வினாக்கள், பிரமிப்புக்கள், பேதைமைகள், கற்பனைகள் எல்லாரும் சேர்ந்திருந்த அவர்களின் ஏழு வயதை எண்ணிமகிழ்ந்தேன்.

அடையார் ஆலமரம் பல ஆண்டுகளாக வளர்ந்து வனப்பெய்தி மிகவும் பிரமாண்டமாக, விழுதுகள் பலவற்றை ஆங்காங்கே விட்டு விட்டு மிகப் பெரிய விருட்சமாக காட்சியளித்தது. அதன் 'மூலமான' நடுமரத்தைச் சுற்றிலும் பெரிய பெரிய விழுதுகள் அம்மரத்தைப் போன்றே தூண்களாக தொடர்ந்திருந்தது. மாணவர்கள் அதனுள் புகுந்து ஓடியாடி விளையாடி மகிழ்ந்தனர். பிறகு களைப்பாற வேண்டி நொறுக்குத் தீனிகளை வழங்கினேன். அவர்கள் வட்டமாக அமர்ந்து வாய் பேசி மகிழ்ந்தனர்.

புரியாத பருவத்தில் புதிரான கேள்விகளை கேட்டான் ஒரு மாணவன். சார்! சார்! ஒவ்வொரு மரமும் தனித்தனியா முளைச்சி, மேலப் போய் எவ்வளவு அழகா ஒட்டிக்கிடுச்சி பாருங்க சார்! என்றான். அதற்கு இன்னொரு மாணவன் பதிலாகச் சொன்னான், ''டேய், இது இல்லடா, மரம் பெருசாக பெருசாக கிளையெல்லாம் உடைஞ்சி விழுந்திடாம இருக்க அங்கங்க பெரிய

தூணை நட்டு வச்சி, ஒட்ட வச்சி இருக்காங்கடா, அதுதாண்டா ஆலமரத்தை சுத்தி தூண் தூணா இருக்குடா' என்றான். அவர்களின் உரையாடலில் உண்மையுமில்லை. பொய்யுமில்லை. அது குழந்தைகளுக்கே உரிய குறும்புத்தனமான கேள்வி பதில்களாக இருந்தன. அவர்களின் பேச்சை முடித்தவுடன் நான் ஆலமரத்தைப் பற்றி விளக்கமளித்தேன்.

சில ஆண்டுகளே வளர்ந்து வரும் ஆலமரமொன்றை அழைத்துச் சென்று காட்டினான் அதனைச் சுற்றி மெல்லிய விழுதுகளின் ஒரு முனை தரையில் படாமல் அந்தரத்தில் ஆடிக் கொண்டிருப்பதை சுட்டி காட்டினேன். வருடங்கள் ஆக ஆக இந்த விழுதுகள் வளர்ந்து மெதுவாகத் தரையில் கீழிறங்கி தொட்டு விடும். அதற்கு பிறகு அந்த விழுதுகளினாலே பூமியிலுள்ள சத்துப் பொருள்கள் உறிஞ்சப்பட்டு மரத்தை மேலும், மேலும் ப்லமாக பாதுகாக்கும். இது போன்ற விழுதுகளே நீங்கள் பார்த்த விழுதுகள். நீண்ட வருடங்களுக்குப் பிறகு தனித்தனி மரத்தைப் போன்று பெருத்துக் காணப்பட்டது. உற்பத்தியான நடுமரம் உருகுலையாமல் நீண்ட நாட்கள் வாழ வைப்பதற்காகவே, ஆலம் விழுதுகள் நான்கு புறத்திலும் தாங்கிப் பிடிக்கின்றன என்றேன்.

ஆலமரத்தினோடு கூடவே ஓர் மானுட தர்மத்தையும் மாணவர்களுக்கு விளக்கினேன். குடும்பத்தில் உங்களை பெற்றவர்கள் அம்மா, அப்பா ஆகிய இருவரும் ஆலமரத்தைப் போன்றவர்கள். அவர்களால் தான் நீங்கள் குழந்தைகள் என்ற விழுதுகளாகத் தொங்கி இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள். ஆகவே நீங்கள் படித்து பெரியவர்களானால், உங்களின் அம்மா, அப்பாவைப் பாதுகாக்கும் விழுதுகளாக வாரியணைத்து தாங்கி நிற்க வேண்டும் என்ன? சரியா? என்று கேட்டேன். அவர்களும் சரிசார்! என்ற 'வாக்குறுதி' வழங்கினார்கள்.

இறுதியில் சொன்னேன், விழுதுகள் வேறு வேறாக கண் களுக்கு தெரிந்த போதிலும், ஆலமரத்தின் 'மூலம்' ஒன்று தான் என்றேன். மாணவர்களின் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது. தான் நூலில் படித்த ஆலமரத்தைக் காட்டிலும் நேரில் பார்த்த

ஆலமரத்தில் தான் எத்தனை தகவல்கள் என்ற எக்காளத்துடன் வரிசையாக வாகனத்தில் (Bus) அமர்ந்து வீடு நோக்கித் திரும்பி விட தங்களைத் தயார் படுத்திக் கொண்டனர்.

விழுதுகள் வேறு வேறாகத் தெரிவது போன்று, விநாயகனின் உருவங்களும், புராணக் கதைகளில் அவரது வீர, தீர, செயல் பாடுகளுக்குத் தகுந்தவாறும், ஞானத்தையும் நல்ல தத்துவங் களையும், உணர்த்த வேண்டியும் பல்வேறு உருவங்களில் யோகிகள் உருவாக்கியுள்ளனர்; விநாயகனின் அவதாரத்தை அநேக ரூபங்களில் வடித்துள்ளனர்.

தங்கமென்ற ஒரு உலோகத்தைக் கொண்டு எத்தனையோ விதமான ஆபரணங்களை உருவாக்கி அணிந்து மகிழ்கின்றனர். அது அணியும் இடத்தை பொறுத்து கம்மல், மூக்குத்தி, வளையல், ஒட்டியாணம், மோதிரம் என்ற பலபெயர்களில் அழைக்கப்படு கிறது. ஒரே 'தங்கம்' பல பெயர்களால் அணிகலன்களாக உருவாகிவிடுகிறது. மீண்டும் உருக்கினால் ஒரே தங்கமாக, ஆகி விடுகிறது. அங்கே உருவங்கள் உருக்கப்பட்டு ஒரே மூலமாக மாறிவிடுகிறது.

அதுபோலவே விநாயகனின் வடிவங்கள் பல்வேறு இருப் பினும் 32 வடிவங்கள் முக்கியமாக கருதப்படுகின்றன. சித்தர் களின் மருத்துவ இயலின் படி மனிதர்களின் உடல் நோய், மனநோய்களை தீர்ப்பதற்கு 32 வகையான அக மருந்துக்களை (உள் உபயோகம்) கூறியுள்ளனர், அது பஸ்பம், செந்தூரம், சுண்ணம் போன்ற 32 ஆகும்.

அவ்வாறே மனிதர்களின் ஆன்ம நோய்களை தீர்ப்பதற்கு விநாயகப் பெருமான் 32 வடிவங்களில் காட்சி தந்து பிறவி, பிணியைத் தீர்த்து வைக்கின்றார்.

விழுதுகள் வேற வேறாகக் காட்சி தந்த போதிலும் 'ஆலயத் தின் மூலம்' ஒன்றாக இருப்பதைப் போன்றும், தங்கத்தால் ஆபரணங்களாயிரமிருந்த போதிலும் மூலமாய் நிற்பது தங்கம் தான் என்பதைப் போன்றும், விநாயகனின் ரூபங்கள் 32 ஆக இருப்பினும் மூலமாக இருப்பது அவனது உருவமே அன்றி வேறியில்லை.

***



# விநாயகனின் 32 வடிவங்கள்

## 1. யோக விநாயகர்

இவர் அமர்ந்த நிலை யோக நிலை. தேக நிறம் செஞ்சூரியன். ஆடை நிறம் இந்திர நீலம். கைகளில் தாங்கியிருப்பது, யோக தண்டம், பாசக் கயிறு கரும்பு, அட்ச மாலை, 'யோகப் பட்டம்' இடுப்பில் தரித்த நிலை. யோகப் பயிற்சியின் அவசியத்தை உணர்த்தும் வடிவம்.

## 2. பால விநாயகர்

குழந்தை உருவம், முகத்தில் குழந்தையின் சிரிப்பு. தாமரை இதழில் அமர்ந்த நிலை. நானகு திருக்கரங்களிலும் குழந்தைகள் விரும்புகின்ற இனிப்பைப் போன்றே, வலது கைகளில் வாழைப் பழமும் ஒன்றும் பலாப்பழமும் ஒன்றும் வைத்துக் கொண்டும், இடது கைகளில் கரும்பு ஒன்றும், மாம்பழம் ஒன்றை வைத்துக் கொண்டிருப்பது. துதிக் கையான ஐந்தாவது கரத்தில் அப்பத்தை வைத்திருக்கும் நிலை. குழந்தையும் தெய்வமும் ஒன்று என்ற நிலை.

## 3. பக்தி விநாயகர்

'பௌர்ணமி' முழு நிலவைப் போன்று வெள்ளை நிறத்தில் காட்சியளிப்பார். முகப் பொலிவு மனகிலியை போக்கி விடும் வடிவம். நான்கு திருக்கரங்களிலும் தேங்காய், வாழைப்பழம், மாம்பழம், பாயாசம் நிரம்பிய பாத்திரமும், ஐந்தாவதாக துதிக்கையானது பாயாசத்தைத் தொட்டு உறிகின்ற நிலையிலும் உள்ளது. இதன் தத்துவம் நாசியின் வாயிலாக பிராணாயாம பயிற்சிகளைச் செய்து கபாலத்தில் சுரக்கின்ற அமிர்தத்தை சுவைக்கின்ற நிலையைக் குறிக்கும்.

## 4. சக்தி விநாயகர்

விநாயகனின் இடப்புறத்தில் சக்தியை அமர்த்தி, இடுப்பில் கைகளால் இருவரும் தாங்கிய நிலை, விநாயகனின்நிறம் அந்தி வானத்தின் அழகிய நிறமும், சக்தி நிறம் பச்சை நிறமுமாகவும் காட்சியளித்தல். கரங்களில் பாசக்கயிறும், பூமாலையும் வைத்து முத்திரையில் ஒன்றான அபய முத்திரையால் அருள்பாலிக்கும் நிலை. இல்லறமே சக்தியும், முக்தியும் தருமென்ற தத்துவ நிலையாகும். சிவன் ஆதியை தனது உடலில் பாதி இடபாகத்தை அளித்து அர்த்த நாரீஸ்வராகக் காட்சி தருவது போல, இவர் சக்தியை இடது பக்கம் தாங்கிக் காட்சியளிக்கிறார்.

## 5. சித்தி விநாயகர்

யோக சாத்திரத்தின் படி அமர்ந்துள்ள நிலை அர்த்த சித்தாசனமாகும். இடது காலை மடித்து மூலதாரத்திலும் வலக்காலை தொங்க வைத்த நிலையிலும் இருப்பார். தேகநிறம் பொன்னிறமாகும். தும்பிக்கையுடன் சேர்த்து ஐந்து கரத்தில், எள்ளுருண்டை, மாம்பழம், கரும்புத்துண்டு, மாம்பழம், கோடாரி ஆகியவற்றைத் தாங்கியுள்ளார். சிரசில் அழகிய கிரீடத்தை தாங்கியுள்ளார். இவ்வுருவம் யோகச் சித்தி அடைந்தவர்களுக்கு சகஸ்வரமென்ற ஆயிரங்கோடி சூரிய பிரகாச வட்டொளி உண்டாவதை தத்துவமாக உணர்த்தும் நிலை.

## 6. வீர கணபதி

வீரத்தை வெளிப்படுத்தும் வகையில் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். தேகம் சிவந்த நிறம். பதினாறு செல்வங்களை பெற்றிட வேண்டி, பதினாறு திருக்கரங்களை கொண்டவராக உள்ளார். பதினாறு திருக்கரத்திலும் வீரத்தின் வெளிப்பாடாக, வேல் அம்பு, சக்கரம், வில், சூலம், கோடாரி, குந்தாலி, வேதாளம், கதை, கத்தி, நாகம், சம்மட்டி, கேடயம், அங்குசம், பாசம், கொடி, ஆகிய ஆயுதங்களைத் தாங்கி தரிசனம் தருகிறார்.

## 7. விக்ன விநாயகர்

துன்பங்களை நீக்கும் தூய பொன்னிறமாகக் காட்சி தருகிறான். மேனி முழுவதும் ஆடை அணிகலன்களால்

அலங்கரிக்கப்பட்டவர். தனது தாயான பார்வதி தேவியின் துன்பத்தைப் போரில் நீக்கியதன் அடையாளமாக திருக்கரங்களில் கோடாரி, பாசக்கயிறு; மலரம்பு, சங்கு, சக்கரம், பானம், கொம்பு, வெற்றிமாலை, பூங்கொத்து, கரும்புவில் ஆகியவற்றைத் தாங்கி யுள்ளார். தடைகளை நீக்கும் தன்னிகரில்லாதவனாக தலைவனாக இருக்கின்றார்.

## 8. வெற்றி விநாயகர்

பெருச்சாளியின் மீது பயணப்படுவது போன்ற நிலையாகும். இவரது கரங்களில் தந்தையிடம் பெற்ற மாம்பழம், தாயிடம் பெற்ற தண்டம், வெற்றிக்கு துணையாக உள்ள பாசம், அங்குசம் ஆகியவற்றை வைத்துள்ளார். விஜய விநாயகர் ஆவார்.

## 9. வர விநாயகர்

செந்நிறமுடைய்வர். வேண்டும் வரமளிப்பதால் வர விநாயகர் ஆவார். த்லையினில் பிறையைச் சூடி மகுடம் தரித்தவர். முக்கண்ணுடையவர். யானை முகத்துடன் கைகளில் பாசம், அங்குசத்தைத் தாங்கி தாட்சண்யம் காட்டுபவர்.

## 10. உச்சிஷ்ட விநாயகர்

இஷ்டப் பட்டதை உச்ச நிலைக்கு அழைத்துச் சென்று அருள் பாலிப்பார் என்ற பொருளில் உச்சிஷ்ட விநாயகர் என அழைக்கப் படுகிறார். இவ்விநாயகரை மாந்திரீக உச்சாடனங்களுக்காகப் பயன்படுத்துவர். நின்ற நிலையில் வானத்தின் நீல நிறத்தில் திருமேனி இருக்கும். இவரின் திருக்கரங்களில் மாதுளம் பழம், நெற்கதிர், அட்சயமாலை, வீணை நிலோற்பவம் ஆகியவற்றைத் தாங்கி நிற்பார்.

## 11. உத்தண்ட விநாயகர்

மகத்துவம் பொருந்திய பத்து கரங்களை கொண்ட விநாயகர் ஆவார். பிரகதமேனியான தேவியை இடது புறம் தாங்கி தழுவிய நிலையில் இருப்பார். தேவியின் கரங்களில் ஞானத்தின் அடை யாளமாக தாமரை மலர் இருக்கும். விநாயகனின் பத்து கரங்களில்

கதை, கலசம், கரும்புவில், தாமரை, தந்தம், பாசம், மாதுளம் பழம், மாலை, நெற்கதிர் ஆகியவற்றைத் தாங்கியிருப்பார்.

## 12. ஊர்த்துவ விநாயகர்

'ஊர்த்துவம்' என்றால் மேல்நோக்கு கொண்டு செல்லுதல் என்று பொருள். 'ஊர்த்துவ விநாயகர் என்றால் மேல்நோக்கி உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்லும் குணமுடையவர் என்ற பொருள். இவரது தேகம் பொன்னிறமாக மின்னும், இடது புறம் மரகத மேனியான தேவியை தழுவிய நிலையிருப்பார். தனது கரங்களில் நெற்பயிர், நீலப் பூ, தாமரை; தந்தம், வில், கரும்பு, பானம் போன்றவற்றைத் தாங்கிய நிலையில் அருள்பாலிப்பார்.

## 13. ஏரம்ப விநாயகர்

இவரது யானை முகத்தின் மீது மற்றொரு யானை முகம் ஏறி அமர்ந்தது போன்றும், மற்ற மூன்று பக்கங்களும் மேலும் மூன்று யானை முகமும் இருக்கும். ஆக முன்னிரு முகமும், பக்கத்தில் மூன்று திசைகளிலும் சேர்த்து பஞ்சமுக விநாயகனாகக் காட்சி தருகிறார். இவரது தேக நிறம் கரும்பச்சை நிறம், இவரது கரங்களில் தந்தம்,. பரசு, சம்மட்டி, அப்பம், பழம், அட்சய மாலை, அபயம், வரதம், ஆகியவற்றைத் தாங்கியுள்ளார். இவர் இத்தகைய உருவத்தில் சிங்க வாகனத்தில் காட்சி தருகிறார்.

## 14. ஏகாட்சர (ஒருமுக) விநாயகர்

'ஏகம்' என்றால் ஒப்பிலாத ஒன்று 'அட்சதம்' என்றால் எழுத்து. 'ஏகாட்சர விநாயகர்' என்றால் ஒப்பில்லாத ஓர் எழுத்தான பிரணவத்தின் 'ஓம்' வடிவமான் விநாயகர் என்ற பொருள். இவரது தேகத்தின் நிறம் செம்மை. ஆடை நிறமும் செம்மை, அணிந்த மாலையும் செம்மை முக்கண்களையுடையவர். கரங்களில் வரதம், பாசம், மாதுளம் பழம், அங்குசம் ஆகிய வற்றை பெற்றவர். குறுகிய கைகளையும் கால்களையும் உடைய வராக விளங்கி, பெருச்சாளியின் மீது 'பத்மாசனத்தில்' பவனி வருபவர்.

## 15. ஏகதந்த விநாயகர்

'ஏகதந்தம்' என்றால் 'ஒற்றைக் கொம்புடன்' உடையவர் என்ற பொருள். தேக நிறமோ நீலமாகும். கரங்களில் அட்சய மாலை, லட்டு, தந்தம், கோடாரி, ஆகியவற்றைத் தரித்தவர். மிகப்பெரிய வயிறைப் பெற்று அண்ட சராசரத்தை அதனுள் அடக்கியவர்.

## 16. துவிமுக (இருமுக) விநாயகர்

'துவி' என்றால் 'இரண்டை'க் குறிக்கும். 'துவிமுக விநாயகர்' இரட்டை முக்த்துடன் இனிய ஞானத்தைத் தருவார். தேக நிறமோ பசுமை கலந்த நீல நிறம். ஆடையோ செவ்வாடை நிறம். சிரசின் மீது இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மகுடத்தை உடையவர். கரங்களில் பாசம், அங்குசம், இரத்தின பாத்திரம், தந்தம் ஆகிய வற்றைத் தாங்கியவர். அர்த்த சித்தாசனத்தில் அமர்ந்து அண்டத்தை இரட்சிப்பவர்.

## 17. மும்முக விநாயகர்

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை செய்யும் மும்மூர்த்திகளை போல மூன்று முகங்களுடன் முப்பொழுதும் அருள் புரியும் நிலை. நின்ற நிலையில் அருள் புரிகிறார். தேக நிறம் செம்மை, கரங்களில் கூரிய அங்குசமும், அட்சய மாலை, பாசம், அபயம் முத்திரை, கலசம் ஆகியவற்றைத் தாங்கி நிற்கின்றார்.

## 18. துவிஜ (நான்முக) விநாயகர்

'துவிஜம்' என்றால் 'நான்கை'க் குறிக்கும் இவ்விநாயகருக்கு நான்கு முகமிருக்கும். இவரை சதுர்முக விநாயகன் என்றும் அழைக்கலாம். தேகநிறம் வெண்மை நிறம், நான்கு திசை களையும், நன்முறையில் காத்து நிற்கின்ற வடிவம். நான்கு புறங்களில் நான்கு துதிக் கைகளோடு கூடி, பிற கரங்களில் தண்டம், அட்சமாலையான 'ஜபமாலை', கமண்டலம், புத்தகம், தாங்கிய நிலையாகும், கை மணி கட்டினில் வளையல்கள் அணிந்துள்ளார் காப்புச் செய்யுளின் கதாநாயகனாக இருக்கின்றார்.

## 19. துர்க்கா விநாயகர்

சக்தியின் விருப்பத்தால் உருவாக்கியதால் துர்க்கா விநாயகர் என்று அழைக்கப்படுகிறார். தேக நிறம் பொன்னிறம், ஆடையோ, சிவந்தநிறம், உருவமோ உலகையாளும் பெருத்த நிறம், கரங்களோ எட்டு, வலபுற கரங்கள் நான்கிலும் ஜபமாலை, பானம், அங்குசம், தந்தமும், இடப்புறகரங்களின் நான்கில் வில், நாவற் பழம், கொடி, பாசம் ஆகியவற்றை வைத்துள்ளார். சிவ சக்தியைப் போன்ற எண்ணற்ற சக்திகளை வழங்குபவர்.

## 20. துண்டி விநாயகர்

விநாயகனின் உண்மையான வடிவத்தில் தலை துண்டிக்கப் பட்டு பின்பு யானைத் தலையை இணைத்ததால், இவ்விநாய கனை துண்டி விநாயகன் என்று அழைக்கப்படுகிறது. 'துண்டி விநாயகர் காசியில் வீற்றிருக்கிறார். தேக நிறம் சிவப்பு. கரங்களில் தந்தம், இரத்தின கலசம், ஜப மாலை, கோடாரி ஆகியவற்றைத் தாங்கியுள்ளார்.

## 21. தருண விநாயகர்

'தருணம்' என்றால் மோட்சத்தைக் குறிக்கும், 'தருண விநாயகர்' என்றால் மோட்சத்தை அளிப்பவர் என்று குறிக்கும். இவரது தேகம் நிறம் உச்சகால சூரியனின் அனல் போன்ற அழகிய வெண்மை நிறம்.

இவ்விநாயகர் எட்டு கரங்களையுடையவராக இருக்கின்றார். இக்கரத்தினை கொண்டு 'அஷ்டாங்க யோகத்தின் (இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாஹாரம், தாரணை, தியானம், சமாதி) படி நிலைகளை விளக்குவதோடு, அஷ்ட திக்கான எட்டு திசைகளையும் ஞானத்தால் காப்பதைக் குறிக் கிறது. இவரது எட்டு கரங்களில் நெற்கதிர், ஒற்றைத் தந்தம், அப்பம், கரும்புத்துண்டு, விளாம்பழம், அங்குசம், பாசம் நாவற்பழம் ஆகியனவற்றைப் பெற்றுள்ளார்.

## 22. இரண மோசன விநாயகர்

'இரண மோசனம்' என்றால் துன்பத்திலிருந்து நீக்குபவர் என்றும், 'மோசனம்' என்றால் இரகணங்களின் துன்பத்திலிருந்து

நீக்கபவர் என்றும் பொருள்படும். இவரின் தேக நிறம் வெண்மையான பவளத்தைப் போன்றது. உடுத்திய ஆடையோ செந்நிற ஆடையாகும். இவ்விநாயகனின் கரங்களில் நாவற்பழம், பாசம், அங்குசம், தந்தம் ஆகியவற்றைத் தாங்கி நிற்கின்றார்.

## 23. இலட்சுமி விநாயகர்

மனிதர்கள் ஆன்மீகத்தில் பெரிய பெருநிலையை அடைய சித்தியும், புத்தியும் தான் அவசியமென்பதை உணர்த்துகின்ற நிலை. விநாயகனின் இரு பக்கங்களிலும் சித்தி, புத்தி ஆகிய இரு தேவிகளை அமர்த்திய நிலையில் காட்சி தருகிறார். தேவியின் கைகளில் நீலத் தாமரை மலர்கள். இவரின் தேக நிறம் அமுத நிறமான வெண்மை இவரின் எட்டு கரங்களிலும் கவசம், கலசம், கடகம், கற்பகக் கொடி, கிளி, பாசம், அங்குசம், மாதுளம் பழம் ஆகியனவற்றைத் தாங்கியுள்ளார்.

## 24. சிங்க விநாயகர்

சிங்க வாகினியான 'பார்வதி தேவியின்' புத்திரன் என்பதை குறிக்கும் வகையில், சிங்கத்தின் மீது அமர்ந்த நிலை. தேக நிறம் வெண்மையானது. துதிக்கையோடு சேர்த்து ஒன்பது கைகளாகும். வலது புற நான்கு கரங்களிலும் கற்பகக் கொடி, வீணை, சிங்கம், விரதம் ஆகிவற்றைத் தாங்கியும், இடது புற நான்கு கரங்களிலும் அபய முத்திரை, பூங்கொத்து, இரத்தின கலசம், தாமரை மலர் ஆகியவற்றைத் தாங்கியுள்ளார். சிங்க வாகனத்தின் மீது அமர்ந்து, யானை முகத்துடன் யாசிப்பவருக்கு வரங்களையளிக்கின்றார்.

## 25. சங்கட ஹர விநாயகர்

'அரண்' என்றால் அழகு என்றும் 'காவல்' என்றும் பொருள்படும். 'சங்கட ஹர விநாயகர்' சங்கடங்களிலிருந்து அழகுற காக்கும் விநாயகர் என்ற பொருளாகும். எதிர்படும் துன்பங்களை போக்க அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறார். இவரது தேக நிறம் வெம்மையுடன் புறப்படும் காலைக் கதிரவனின் நிறமாகும். ஆடையோ நீல நிறம். இடது புறம்

தொடையின் மீது சக்தி காட்சி தருகிறாள். தேவியின் நிறம் பசுமையான நிறம், கைகளில் நீலமலரை வைத்திருப்பாள்.

விநாயகனின் வலது கரங்களில் அங்குசம், வரதமும், இடது கரங்களில் ஒன்று தேவியை தழுவிய நிலையிலும், மற்றொன்று பாசத்தை ஏந்தியும், துதிக்கையில் பாயச பாத்திரத்தை தாங்கிய வாறுமிருக்கும் சங்கடஹர விநாயகர் செந்தாமரை பீடத்தில் அமர்ந்து சங்கடங்களை தீர்க்கின்றான்.

## 26. 'க்ஷிப்ர' விநாயகர்

'சுப்ரம்' என்றால் 'ஒளி' என்றும், 'நித்ய யோகத்தைத் தருபவன்'' என்ற பொருளாகும். இவரது தேக நிறம் கருஞ்சிவப்பு நிறமாகும். இவர் ஐந்து கரங்களிலும் அங்குசம், இரத்தின கும்பம், தந்தம், பாசம், கற்பகக் கொடி, ஆகியவற்றைத் தாங்கியுள்ளார். இவ்வடிவ விநாயகன் ஒளி பொருந்திய முகத்துடன் நித்தமும் யோகத்தைத் தரக் கூடியவன். அர்த்த சித்தாசனத்தில் அமர்ந்து பக்திகளின் மனத்தில் ஆட்சி செய்கின்றான்.

## 27. 'க்ஷிப்ர பிரசாத' விநாயகர்

'பிரசாதம்' என்றால் 'அருள்' 'தெளிவு', 'சுகமான வாழ்வு', 'பவித்திரம்' போன்ற பொருளைத் தரும். 'க்ஷிபர பிரசாத விநாயகர்' என்றால் நித்தமும் பவித்தரமான அருள் யோகத்தைத் தருகின்ற விநாயகர் என்பதாகும். 'ஹிப்ர விநாயகருக்கும், 'க்ஷிப்ர பிரசாத விநாயகருக்கும் மிகப் பெரிய வேறுபாடு ஒன்றுமில்லை. இவ்விநாயகருக்கு பெருத்த வயிறு காணப்படும். பலவகையான அணிகலன்களை அணிந்து அற்புதமாகக் காட்சியளிப்பார். இவரது கரங்களில் மாதுளம் பழம், தாமரை, தருப்பைப்புல், அங்குசம் பாசம், இவற்றைத் தரித்திருப்பார். அர்த்த சித்தாசனத் தில் அமர்ந்திருப்பார்.

## 28. திரியாக்ஷர விநாயகர்

திரியாக்ஷர விநாயகர் என்றால் அசைந்து திரிகின்ற காதுகளை உடையவர் என்ற பொருள், தேக நிறம் பொன்னிறமானது.

ஐங்கரத்தில் தந்தம், மாம்பழம், அங்குசம், பாசமும் துதிக்கையில் மோதகமான அப்பத்தை வைத்திருப்பவர், வடமொழி நூலில் திரியாக்ஷர விநாயகர்' என்று அழைப்பர்.

## 29. ஹரித்திரா' என்ற மஞ்சள் விநாயகர்

இவரது தேக நிறம் மஞ்சள் நிறமாக இருக்கும். மஞ்சள் நிறம் மங்களத்தைக் குறிப்பதாலும், அதுபோல பார்வதி தேவி அந்தப்புரத்தில் நீராடும் பொழுது மஞ்சளால் விநாயகரை உருவாக்கியதை நினைவுபடுத்தும் வகையில் உள்ளது. இவ் விநாயகரின் வடிவம், ஐந்து திருக்கரங்களை உடையவர். அதில் தந்தம், பாசம், அங்குசம், மோதகமும் வைத்து துதிக்கையான ஐந்தாவது கரம் மோதகத்தை தொட்டபடி இருக்கும் நிலையில் உள்ளது. மஞ்சளாலான விநாயகனை வழிபடுவருக்கு மங்களத்தை அளிப்பான்.

## 30. சிருஷ்டி விநாயகர்

உலகைப் படைக்கும் பிரம்மனைப் போன்று உலக உயிர் களைப் பிறப்பிக்கும் விநாயகராக விளங்குகிறார். இவர் பயணப் படும் வாகனம் பெருச்சாளி. தேகம் சிவந்த நிறம். இவரது நான்கு கரங்களிலும் மாங்கனி, அங்குசம், தந்தம், பாசமும், தும்பிகை சுழித்த நிலையிலும் இருக்கும், மனித தேகத்துள் மூலாதாரமானக் கருவாயிலிருந்து, ஜீவனைச் சிருஷ்டிக்கும் தத்துவனாக இவ்விநாயகர் உள்ளார்.

## 31. நிருத்த விநாயகர்

'நிருத்தன்' என்றால் 'கட்டுபாடற்றவன்' 'கூத்தன்' நடனமாடு பவன், என்றெல்லாம் பொருள்படும். இவ்விநாயகர் நடனமாடும் நிலையில் இடது காலை ஊன்றி வலது காலை உயர்த்திய நிலையிலுள்ளார். 'கற்பக மரத்தினடியில் காட்சி தருகிறார். தேகமோ பொன்னிறம், இவரது கரங்க்ளில் 'கோடாரி, அப்பம், தந்தம், அங்குசம், பாசம் இவைகள் உள்ளன. விரல்களில்

நடனமிடுபவரைப் போல் மோதிரங்களை அணிந்துள்ளார். இவரைக் கூத்தாடும் பிள்ளையார் என்றும் அழைப்பதுண்டு.

## 32. மகா விநாயகர்

'மகா' என்றால் 'மிகவும் பெரியது' என்ற பொருளைத் தரும், பெயருக்கேற்ப இவ்விநாயகர் பத்துக் கைகளுடன் விளங்கு கின்றார். இடது புறம் தேவியை அமர வைத்து, கரத்தால் தழுவிய நிலையிலுள்ளார். தேக நிறம் செம்மை, கண்களோ முக்கண்கள். தேவியின் கைகளில் தாமரை மலர் தவழும்.

விநாயகரின் பத்துக் கரங்களிலும் வில், கரும்பு கதை, மாதுளம் பழம், தாமரை, சக்கரம், கவசம், நெற்கதிர் இரத்தின கலசம், பாசம், மோதகம் ஆகியவற்றை வைத்துள்ளார். சிரசின் மீது பிறைச் சூடி நிறையருளால் நித்தமும் வாழ்விக்கின்றார். மஹா சக்திகள் அனைத்தும் அருள்வதால் மஹா கணபதி' என்று அழைக்கப்படுகிறார்.

ஆக ஆலமரத்தை விழுதுகள் தாங்கிப் பிடிப்பதைப் போல, மேற்கண்ட 32 வடிவ விநாயக ரூபங்களும் அவரது மூல சொரூபத்தை மாட்சிமைகளோடு விளக்குவதாக அமைந்துள்ளது.

உலக வரலாற்றில் சாதனையாளர்களையும், சமுதாய சீர்திருத்த வாதிகளையும், அரசியல் பிரமுகர்களையும், விஞ்ஞானிகளையும், ஆன்மீக மெய்ஞானிகளையும், அவர்களின் தனித்தன்மைகளுடன், புகைப் படங்களும், சிலைகளும் உருவாக்கியிருப்பதைப் போல, விநாயகரின் புராணத்தை அடிப்படையாக வைத்து எண்ணற்ற வடிவங்கள் உருவாக்கப் பட்டுள்ளன. அறுபத்து மூன்று நாயன்மார்களால் பாடல்·பெற்ற சிவஸ்தலங்க்ள் பல்வேறு ரூபங்களில் விநாயகர் காட்சி தருகிறார். வாழ்கின்ற பொது மக்களும் சித்தர்களும், யோகிகளும், முனிவர்களும் விநாயகரின் ரூபங்களை காரண காரியங்களுக் கேற்ப எண்ணற்ற பெயர்களில் வைத்துள்ளனர்.

இது மட்டுமில்லாமல் இடம், பொருள், கால சூழ்நிலைக் கேற்ப வழித்துணை விநாயகர், பொல்லாப் பிள்ளையார்,

நேத்திரப் பிள்ளையார், விளையாட்டுப் பிள்ளையார் ஜனசக்தி விநாயகர், கூப்பிடு பிள்ளையார், படிக்காசுப் பிள்ளைார், பொங்கல் பிள்ளையார், மிளகுப் பிள்ளையார், வெயில் காத்த விநாயகர் என்று பெயர்களில் பல இடங்களில் கோயில் கொண்டுள்ளார். விநாயகர் சைவத்திற்கும் வைணவத்திற்கும் பொதுவாக நின்று பொய்யுடம்மை, மெய்யான மேனியாக மாற்றக் கூடிய தெய்வமாக தினம் அருளுகின்றார்.

விநாயகனை முக்திக்கும், சித்திக்கும், எந்நாளும் வைத்து வணங்குபவர்களுக்கும் மற்றும் காரியங்கள் கைகூடுவதற்கும், அமாவசையிலிருந்து வரக்கூடிய் வளர்பிறை திதிகளிலும், அதுபோலவே பௌர்ணமியிலிருந்து வரக்கூடிய தேய்பிறை களுக்கான திதிகளிலும் விநாயகனன் 15 வடிசுங்களை தினசரி தியானம் செய்வதால் வேதனைகள் சரிந்து வெற்றிகள் குவியும்.

| | |
|---|---|
| 1. பிரதமை திதி | ஸ்ரீ பால கணபதி |
| 2. துவிதியை திதி | ஸ்ரீ தருண கணபதி |
| 3. திரிதியை திதி | ஸ்ரீ பக்தி கணபதி |
| 4. சதுர்த்தி திதி | ஸ்ரீ வீர கணபதி |
| 5. பஞ்சமி திதி | ஸ்ரீ சக்தி கணபதி |
| 6. சஷ்டி திதி | ஸ்ரீ துவஜ கணபதி |
| 7. சப்தமி திதி | ஸ்ரீ சித்தி கணபதி |
| 8. அஷ்டமி திதி | ஸ்ரீ உச்சிஷ்ட கணபதி |
| 9. நவமி திதி | ஸ்ரீ விக்ன கணபதி |
| 10. தசமி திதி | ஸ்ரீ க்ஷிப்ர கணபதி |
| 11. ஏகாதசி திதி | ஸ்ரீ ஹேரம்ப கணபதி |
| 12. துவாதசி திதி | ஸ்ரீ லஷ்மி கணபதி |
| 13. திரயோதசி திதி | ஸ்ரீ ஸ்ரீ மகா கணபதி |
| 14. சதுர்தசி திதி | ஸ்ரீ விஜய கணபதி |
| 15. அமாவாசை, பௌர்ணமி திதி | ஸ்ரீ நிருத்த கணபதி |

*விதியை மாற்றிடவே திதியை அறிந்திடு*
*திதியை அறிந்திட்டால் கணபதியை வைத்திடு*
*மதியும் மாட்சியையுறும் சதிகளும் சாய்ந்து விடும்*
*துதிக்கையான் அருளால் துவங்கிடும் நின் வாழ்வுமே*

***- கலியுகச் சித்தர் ஞானக்கலை 1500***

## பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர்

விநாயகரை பெருபான்மையாக சிவ, வைணவ தலங்களில் நுழைவாயிலின் முன்பு, அல்லது சுற்றுப்புறங்களிலும் அமர்ந் திருப்பார்.

பிள்ளையாரையே மூலவராகக் கொண்டு தனித்தலமாக விளங்குவது, தென்னிந்தியாவில் பிள்ளையார்பட்டியிலுள்ள செல்வ விநாயகராவார். இவர் ஐந்து கரத்தான் என்று அழைத் தாலும், பிள்ளையார் பட்டியில் அங்குசம், பாசம், இவைகள் இல்லாமல், இரு கைகளில் வலக்கையில் மோதகத்தை வைத்துக் கொண்டும் இடது கையை இடையின் மீது கம்பீரமாக வைத்துக் கொண்டு காட்சி தருகிறார். இரு கால்களையும் இணைத்து வைத்து அர்த்த பத்மாசனத்தில் அமர்ந்துள்ளார்.

பெரும்பாலும் பிள்ளையாருக்கு வலது தந்தம் வியாசன முனிவருக்காக உடைந்தால் பாதியாகக் காட்சியளிக்கும். ஆனால் பிள்ளையார் பட்டி விநாயகனுக்கு இடது தந்தம் உடைந்து காட்சி தருகிறார்.

தென்னிந்தியாவில் பிள்ளையாருக்கு - பிள்ளையார் பட்டியில் தனி தலம் இருப்பது போலவே, வட இந்தியாவில் மகா ராஷ்டிரத்திலுள்ள 'கணேஷ்கிண்ட்' என்ற இடத்தில் விநாயகர் தனி மூலவராகக் கோயிலில் காட்சி தருகிறார்.

சிவகங்கை மாவட்டத்தில் திருப்புத்தூரிலிருந்து கிழக்கில் எட்டு கிலோ மீட்டரில் பிள்ளையார் பட்டி உள்ளது. இதற்கு கணேசபுரி, எருக்காட்டூர், திருவீங்கைக்குடி, திருவீங்கைச்சரம், மருதங்குடி என்ற வேறு பல பெயர்களுமுண்டு. அருள்மிகு 'மருதீசர்' மூவராக கிழக்கு நோக்கியும், அருள்மிகு 'வாடாமலர் மங்கை' அம்மன் தெற்கு நோக்கியும் வீற்றிருக்கின்றனர். ஏழு நிலை இராஜ கோபுரம் கிழக்கு நோக்கியும் உள்ளது.

குடைவரை கோவிலில் வடக்கு நோக்கித் தேசி விநாயகப் பிள்ளையாரான 'கற்பக விநாயகர்' வீற்றியுள்ளார். இரு கரங்களுடன் காட்சி தரும் கற்பக விநாயகரின் வலக்கரத்தில் சிவலிங்கத்தையும் இடது கரத்தை தனது தொந்தியின் மீதுள்ள கச்சையின் மீது வைத்துள்ளார். துதிக்கையை ஓங்கார வடிவில் வலம்புரியாக வைத்துள்ளார். கற்பக விநாயகர் ஆறு அடி உயரத்தில் தனி கோவிலில் கொலுவிருக்கின்றார். இக்கோயிலிலுள்ள விநாயக மூர்த்தி மலைப் பாறையிலேயே செதுக்கப்பட்ட மிகப் பெரிய மூலவராவார். ஆண் யானையைப் போல் வலப்பக்கம் தந்தம் நீண்டும், இடப்பக்கம் பெண் யானைப் போல் தந்தம் குறுகியும் ஆண்பாதி, பெண்பாதி நிலையில் பேதங்களைக் கடந்தவராக விளங்குகிறார். தினமும் ஐந்து கால பூஜைகள் நடைபெறுகின்றன. மாதச் சதுர்த்திகளிலும் சிறப்பு வழிபாடுகளுண்டு. ஆவணி வளர் பிறைச் சதுர்த்தியுடன் முடியும் பத்து தினங்களிலும் உற்சவ வைபவங்கள் பிள்ளையார்பட்டி கற்பக விநாயகருக்கு உண்டு.

வரலாற்று குறிப்புக்கள்: குடைவரைக் கோவிலில் பிற்கால பாண்டியர்களின் கல்வெட்டுகள் பத்து இருக்கின்றன. இவைகள் ஐந்தாம் நூற்றாண்டை சேர்ந்த் மாறவர்ம சுந்தரபாண்டியன், விக்கிரம பாண்டியன், குலசேகர பாண்டியன், ஸ்ரீ வல்லப பாண்டியன் ஆகியவர்களின் காலத்தை சார்ந்ததாகும். பல்லவ மன்னன் நரசிம்மவர்மன் 'பிள்ளையார்பட்டி' குடைவரைக் கோவிலை கட்டியதாக கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

கல்வெட்டுக் குறிப்புகளில் கேரளசிங்கம், வளநாட்டு கீழ்குண்டாற்றுத் திரு வீங்கைக் குடி, மருதங்குடி, இராச நாராயணபுரம், என்றெல்லாம் இவ்வூரைக் குறிப்பிடுகின்றது.

## அகத்தியர் அருளிய 'கண் திருஷ்டி கணபதி'

சமீப காலத்தில் எங்கு நோக்கினும் மிகவும் பரபரப்பாக பேசப்படுபவராகவும், உருவத்தில் கம்பீர தோற்றமுடனும், விழிகளில் வேகமுள்ளவராகவும் காட்சி தருகின்றவர்தான் கண் திருஷ்டி கணபதி.

இவ்விநாயகரைக் 'கண் திருஷ்டி கணபதி' இப்படம் அகத்தியர் அருளியது' என்ற வாசகத்துடன் வலம் வர அச்சிடித்துள்ளனர். பலர் பண்டைய அகத்தியர், கலியுகத்தில் எங்கே? எப்போது? வந்தார். யாரிடம் இவ் ஓவியத்தைத் தந்தார்? என்ற ஐய வினாக்கள் பலரை மனதினுள் அலை பாயச் செய்கின்றது.

பண்டைய புராணங்களிலும், வரலாறுகளிலும் வரும் அவதாரங்களையும் தெய்வீக உருவங்களையும், அவர்களது தோற்ற வர்ணனைகளுக்கேற்ப, சிற்பக் கலை வல்லுநர்களும் சிற்றுளியால் சிந்தை வியக்க, கற்சிலைகளிலும் பஞ்ச லோக சிலைகளிலும் வடித்து வைத்தனர்.

மேலும் சில ஆண்டுகளுக்கு பின் கலை வளர்ச்சியும், அறிவியல் வளர்ச்சியும் பெற்றவுடன், மூலிகைச் சாறுகளில் வண்ணக் கலவைகளை உருவாக்கி பாறைகளையும், பருத்தித் துணிகளையும் பக்குவப்படுத்தி, அதில் இறைவனின் திருவுருவங்களை வண்ணமயமாக்கி வழிபட்டனர்.

இன்றோ கலியுகமாதலால் கணிப்பொறியும், அச்சு தொழிலும், ஓவியர் தொழிலும், அளவிலா அசுர வளர்ச்சிப் பெற்றுள்ளதால் அதனுடைய துணைக் கொண்டு புராணத்தில் அகத்திய முனிவனுக்குக் காட்சி தந்த, அற்புத விநாயகரை அழகுற படைத்துள்ளனர். அதனால் தான் இப்படம் அகத்தியர் அருளியது' என்று வாசகம் இடப்பட்டுள்ளது. கிரீடமும் ரூபமும், பல்வேறு காட்சிகளாகவும் சிறு மாற்றமடைந்துள்ளது. எப்படி இருப்பினும் அடிப்படைத் தத்துவம் ஒன்றே. 'கண் திருஷ்டி கணபதி' யோகியின் கனவில் வந்து உபதேசிக்காகதாவும் ஒரு வரலாறு உண்டு.

கண் திருஷ்டி கணபதி' தேக நிறம் அக்னி நிறமாகவும், எட்டு கரங்களில் சங்கு, சக்கரம், சூலம், கதை, கத்தி, அங்குசம், வரதம், தனல் போன்றவற்றை தாங்கியும் ஒன்பதாவது துதிகையில் பாசக் கயிறும், உள்ளது. இடுப்பில் நாகம் உள்ளது. தாமரை மலரின் மீது சிங்க வாகனத்தில் நின்ற ரூபத்தில், நேரிய பார்வையால் பரவசப்படுகின்றார். நவ கிரகங்களால் ஏற்படும் கிரக தோஷங்களை நவ (ஒன்பது) கரங்களால் தடுத்தாட் கொள்கிறார். இவரது

தலையை சுற்றி ஒன்பது கிரகங்களும் ஒளிவட்டமாக அமைந்துள்ளது.

இத்துடன் முருகனின் மையில் தோகையும் தலைக்குபின் அமைந்துள்ளது. சிவபெருமானின் ரூபத்தின் ஒரு பகுதியை உணர்ந்து மூக்கண்களுடன் காட்சி தருகிறார். எல்லா விநாயகரும் ஒரு தந்தம் உடைந்து காணப்படுவர். ஆனால் கண் திருஷ்டி கணபதிக்கு இரண்டு தந்தங்கள் முழுமையாக இருக்கும்.

வாழ்வின் வளர்ச்சிப் பாதையில் சென்று, செழுமையோடு நிற்பவர்களுக்கு, பொறாமையால் ஏற்படும் தீய கண்ணேறு (கண் திருஷ்டி) களை, தனது மூன்று கண்களால் ஓயாமல் பார்த்து ஒழித் திடச் செய்கின்றார். வேலையில் 'விக்னமென்ற' தடைகளை, மடைத் திறந்த வெள்ளம் போல் உடைத்தெறிந்து அருளுகின்றார்.

கணங்களின் ரூபமான (விலங்கின் வடிவமான) மனிதர் களால் ஏற்படும் துன்பங்களையும், அக் கணங்களை அழிக்கும் கண அதிபதியாகவும், இக் 'கணபதி' இருக்கின்றார்.

## விநாயகர் அகத்தியருக்கு அருளிய கதை

ஒரு முறை சூரபத்மன் என்னும் அரக்கன் சிவனை வேண்டி கடுந்தவம் புரிந்து எண்ணற்ற வரங்களை பெற்றான். பெற்ற வரத்தால் வானுலகில் தேவர்களுக்குப் பல துன்பங்களைக் கொடுத்தான். சூரபத்மனின் கொடுமையிலிருந்து தப்பிக்க வேண்டி, தேவேந்திரன் தனது மனைவி இந்திராணியுடன் பூவுலகில் பிரேவேசித்து சீர்காழியில் குடியேறினான். அங்கு ஒரு நந்தவனத்தை உருவாக்கி அதில் பூத்துக் குலுங்கும் மலர்களினா லும், துளசி, வில்வம், திருநீற்றுத் பத்திரி போன்ற இலைத் தளிர் களாலும், சிவனுக்கு அர்ச்சனைகள் செய்து மனமகிழ்ந்து வாழ்ந்து வந்தான்.

சூரபத்மனின் அடாத செயலினால் நீண்ட நாட்கள் வருண பகவான் மழை நீரை வாரி இரைக்காமல் வாரி சுருட்டிக் கொண்டு முடங்கிக் கிடந்தான். தேவேந்திரனின் நந்தவனம் நீரில்லாமல் நெருப்பில் கருகுவது போல செடிகள் கருகிக் கொண்டே வந்தது.

தேவேந்திரனோ இதனைக் கண்ணுற்றது சிவபூசைகள் பூக்கள் இல்லையே என்ன செய்வேன் செடிகள், மடிகின்றனவே, என்ற ஏக்கத்தால் மனம் ஒடிந்து மானசீகமாக சிவனிடம் வெம்பினான். சிவபெருமான் தேவேந்திரனின் மனத்துயரை நீக்க, ''அசரீரி ஒலியில், தேவேந்திரா உனது மனத்துயரை துடைக்க, மடைத் திறந்த ஓடும் நதியை உள் நந்தவனத்திற்குள் வந்தடையச் செய்கின்றேன். மகிழ்ச்சிக் கொள். இனியும் இதனையே சிந்தித்திராதே'' என்ற ஒலி எழுப்பினார்.

தேவேந்திரன் அசரீரி ஒலியை கேட்டு மகிழ்ச்சி கொண்டு நில்லாமல் மீண்டும் மனதை குழப்பிக் கொண்டு எப்படி? நந்தனவத்திற்குள் நதி பாய்ந்து வரும் என்று சந்தேகத்துடன் சலனமுற்றிருந்தான். அப்போது அவ்வழியாக நாரதர் வந்தார். தேவேந்திரன் தனது மன இறுக்கத்தை நாரதரிடம் இறக்கி வைத்தான். நாரதரோ, அதற்கு விடையளித்தார். தேவேந்திரனே, ஒரு முறை சிவபெருமான் அகத்தியருக்கு 'காவேரி' என்ற நதியை அளித்திருந்தார். அந்நதியை அகத்திய முனிவர் தனது கமண்டலத்தில் அடக்கிக் கொண்டு அவணியில் பவணி வருகிறார். இப்போது சையவரை மலைச் சாரலில் தங்கியுள்ளார். ஆகவே அகத்தியரின் கமண்டலத்திலுள்ள காவேரியைக் கவிழ்த்து விட்டால், காரியம் சித்தியாகி விடும் என்றார். ஆனால், அதனைப் புத்தியுடன் சித்திக்கக் கூடியவர் விநாயகப் பெருமான் தான் என்று கூறி நாரதர் நடுவானில் பறந்து விட்டார்.

தேவேந்திரன் தடைகளை நீக்கும் தன்னிகரில்லா கணபதியை எண்ணி 'தவம்' செய்தான். தவத்தின் பயனாய் 'கணபதி' காட்சியளித்து உன் துன்பத்தைஇன்பமாக்குகின்றேன் என்றார். உடனே 'கணபதி' காக்கையின் வடிவம் எடுத்தார். சைய்வரை மலைச் சாரலில் கண்களை மூடிய நிலையில், கமண்டலத்தை அருகில் வைத்துவிட்டு அகத்தியர் தியானத்தில் மூழ்கி இருந்தார். காக்கையின் வடிவிலிருந்த விநாயகப் பெருமான் கமண்டலத்தின் மீது உட்கார்ந்து கொண்டார். தியானத்தின் இடையே சலசலத்ததை எண்ணி, கண் திறந்து பார்த்த போது கமண்டலத்தின் மீது காக்கை

அமர்ந்திருந்ததைப் பார்த்து, கோபத்தால் தன் கையை ஓங்கி அகத்தியர் வீசினார். காக்கையின் வடிவிலிருந்த விநாயகர் மண்டலத்தைக் கவிழ்த்து விட்டு பறக்க அதிலிருந்த நீரானது பெருக்கெடுத்து ஓடியது. அதுவே காவேரி நதியாகும். அந்நதி தேவேந்திரனின் நந்தவனத்தின் வழியாக வழிந்தோடியது. தேவேந்திரனும் மகிழ்ந்து நந்தவனத்தை நற்சீரமைத்தான்.

அகத்தியர் காக்கையை விரட்டிக் கொண்டு ஓடினார். அப்பொழுது காக்கையானது ஒரு அழகிய பாலகனின் வடிவம் எடுத்து ஓடியது. அகத்தியருக்கு ஐயம் மேலிட இந்த சிறு பையன் யாராக இருப்பான். என்ற அறியும் ஆத்திரத்தில் எதிரில் ஓடியே பையனின் தலையில், ஓங்கி கொட்டுவதற்காக அருகில் சென்றார். விநாயகனோ, பிள்ளை வடிவத்தில் அகத்தியரை பெருமூச்சி இரைக்க ஓடி ஓடி ஆட்டம் காட்டினார். அகத்தியர் சோர்ந்து போய், சாய்ந்து உட்கார்ந்தார்.

அப்பொழுது விநாயகர், அகத்தியருக்கு தனது அருளுருவைக் காண்பித்தார். (இந்த அழகிய அற்புதத் தோற்றத்தைத்தான் இந்நூலின் பின்புற அட்டையில் காண்கிறீர்கள்!)அகத்தியரும், அச்சமும், நாணமும், அன்பும் மேலிட எட்டு அங்கங்கள் பூமியில் படும்படி வீழ்ந்து வணங்கினார். பிறகு விநாயகனைக் குட்டு வதற்காக ஓங்கி கைகளுடன் சுற்றியது தவறு என்று தனது கைகளால் அகத்தியர் ஓங்கி குட்டிக் கொண்டார்.விநாயகரும் அகத்தியரே குட்டிக் கொண்டது போதும், இனி தங்களுக்கு வேண்டிய வரத்தைக் கேளுங்கள் என்றார்.

விநாயகனைப் பார்த்து அகத்தியர், கமண்டலத்தில் அடைத் துள்ள காவேரி நீரை சற்றும் மிஞ்சாத படி தட்டி விட்டீர்கள். நான் சிவனின்கட்டிடளைப்படி பொதிகை மலைக்கு செல்லு கின்றேன். அங்க அபிஷேகத்திற்கு நீர் வேண்டும். ஆகவே அருள் புரிய வேண்டும் என்றார். விநாயகர் பாய்ந்து ஓடிடும் காவேரி நீரினை கைகளில் வாரி கமண்டலத்தில் நிரப்பி ஆசிகளை வழங் கினார். அகத்திய முனிவர் பொதிய மலைச் சாரலில் காவேரியை பெருக்கெடுத்து அதன்பின் ஓடச் செய்தார்.

காக்கை வடிவில் கமண்டலத்தை கவிழ்த்து விட்டு, அகத்திய ருக்கு அருளியவர் கண்ணேறு கணபதியாவார்.

அகத்தியரைப் பற்றி வரலாற்று ஆய்வாளர்கள் பல்வேறு கருத்துகளை வழங்கியுள்ளார். அகத்தியரின் பெயரால் பல நூல்களும், வைத்திய முறைகளும், ஞான நூல்களும், பல்வேறு காலங்களில் எழுந்துள்ளன. வரலாற்றுக் கூற்றுகள் எவ்வாறு இருப்பினும் அகத்தியரின் பெருமைக்குரிய பெருமுனிவரே ஆவர்.

அகத்தியர், வழங்கிய நூல்களும் சிலவற்றை உதாரணமாக தருகிறேன். அகத்தியர் வைத்திய சூத்திரம் 1500. அகத்தியர் வைத்திய சிந்தாமணி, அகத்தியர் நாடி சூத்திரம், அகத்தியர் கால ஞான சூத்திரம், அகத்தியர் அகராதி, அகத்தியர் ரன வைத்தியம், அகத்தியர் ரசவாத சூத்திரம், அகத்தியர் மாந்திரீக நிகண்டு அகத்தியர்வர்ம சூத்திரம் போன்ற எண்ணற்ற நூல்கள் அருளி யுள்ளார். அகத்தியர் தமிழுக்குப் பெருமை சேர்த்து 'தமிழ் முனி' என்று சிறப்பினையும் பெற்றுள்ளார். அகத்தியர் மருத்துவத்தைப் பற்றி இரண்டு இலட்சம் பாடல்களும், இரசவாதத்தைப் பற்றி ஒரு லட்சம் பாடல்களும் இயற்றியுள்ளார்.

அகத்தியர், தேவர்வர்க்கத்திலும், சித்தர்கள் வர்க்கத்திலும், முனிவர்கள் வர்க்கத்திலும் இடம் பெற்றிருப்பவர். இவர் கும்பத்தில் தோன்றியதால் 'கும்ப முனி' என்ற பெயருமுண்டு.

**அகத்தியர் வழிப்பட்ட திருத்தலங்களாவன :**

| | | |
|---|---|---|
| **திரு குற்றாலம்** | : | பொதிய மலை தாங்கிய இடம் |
| **திரு ஈயங்கோய் மலை** | : | அகத்தியர் ஈ வடிவத்தில் வழி பட்ட தலம் |
| **திருநல்லூர்** | : | அகத்தியருக்கு திருமணக் கோலத்துடன் பார்வதி காட்சி யருளியது. |
| **திருக் கைலாயபுரம்** | : | சிவபெருமான் திருமணக் கோலத்துடன் அகத்தியருக்கு அருளியது. |

| | | |
|---|---|---|
| திருவேதபுரம் | : | (பாண்டிச்சேரி) இங்கு கடற்கரையில் அகத்தியர் தவமிருந்தார் (தற்போது அரவிந்தர் ஆஸ்ரமம் உள்ள இடம்) |
| திருப்பாண்டிக் கொடுமுடி | : | கொடுமுடி நாதரை விநாயகர் நிறுவி அகத்தியரின் கமண்டலத்தைக் கவிழ்த்து காவிரியை ஓடச் செய்த இடம். |
| திருவீழிமழலை | : | அகத்தியர் தவமிருந்த இடம் |
| திருசாவடி பாளை | : | 'சிவலிங்கம்' ருத்திராட்ச குவியலில் சுயம்பாக வெளிவந்தது. அகத்தியர் பூசித்த இடம். |
| திருநாகேஸ்வரம் | : | அகத்தியர்க்கு 'கும்பேஸ்வரர்' திருத்தலத்தை நாகேஸ்வரன் காட்டியருளிய இடம் |
| திருக்கருப்பூர் | : | அகத்தியர் தவம் செய்த இடம். பொன் செய்யும் மருந்துள்ள தென்ற ஊர். |
| திருவொற்றியூர் | : | அகத்தீஸ்வரர் கோவில். அகத்திய முனிவரால் ஸ்தாபிக்கப்பட்ட 1200 வருடத்திற்கு முற்பட்ட லிங்கமாகும். மூலவர் அகத்தீஸ்வரர், அம்மை இராஜராஜேஸ்வரி |
| அகத்தியான் பள்ளி | : | வேதாரணியத்தின் தெற்கில் 25 கி.மீ. தொலைவிலுள்ளது. சிவபெருமான் திருமண கோலத்தை அகத்தியர் இத்தலத்தில் தரிசித்தார். |

இதுபோன்று அநேக திருத்தலங்கள் உள்ளன.

* * *



# 'விநாயகர்' பெயரால் ஊர்களும், விநாயகர் விஜயம் செய்த நாடுகளும்

தமிழகத்துள்ள ஊர்களின் பெயர்கள் பெரும்பாலானவை. ஏதேனும் ஒரு வரலாறு, பண்பாடு, கலாச்சாரம், கதைகள் சிறப்பான செய்திகள் ஆகியவற்றில் ஒன்றைச் சுமந்து நிற்கின்றன. ஒவ்வொரு ஊருக்குப் பின்பும் ஏதேனும் ஒரு சிறப்புப் பண்பு பரிணமிக்கின்றது.

உதாரணமாகச் சொன்னால், 'திருக்கழுக்குன்றம்' என்ற ஊரின் ஆலயத்தில் வேதகிரீசுவரர், சொக்கம்மன் ஆகிய இரு தெய்வங்களை, பிரசண்டன், சண்டன், சம்புகுத்தன் சம்பாதி, மாகுத்தன், தும்பு, ஆதி ஆகியோர் 'கழுகு' வடிவிலிருந்து வணங்கி சாபநிவர்த்தி பெற்றார்கள். ஆதலால் 'திருக்கழுக் குன்றம்' என்ற பெயர் வழங்கலாயிற்று. மேலும் இன்றைய நாளிலும் ஆலயத்தை வலம் வந்து தினசரி பிரசாதத்தை மதியத்தில் கழுகுகள் உண்பதைக் காணலாம். ஆகவே 'கழுகுகள்' சிவனை வணங்கியதால் 'திருக்கழுக் குன்றம்' என்ற பெயரைப் பெற்றது.

அதுபோலவே சென்னையிலுள்ள 'பறங்கிமலை' (St. Thomas Mount) என்ற 'பிருங்கிமலை' முற்காலத்தில் புகழ் பெற்றது. உண்மை பெயரான 'பிருங்கிமலை' என்ற இன்றைய பறங்கி மலையில் (St. Thomas Mount) சுயம்பு லிங்கமாக விளங்கும் காசிவிஸ்வ நாதரையும், விசாலாட்சி அம்மனையும் 'பிருங்கி முனிவர்' தவம் செய்து 'அருட்காட்சி பெற்றதால். 'பிருங்கி மலை' என்று பெயர் வழங்கலாயிற்று.

பிருங்கிமலைக்கு அருகேயுள்ள 'நந்தம்பாக்கத்திலும் இராமலிங்கேஸ்வரர், பர்வதவர்த்தினி ஆகியோரின் தெய்வத் திருத்தலங்களும், அங்குள்ள திருத்தலத்தின் தீர்த்தம் 'பிருங்கி தீர்த்தம்' என்ற வரலாற்றுச் சிறப்பும் உடையது. 'பிருங்கிமலை'

நந்தம்பாக்கத்திலுள்ள 'இராமலிங்கேஸ்வரர்' 'லிங்கத்தை' ஸ்ரீ இராமபிரான் பிரதிஷ்டை செய்து வணங்கியதால் அவரது திரு நாமத்தையும் இணைத்து 'இராமலிங்கேஸ்வரர்' என அழைக்கப் படுகிறது.

'கன்னியா குமரி' என்ற பெயர் வழங்கக் காரணம் ஒரு சமயம் 'பாணாசுரன்' என்ற அரக்கனின் கொடுமைகளை அழிக்கப் பார்வதி தேவி, குமாரியாக அவதாரம் எடுத்து அரக்கனை அழித்து, தவக்கோலத்தில் கன்னியாக, நின்றாள். அதனால் அவ்வூர் 'கன்னியா குமரி' என்ற பெயரைப் பெற்றது.

வேளாங்கண்ணி அம்மனும், இரஜித கிரீஸ்வரரும் நாகப் பட்டினத்தில் எழுந்தருளி மக்களின் துயர் தீர்ப்பதால் 'வேளாங் கண்ணி' என்ற பெயரால் ஊரின் பெயர் வழங்கலாயிற்று. இங்குள்ள 'லிங்கம்' சுயம்பு லிங்கமாக உருவாகி அருள்பாலிக்கிறது. இக் கோவிலுக்கு இராஜகோபுரமும் உள்ளது. வேளாங்கண்ணிக்குச் சரித்திரப் புகழும் உள்ளது.

பிள்ளையார், விநாயகன், கணபதி ஆகிய பெயரால் விநயா கரின் பெருமையை உணர்த்துவதாக தமிழகத்தில் சில ஊரின் பெயர்கள் அமைந்துள்ளது.

**விநாயக நல்லூர்:** இவ்வூர் காஞ்சிபுரம் மாவட்டத்தில் 'வேடந்தாங்கல் 'மலை வையாவூர்' ஆகிய ஊர்களுக்கு இடையில் உள்ளது.

**'கணபதி'** கோயம்புத்தூர் மாவட்டத்தில் 'கவுண்டம் பாளையம்' அருகில் 'கணபதி' என்ற ஊர் உள்ளது.

**கணபதி பாளையம்;** கோயம்புத்தூர் மாவட்டத்தில் 'வீரப் பாண்டி' கோடங்கி பாளையம் ஆகிய ஊர்களுக்கிடையிலுள்ளது.

**பிள்ளையார்பட்டி :** சிவகங்கை மாவட்டத்தில் திருப் புத்தூர், தென் கறை ஆகிய ஊர்களுக்கு அருகிலுள்ளது.

**பிள்ளையார் நத்தம் :** இவ்வூர் தூத்துக்குடி மாவட்டத்தில் விளாத்தி குளம், சங்கரலிங்க புரம் ஆகிய ஊர்களுக்கருகே உள்ளது.

**பிள்ளையார் நத்தம்:** திண்டுக்கல் மாவட்டத்தில் இரு பிள்ளையார் நத்தமுள்ளது. ஒன்று அயலூர் அருகேயும், பிரிதொன்று 'விரக்கல்' அருகேயுமுள்ளது.

**பிள்ளையார் குளம்:** இவ்வூர் திருநெல்வேலி மாவட்டத்தில் காலக்குடி செவியா நல்லூர் அருகேயுள்ளது.

விநாயகனின் தம்பி முருகனுக்கு அறுபடை வீடுகள் இருப்பது போலவே, விநாயகனுக்கும் அறுபடைகள் வீடுகள் உள்ளன. அவையாதெனில் திருவண்ணாமலை, விருத்தாசலம், திருக்கடவூர், மதுரை, பிள்ளையார்பட்டி, திருநாரையூர் ஆகிய ஊர்களாகும். முருகனுக்கு மாலையணிந்து விரதமிருந்து கோவில்களை தரித்து வருவது போல விநாயகரின் அறுபடை ஊர்களுக்கும் சென்று வரலாம்.

தமிழகத்திலுள்ளது போன்று இந்தியா முழுவதிலும் விநாயகன் பெயரைத் தாங்கி பல ஊர்கள் இருக்கிறது.

## உலக நாடுகளில் விநாயகர்

உலக முழுவதிலும் விநாயகரின் வழிபாடுகள் தொன்று தொட்டு பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பும், இன்றும் இருந்து வருகிறது.

கடற்பயணத்தில் சிறந்து உலகம் முழுவதும் வாணிபத்திற்காகச் சென்றவர்கள் தங்களது பயணம் சிறக்க வேண்டியும், 'விக்னமான'த் தடைகளைத் தகர்த்தெரியவும் விநாயகனை வழிபட்டார்கள். இதன் பெருமையையும் பயனையும் கண்ட அயல்நாட்டினர் விநாயகரால் வசீகரிக்கப்பட்டார். அதனால் உலகம் முழுவ்தும் பல்வேறு சமயத்தினரும், மொழியினரும், நாட்டினரும் வேற்றுமை பாராமல் விநாயகரை விழியில் நிறுத்தி வழிபட்டனர்.



அமெரிக்க நாட்டில் விநாயகப் பெருமானை விவசாய அறுவடை தெய்வமாக வழிபட்டு வருகின்றனர்.

'சமன்லால்' .என்ற வரலாற்

றாசிரியர் எழுதியுள்ள ''இது ஒரு அமெரிக்க'' (This is America) எனும் நூலில் மெக்ஸிகோ போன்ற பெரியநகரங்களில் பண்டைய நாளில் விநாயகர் வழிபாடு இருந்ததற்கான ஆதாரங்கள் பலவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

கி.பி. 414ஆம் ஆண்டில் ஜாவா, பாலி ஆகிய தீவுகளில் பிள்ளையார் வழிபாடு மிகவும் பிரசித்தி பெற்று இருந்ததாக, பிர்பலமான வரலாற்று ஆசிரியரும், சீன யாத்திரிகளுமான 'பாகியான்' தனது பயணக் குறிப்பேட்டில் எழுதியுள்ளார்.

கம்போடியாவில் விநாயகரை 'ப்ரஹ' என்று அழைக்கின்றனர். 'ப்ரஹ' என்றால் கம்போடியா மொழியில் 'முதல்வன்' என்று பொருளாகும்.

கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் அசோக சக்கரவர்த்தியின் புதல்வர் விநாயகர் வழிப்பாட்டைப் பிரசித்தியடையச் செய்துள்ளார்.

சீனாவில் கி.பி. 531இல் குங்-ஷூங் என்ற இடத்திலுள்ள கோவிலில் செதுக்கப்பட்டுள்ள விநாயகர் ஒன்று காணப்படுகிறது. மேலும் சீன துர்க்கிஸ்தானில் விநாயகர் பைஜாமா உடையணிந்து சிறிய தலையனை மீது சாய்ந்தபடி அமர்ந்துள்ளார். தமிழில் பண்டைய இலக்கியங்களில் விநாயகர் துதியுடன், காப்புச் செய்யுள் துவங்குவது போலவே, ஜப்பானிய மொழி இலக்கியங்களிலும் 'ஷோடன்' துதிப்பாடல்கள் அமைந்துள்ளன.

உருது நாடான ஆப்கானிஸ்தானின் தலைநகரம் காபூலாகும். இதிலிருந்து பத்து மைல் தொலைவில் உள்ளது 'சகர்தார்' என்ற ஊராகும். இவ்வூரில் பூமியைத் தோண்டும்பொழுது அழகிய பளிங்குக் கல்லால் ஆன வலம்புரி விநாயகர் நின்ற நிலையில் சிலையொன்று கிடைத்துள்ளது. அதுபோன்றே ஆப்கானிஸ்தானின் மற்றொரு ஊரான 'கர்டஸ்' என்ற ஊரிலும் குப்தர்கள் காலத்திய விநாயகர் சிலையொன்றும் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

கேரளநாட்டில் திருவாங்கூர் செல்லும் வழியில் 'திருமணிக் கூடம்' என்ற வைணவ கோவில் உள்ளது. இங்கு இராமபிரான்

தலைமையில் அஸ்வமேத யாகம் நடந்தது. இதில் நான்காயிரம் முனிவர்கள் பங்கேற்று வழிப்பட்டனர். இங்கு சுயம்பாக விநாயகர் தோன்றியுள்ளார். அதனால் 4001 விநாயகர் என்று அவருக்குப் பெயர் எற்பட்டது. மேலும் விநாயகனுக்கு அபிஷேகம் செய்யும் நீர் விநாயகர் சிலைக்குள்ளேயே சென்று விடும் அற்புதம்.

இத்தாலி நாட்டில் 'ஜேனஸ்' என்ற பெயரால் விநாயகர் அழைக்கப்படுகிறார். அதனால் பண்டைய ரோமர்கள் 'ஜோன்ஸ்' என்ற முதற் கடவுளை வணங்கிவிட்டு காரியங்களைத் துவக்கினர்.

திபெத் நாட்டு மக்கள் விநாயகனைத் தேவிவடிவத்திலும், 'கணேசாயினி' என்ற உருவத்திலும் வழிப்பட்டார்கள்.

புத்தமதம் சிறந்தோங்கும் பர்மா நாட்டில் இந்து தெய்வங் களிலேயே விநாயகருக்கு மட்டும் தான் புத்தரின் ஆலயத்தில் இடமளிக்கப்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி புத்தபிரானை காக்கும் கடவுளாக 'விநாயகனை' வழிபட்டு வருகின்றனர். பர்மாவில் கணபதிக்கு 'மாகாபைனி' என்று பெயர். மாங்கோலி யாவில் விநாயகனின் வடிவம் நெற்றியில் செந்தூர பொட்டும் நீண்ட தலையின் மீது கிரீடமும், கரங்களிலே சூலமும் தாங்கி எலி வாகனத்தின் மீது ஏற்றமிகு வடிவத்தில் அமர்ந்து காட்சி தருகிறார்.



போர்னியாவில் விநாயகர் தாமரை ஆசனத்தில் அமர்ந்துள் ளார். இடம் புரியாக தும்பிக்கை. இடது கரத்திலுள்ள மோத கத்தை எடுக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

இலங்கையில் அனைத்துச் சமயத்தினரையும் அரவணைக் கும் விநாயகராக காளிகாமடு

கற்பக விநாயகரும் கதிர்காம கணபதியும் காட்சியருளுகிறார்கள். சீனாவில் துர்க்கிஸ்தானில் அந்நாட்டு கலாச்சாரமுடன் ஐக்கியமாகிக் காட்சி தருகிறார். ஜப்பானிய மக்கள் விநாயகரை அவர்களது மொழியில் 'கோன் கிட்டான்' என நேசமுடன் அழைக்கின்றனர்.

நியூயார்க்கில் 'ஸ்ரீ மஹா வல்லபை கணபதி' என்ற ஆலயத்தை "தி ஹிந்து சோஸைட்டி ஆப் வட அமெரிக்கா" என்ற அமைப்பால் உருவாக்க்பபட்டுள்ளது.

சிங்கப்பூர் மலாக்காவில் 1640 இல் பொய்யாத விநாயகர் திருக்கோவில் கொண்டார். இந்தோனேஷியாவில் ஆயிரமாண்டு பிள்ளையார் என்ற காரணப் பெயரோடு கூடிய விநாயகர் உள்ளார். இந்தோனேஷியாவில் விநாயகருக்கு 'ஆமை வாகனம்' அமைந்துள்ளனர். வீட்டினுள் ஆமை நுழைந்தால் அந்த வீடு விளங்காது என்பது தென்னிந்திய மரபு. அவ்வாறு வீட்டினுள் வந்துவிட்டால் வாசலருகில் பிள்ளையார் கோயில் கட்ட வேண்டும். ஆனால் இந்தோனேஷியாவில் இதற்கு நேர்மாறானது. ஆமை மீது நின்று கொண்டிருக்கும் விநாயகன் படத்தை வீட்டின் வாசல் அருகில் வைத்தால் வீடு செழிப்பாக இருக்கும் என்பது நம்பிக்கை. மேலும் வீட்டினுள் ஆமையை வளர்த்தும் வருகின்றனர். ஆப்கானிஸ்தானத்திலும் விநாயகர் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே கோயில் கொண்டுள்ளார்.

விநர்யகர் விஜயம் செய்யாத நாடுகளே இல்லை என்று கூறலாம். புராண காலத்திலிருந்து புறப்பட்டு, நவீன கர்லமான கணிப்பொறி கலியுகம் வரை காலுன்றி கொண்டே செல்கின்றார். வினைகளை வெல்கின்றார். மனித மனங்களை அள்ளுகின்றார்.

* * *



# விநாயகர் சதுர்த்தியும், சங்கடஹர சதுர்த்தியும்!

ஒவ்வொரு தமிழ் வருடத்திலும் ஆவணி மாதம், வளர் பிறையில் நான்காம் நாள் (சதுர்த்தி) வருவது தான் 'விநாயகர் சதுர்த்தி' விரதமாகும். விநாயகர் சதுர்த்தி விழாவை எல்லை யில்லா மகிழ்ச்சியுடன் எல்லோரும் கொண்டாடி வருகின்றார் கள். இந்து சமயத்தின் ஆறு உட்பிரிகளில் ஒவ்வொரு சமய நெறியும் ஒவ்வொரு முதன்மை தெய்வங்களாகி நின்று மானு டர்க்கு சித்தி, முக்தி, பக்தி, சக்தியை அருளுகின்றன.

வாழ்வியலின் இருளை போக்கி நிற்கின்றன.

'காணா பத்தியம்' என்ற சமய நெறியில் முழுமுதற்கடவுளாக விநாயகர் இருக்கின்றார்.

'சைவை' சமயத்தில் சிவனே செஞ்சுடராகி சிந்தையுள் வைத்து வணங்குகிடுவர்.

'வைணவத்தில் வாழ்வின் வழித் துணையாயக 'திருமாலை'த் துதித்திடுவர்.

'சாக்தம்' என்ற சமய நெறியில் சக்தியை சதாகலாமும் பூஜித்து புவிதனில் வாழ்வர்.

'சௌரம்' என்ற சமயநெறி வழிபாட்டில் 'சூரியனான' ஆதவனையே அனுதினமும் நெஞ்சில் நிறுத்தி உலக வாழ்வை விஞ்சிடுவர். 'கௌமாரம்' என்ற சமய நெறியின் வழிவந்தோர் தீப்பொறியில் தோன்றிய வரும் என்றும் தெவிட்டாத ஞானத் தைத் தருபவருமான முருகக் கடவுளை முப்பொழுதும் வணங்கிடுவர்.

இவைகள் 'இந்து சமயம்' என்ற ஆரஞ்சு பழத்தினுள் தனித்தனியே உள்ள சுளைகளைப் போல் 'ஷட்' சமயங்களாக

மானிடர்களின் 'மாய' வாழ்க்கையை நேயப்படுத்துகின்றன. 'சட்' சமய தெய்வங்களின் அவதாரக் கதைகளும், புராணக் கதைகளும், புண்ணியக் கதைகளும், மண்ணின் மாந்தர்களை விண்ணளவு உயர்திட வேண்டி முனிவர்களால் உதிரத்தில் தோய்த்து, உலகத்திலும் உள்ளத்திலும் எழுதப்பட்டன. அவற்றில் பாவ, புண்ணிய கதைகளும், கோப சாபக் கதைகளும், தூப, தீபக் கதைகளும், ஆசை, பூசை கதைகளும், சொர்க்க நரக கதைகளும், சூட்சம், மோட்சம்கதைகளும், விரத, துரிதகதைகளும்அடங்குகின்றன.

பொற்கொல்லன் பட்டறையில் அடுப்பினலே அகப்பட்ட தங்கத்தைப் போன்று சுத்தியிலும், கூர்வாளும், கொடும் நெருப்பிலும் வெந்து, நொந்த பின் அழகாக ஜொலிக்கும் ஆபரணத்தைப் போன்று 'சமயம்' என்ற நெருப்பில் விரதம், பூசை, தர்மம், உபவாசம், ஞானக் கதைகள் இவைகளால் மனிதனின் மனம், உடலும் சமயத்தால் சமன்படுத்தப்பட்டு, பொன்னொளி போல புத்தொளி பெறுகின்றான். கதைகளினாலே மனிதனின் மனதில் ஞான விதைகள் விதைக்கப்படுகின்றது. 'விநாயகர் சதுர்த்தி' கதையும் அத்தகைய ஒன்று தான்.

ஒரு முறை பார்வதி தேவி தட்சனின் மகள் தாட்சாயினி அவதரித்து, அதன் பின் சிவபிரானைத் திருமணம் செய்து கொண்டாள். கயிலாயத்தில் களிப்போடு வாழ்ந்து கொண்டிருந்த தாட்சாயினியான தன் மகளைப் பார்ப்பதற்கு தட்சன் வந்தான். அவ்வேளையில் தன் மருமகனாக சிவபிரான் எழுந்து நின்று தனக்கு மரியாதை செய்ய வில்லை... எனக் கோபத்தால் மமதை கொண்டான். ஆகவே சிவனை விட தானே உயர்ந்தவன் என்பதை உணர்த்த வேண்டும். என கங்கணம் தட்டிக் கொண்டு வேள்வி ஒன்றைச் செய்தான். அவ்வேள்வி விழாவிற்கு இந்திரன், திருமால் ஆகியோரையும் மற்றும் தேவர்களையெல்லாம் அழைத்தான்.

ஆனால் தனது மருமகனான சிவபிரானையும், மகளான தாட்சாயினியையும் வேள்விக்கு அழைக்கவில்லை. பாசத்தால் பட்டு கெட்டு நொந்து போவது தான் பெண் புத்தியாகும். என்பதற்கிணங்க தன் கணவனாக சிவனின் சொல் கேளாமல்

அழையா வீட்டிற்கு நுழையா விருந்தாளியாக தாட்சாயினி தன் தந்தையின் வேள்விக்குச் சென்றாள்.

அங்கோ தன் தாயும், தந்தையும் மகளென்று அறிந்தும் பாராமுகமாக நின்று பழித்தனர். இதனால் கோபம் கொண்ட தாட்சாயினி "வேள்வி நடக்குமிடம் வேதனைக் கூக்குரலிடும் சுடுகாடாக மாறாட்டும்' என்று சாபமிட்டுச் சென்றாள். பிறகு தன் கணவனான சிவனிடம் இதனைக் கூறி கலங்கினாள். பின் தன்தவற்றை உணர்ந்து தலை வணங்கினாள்.

சிவனோ, நடந்ததை அறிந்து சிவந்த கண்களுடன் ருத்திர தாண்டவ மாடி வீரபத்திரனை விழிகளிலிருந்து படைத்து வீரபத்திரனை தட்சணின் வேள்வி சாலைக்குச் சென்று, அனைவரையும் கொன்றுவிட்டு வென்று வர உத்தரவிட்டார். வீரபத்திரனும் வெற்றியுடன் காரியத்தை முடித்துத் திரும்பினான். உலக நலன்கருதி சிவனுக்கு மீண்டும் கோபம் தணிந்து கொன்றவர்களையும் தேவர்களையும், உயிர் பெறச் செய்து, இனி இது போன்று தவறானவர்களோடு சேர்ந்து தவறான காரியங்களுக்கு துணைபோகதீர்கள் எனக் கட்டளையிட்டான்.

அகம்பாவத்தால் அறிவிழந்த தட்சணின் தலையை மாற்றி அவனது உடலின் மீது ஆட்டுத் தலையை வைத்தார் சிவன். தலைக் கனம் கொண்டால் உண்மை தலையை இழப்பதே தண்டனை என்று கூறி தட்சனை உயிர் பெறச் செய்தார்.

தட்சனுக்கு மகளாகப் பிறந்து தவறான காரியத்தில் ஈடுபட்டதால், தன் கணவனான சிவபிரானை அவமதித்து சொற்கேளாமல் வேள்விக்கு சென்று விதிவசப்பட்டு விட்டோம். இதனை உலகம் என்றுமே பழிக்கும் என தீவிர தியானத்தில் ஈடுபட்டு, யோக ஜோதியால் சொரூபமாகிவிட்டாள்.

அதன்பின் பர்வதராஜனின் புத்திரியாக பார்வதி தேவி வேறு உருவில் அவதரித்தாள். குழந்தைப் பருவத்தைக் குதூகலமாக விளையாட்டில் கழித்து, நாளொரு மேனியும் பொழுதொரு வடிவமாக வளமுடன் மணப்பருவத்தை அடைந்தாள். அப்போது தன் தந்தையான பர்வதராஜனிடம், பார்வதி தேவி "தந்தையே

நான் சிவபிரானை கங்கைதேவி திருமணம் செய்வதற்கு முன்பாக திருமணம் செய்து கொள்ள வேண்டும். அதுவே எனது ஆசை. அது நிறைவேற எனக்கு தாங்கள் அறிவுரையும், விரத முறையையும் திருவாயால் மலர்ந்தருள வேண்டும் என வேண்டினாள்.

அதற்கு பர்வத ராஜன், பார்வதி தேவியிடம் கூறினான். 'மகளே எண்ணியதை ஈடேற்றி, எக்காலமும் உன்னை வாழ் விக்கும் விரதமொன்றுள்ளது. அதுவே விநாயகரின் 'சதுர்த்தி விரத பூசையாகும். அதை நீ செய்தால் தடைபடும் காரியங்களெல்லாம் தவிடு பொடியாகி தாங்கவொண்ணா மகிழ்ச்சி அடையச் செய்யும். விநாயகர் சதுர்த்தி விரதமானது. முக்காலத்தையும் உணர்த்தி, மூன்று தெய்வத்தையும் உனக்குக் காட்டி, தப்பாத வினையெல்லாம் உன்னை விட்டுவிலகி அப்பால் சென்று விடச் செய்யும் விரதமாகும். அவ்விரதத்தை எவ்வாறு செய்வது என்பதைக் கூறி நின்றேன்' என்று பர்வதராஜன் விநாயகர் சதுர்த்தி விரதத்தின் மகிமையை, பார்வதி தேவிக்கு விளக்கினான்.

ஆவணி மாதம் வளர்பிறையில் வரும் நான்காம் நாள் விநாயகர் சதுர்த்தி விரதத்தைத் துவங்கிச் செய்தல் வேண்டும். அதிகாலையில் நீராடி விட்டு அன்று மலர்ந்த பூக்களையெல்லாம் ஒன்று சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும். அதன்பின் சுத்தமான இடத்திலிருந்து தூய மண்ணைக் கொண்டு வந்து விநாயகப் பெருமானை ஆகம விதிபடி செய்ய வேண்டும். அந்நாளிலிருந்து வேள்விகளும், பூசைகளும் தொடர்ந்து உபவாசத்திலிருந்து மனதை ஒரு நிலைப்படுத்திச் செய்ய வேண்டும். இதுபோன்று அடுத்த மாதமான புரட்டாசி மாதம் வளர்பிறை சதுர்த்தி வரையிலும் முப்பது நாட்களும், பூசை செய்ய வேண்டும். அதன் பிறகு தச வாத்தியங்களுடன் ஆடல், பாடல், பூஜைகளுடன் ஊர்வலமாக எடுத்துச் சென்று மண்ணினால் செய்யப்பட்ட விநாயகனை நதியிலோ, குளத்திலோ, கடலிலோ கலந்திட செய்ய வேண்டும். விநாயகரை ஒரு திருவுருத்தாலும் செய்திட லாம். அல்லது ஆயிரத்தெட்டு வடிவங்களாலும் உருவாக்கி 'விநாயகர் சதுர்த்தி' விரதத்தை அனுசரிக்கலாம், என்று பர்வதராஜன். தன் புத்தியான பார்வதி தேவியிடம், சிவனை

அடையும் விரதமாகவும், தடைகளைக் களைந்து குறிக்கோளை அடையும் விரதமாகவும் 'விநாயகரின் சதுர்த்தி' விரதத்தைக் கூறினார்.

'பார்வதி தேவி' தனது தந்தையான பர்வதராஜன் கூறிய படியே விநாயகர் சதுர்த்தி விரதத்தை முறைப்படி செய்து பரமசிவனைத் திருமணம் செய்து கொண்டாள். தட்சன் மகளாகப் பிறந்த சாபம் நீங்குவதற்காக பர்வதராஜனின் மகளாக பிறந்து விநாயகச் சதுர்த்தி விரதத்தில் விதிமாற்றம் பெற்றார் பார்வதி தேவி.

ஒருமுறை கைலாயத்தில் தேவர்களும், முனிவர்களும், கூடியிருந்த சபைதனில் சிவபெருமான், பார்வதி தேவி, விநாயகரும் ஒன்றாக அமர்ந்திருந்தனர். அப்போது சிவனின் இளையமகனான சுப்பிரமணியான முருகன் தந்தையே விரதங்கள் எத்தனையோ உள்ளன. அவைகளில் முதன்மையானதும், எளிதில் எல்லோராலும் பின்பற்றக் கூடியதுமான, அநேக நன்மைகளைத் தரக்கூடியதுமான விரதமொன்றைச் சொல்லியருள வேண்டும், என்று வேண்டினான். அதற்கு சிவபெருமான் 'விநாயகர் சதுர்த்தி விரதத்தின் பெருமையையும், அதனால் கிடைக்கும் சகல நன்மைகளையும் எடுத்துக் கூறினார். ஆகவே எல்லோராலும் ஏகாந்தமனத்துடன் செய்யக்கூடிய எளிய விரதமுறையாகும். அதனால் 'விநாயச் சதுர்த்தி விரதம்' பல்லாயிரக் கணக்கான வருடங்களாகத் தொன்று தொட்டு கொண்டாடப்பட்டு வருகிறது.

விதியின் வெம்மை அம்பினை மதியின் யோகத்தால் மாற்றி அமைக்கலாம் என்ற கதையுமுண்டு.

ஒரு சமயம் கலபன் என்ற அரசனும், அவனது மனைவியான சுபத்திரை என்று அரசியும், மது சூதனன் என்ற கொடும்பசியா கிருந்த அந்தணன் ஒருவனாள், கொடிய சாபத்திற்கு ஆளானார் கள். அவர்கள் ஒருவரை ஒருவர் கோபத்தால் சாபமிட்டுக் கொண்டதால், அரசன் எருதாகவும், அரசி புலைச்சியாகவும், அந்தணன் கழுதையாகவும் உருவெடுத்து விட்டு உருக்குலைந்து காட்டில் அலைந்து கொண்டு திரிந்தர்ர்கள். அப்போது கொடிய

மழையும், இடியும் சேர்ந்து வாட்டியதால் தூரத்தில் தெரிந்த விநாயகரின் ஆலயத்தில் அடைக்கலம் புகுந்தனர். புலைச்சியின் கைகளிலிருந்த அருகம் புல்லைத் திண்பதற்கு எருதும், கழுதையும் போட்டிப் போட்டுக் கொண்டு அலைந்த போது அருகம்புல் விநாயகரின் மீது வீழ்ந்து கொண்டேயிருந்தது. இம்மூவரின் குரலும் கோவிலில் கொலைக்களம் போல கேட்டதால் ஊர் மக்கள் ஒன்று கூடி நையப்புடைத்தனர். இதனால் இம்மூவரின் உயிரும் பிரிந்தது. அன்றைய தினம் விநாயகர் சதுர்த்தி, தினமானதால் அம்மூவரும் உய்யும் வழியாக சொர்க்கத்திற்கு சென்று சாபம் நீங்கி மீண்டும் முந்தையப் பிறவியை அடைந்தனர்.

ஆகவே எவ்வளவு இழிந்த நிலையிலும் வறுமையிலும் விநாயகர் சதுர்த்தி விரதத்தை முடிந்தளவு செய்ய வேண்டும். அவ்விரதம் செய்தால் விடிந்து விடும் வாழ்க்கையும், மடிந்து விடும்சாபமும். செல்வ விநாயகரின் அருளால் செல்வங்கள் செழித்தோங்கும்.

விநாயகர் சதுர்த்தி விழா பழங்காலம் தொட்டே கூட்டாக வழிப்பட்டு வந்தார்கள். நவீன காலத்தில் ஊர் திருவிழாவாகவும் மக்களின் மனதில் ஏகத்தத்துவம் நிரம்பிய விழாவாகவும் 1895ஆம் ஆண்டு முதன் முதலில் மும்பையில் சுதந்திர வேள்வி தீயை ஊட்டிய பறிமான் பால கங்காதர திலகர் துவக்கிவைத்தார்.

## சங்கட ஹர சதுர்த்திவிரதம்

உடல் நோய் தாக்கினால் உவந்த மருத்துவரிடம் காண்பித்து நோய் தீர்க்கலாம். உள நோய் தாக்கினால் உளவியல் மருத்துவரிடம் (Psycholist) உளநோய் போக்கலாம். ஆனால் பிறவியெனும் பிணியைத் தீர்ப்பதற்கும் பெருத்த துன்பங்களிலிருந்து நம்மை காப்பதற்கும் வாழ்வின் சங்கடங்களை சருகுகளாக மாற்றுவதற்கும் உள்ள ஒரே வழி தான் **'விநாயகரின் சங்கட ஹர சதுர்த்தி'** விரதமாகும்.

ஆற்றொண்ணா துயரத்தால் அலைக் கழித்து அடங்கிடுவோரை, ஆற்றோர விநாயகரே ஆர்ப்பரித்துக் காத்து நிற்பான். சோற்றுக்கே சுணங்கி நின்று சுருதியின்றி அழுவோரை சூட்சும

பொருளாய் வந்து சுகம் பெறச் செய்வான் விநாயகன். வறுமை வந்து வதைத்துக்கும் பொழுது வாயாற அழைத்தால், கருமைநிற கணபதியும்க காப்பாய் வந்து நிற்பான். தீயச் செயலால் மன வருந்துபவர்களையும். ஓயாப் பார்வையால் காத்து, நேயமான வாழ்விற்கு நெறிபடுத்துவான் விநாயகன்.

வேடர் குலத்தில் பிறந்து கொடியத் தீயச்செயலால் வனத்தில் வருவோரை வதைத்துக் கொண்டிருந்தான் 'விப்பிரதன்' என்ற வேடன். ஒரு நாள் காட்டின் வழியே வந்த முனிவர் ஒருவரைக் கொள்ளையடித்து, வெட்டி வீழ்த்த எண்ணினான். எண்ணியதை ஈடேற்றக் கொலை வாளை ஓங்கினான். முனிவரும் தன் முகத்தின் அருட்பார்வையால் அவனை ஆட்கொண்டு அருளினார்.

'விப்பிரதனோ' உன் பாபங்கள் இனி தொலையட்டும். நான் கூறும் கணேச மந்திரத்தையும், விரதத்தையும், வைராக்கியத் துடன் செய்து வாழ்வை மாற்றி அமைத்துக் கொள்வாயாக என்று உபதேசித்தார். 'விப்பிரதன்' என்ற கொடிய வேடனும் யோக தவத்தால் இறையருள் பெற்று 'புருசுண்டி' என்ற மிகப் பெரிய முனிவராகி முக்காலமும் விநாயகனை சிந்தையுள் வைத்து தவம் செய்து கொண்டு வந்தார்.

ஒருமுறை 'நாரதர்' நகர் வலம் போல் எமதர்மராஜனின் எமலோகத்திற்கு எதேச்சையாக சென்றார். அங்கு எமதர்மராஜன், நாரதரை புன்னகை பூத்த முகத்துடன் எதிர்கொண்டு வரவேற்று உபசரனை செய்தார். நாரதரும் மிக மகிழ்ந்து தங்களது எமலோ கத்தில் எத்தனை மாற்றங்களும், ஏற்றங்களும் உள்ளன என்பதை கண்டறிய ஆவல் கொண்டு அடியேன் வந்தேன், என்றார்.

எமதர்மராஜனும் மிக்க மகிழ்ச்சியடைந்து 'வாருங்கள்' போகலாம் நாரதரே, எங்களது எமலோகத்தில் இருபத்தெண் கோடி பிரிவுகளில், பாவிகளின் ஆவிகள் அலற வதைக்கப்படு கின்றோம் என்று கூறி ஒவ்வொன்றாகக் காண்பித்தான். நாரதரும் தன் நற்கண்கள் கூசவே ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே வந்தார்.

அப்பொழுது மேற்சொன்ன புருசுண்டி முனிவரின் சுற்றத் தினரெல்லாம் 'கும்பீபாகம்' என்ற நரகத்தில் 'நா'தழுதழுக்க

வதை படுவதை வைத்த கண்கள் வாங்காமல் பார்த்துவிட்டு மனம் வேதனையடைந்தார். அதனை எமதர்ம மகாராஜனிடம் வெளிக் காட்டிக் கொள்ளாமல் 'ராசனே' தங்களது எமலோகத்தில் அனைத்தும் பார்த்து விட்டோம். இனி நான் விடைபெற்று செல்கிறேன் என்று கூறி நாரதர் புறப்பட்டார். பிறகு வேகமாக 'புருசுண்டி' முனிவரின் ஆசரமத்திற்கு வந்து மகா முனிவரே தாங் களோ விநாயகரின் அருளாளே நற்கதியை அடைந்துள்ளீர்கள். ஆனால் உங்களது உறவினரெல்லாம் நரகத்தில் நாதியின்றி நசுக்கப்பட்டு, வேதனையால் வெளிறிப் போயுள்ளனர். நேற்று நான் எமலோகத்தில் இதனைப் பார்த்தேன். ஆகவே உங்களது உறவினரை எமவதையிலிருந்து நீங்கள் காப்பற்றிக் கொள்ள வேண்டும். உடனே முயற்சி செய்யுங்கள் என்று கூறி விரைந்தார்.

'புருசுண்டி' முனிவர் முறையாக 'சங்கடஹர சதுர்த்தியை' இயம, நியம, நிஷ்டைகளோடு ஆகம விதிப்படி செய்தார். அதன் காரணமாக எமலோகத்திலிருந்த 'புருசுண்டி' உறவினர்களெல் லாம் தெய்வீக விமானத்திலேற்ற தெய்வலோகத்தில் சுகமாக வாழ வைத்தார் விநாயகப் பெருமான்.

அநேக சங்கடங்களைப் போக்கும் 'சங்கட ஹர சதுர்த்தி' விரதத்தை எவ்வாறு கடைபிடிக்க வேண்டும் என்று கூறுகின்றேன் கேளுங்கள். தமிழ் வருடத்தில் வரும் மாசி மாதம் தேய் பிறையில் செவ்வாய் கிழமையன்று வரும் சதுர்த்தியில், 'சங்கட ஹர சதுர்த்தி விரத்தைத் துவங்க வேண்டும்.

விடியற் காலை பிரம்ம முகூர்த்த நேரத்தில் எழுந்து, இரவில் ஊறிய உமிழ்நீலை வாயிலிருந்து வெளியில் துப்பிவிட்டு, தலைக் குளியல் செய்து அங்க சுத்தி செய்ய் வேண்டும். இயம, நியம, நிஷ்டைப் படி கிழக்கு அல்லது வடக்கு திசை நோக்கி திருநீரை திரிசூல விரலில் குழைத்துத், தலையை சற்று பின்புறம் சாய்த்து முகம் மேல் நோக்கி பார்த்துநிலையில் நெற்றியில் திருநீரை அணிய வேண்டும். திருநீறு கீழே சிந்துதல் கூடாது. செல்வம் சிந்தித்து போகும். அணிய விரும்புகிற விரத மஹா பக்திமான்கள். உடம்பான கோவிலில் 18 இடங்களில்திருநிறை திரிசூல விரலால் அணியலாம். திரும்மேனியில் அணிவதற்கான 18 இடங்களாவன.

(1) சிரசின் நடுவிலும் (2) ஞானம் தரும் நல் நெற்றியிலும் (3) திருமார்பிலும் (4) நாபிக்கு நான்கு விரல் மேலேயும், (5) இடது தோளிலும், (6) வலது தோளிலும் (7) இடது கை மணிக்கட்டு (8) வலது கை மணிக்கட்டு (9) இடது கை மத்தியிலும் (10) வலது கை மத்தியிலும் (11) இடது பக்க இடுப்பிலும் (12) வலது பக்க இடுப்பிலும் (13) கழுத்தினைச் சுற்றிலும் (14) வலது காது நுனியில் ஒரு பொட்டும் (15) இடது காது நுனியில் ஒரு பொட்டும் (16) முதுகின் கீழேயும் (17) இடது காலின் மத்தியிலும் (18) வலது காலின் மத்தியிலும் அணிதல் வேண்டும். இவை ஆணும் பெண்ணும் அவர்அவர் வசதிக் கேற்பவும், சூழ்நிலைக்கு ஏற்பவும் பின்பற்றலாம்.

இங்கு கூறப்பட்டிருப்பது பண்டைய ஞானசித்திகள் பெற்றவர்களின் அனுபவ முறையாகும். வேடதாரிகள் போலல்லாமல் முழு மனத்துடன் மந்திரத்தை மனத்துள் அசைத்தபடி திருநீற்றை அணிதல் வேண்டும்.

திருநீறால் உடலின் தோலிலுள்ள நச்சுக் கிருமிகள் அணுகாமல் தடுக்கப்படுகின்றன. உடலில் அறுவெறுக்கத்தக்க நாற்றங்கள் மாறி, வாசனையாக உடல் மாறும். திரு நீற்றின் அணுக்கூறுகள் தலைவலி, ஒற்றைத் தலைவலி, முகத் தேமல் இவைகளை குணப்படுத்தும் ஆற்றல் மிக்கன. நீண்ட நாள் நோய்கள் உள்ளவர்களுக்கு நீண்ட நாட்கள் திருநீறு அணிந்து வந்தால் குணம் நிச்சயம் தெரியும். இதனை சித்தர்கள் ஞானபஸ்பும் என்று அழைப்பர்.

தினசரி காலை திருநீறு அணிபவரை, தீய பழக்கங்கள் தீண்டாமலும், தீய எண்ணங்களின் ஒளி வட்டம் தாக்கமலும் தடுக்கப்படும் இன்னும் எத்தனை நல்ல பயன்கள் திருநீறு திருமேனியில் அணிவதால் நாளும் கிடைத்துக் கொண்டேயிருக்கும். சித்தர் திருநீற்றில் மந்திரங்களை உருவேற்றி நீரில் கலந்து பல நோய்களுக்கு உள் அருந்தும் பற்ப மருந்தாக அருளியிருக்கிறார்கள். ஆகவே 'திருநீறு' மிகவும் அற்புத ஆற்றல் மிக்கது.

அதன்பிறகு பூசை அறையில், அல்லது தங்களுக்கு ஏற்ற இடத்தில் தரையில் வெள்ளைத் துணியை மடித்து இருக்கையாக விரிக்கவும். வடக்கு, அல்லது கிழக்கு நோக்கி அமர்ந்து

கொள்ளவும். இன்னும் சிறப்புடன் சித்தி பெற வேண்டுமானால் பத்மாசனம், சித்தாசனம் கோமுகாசனம், வஜ்ஜிராசனம், சுகாசனம் ஆகியவற்றில் ஏதேனுமொரு யோகாசனத்தை போட்டுக் கொண்டு விரிப்பின் மீது அமர்ந்து கொள்ளவும். தங்களுக்கு எதிர்முகமாக விநாயகர் சிலையோ, அல்லது விநாயகர் திருவுருவப் படமோ வைத்துக் கொள்ளவும். அது போன்றே உத்ராட்சம், சந்தனம், துளசி, தாமரை மணி, நவரத்ன மாலை, ஸ்படிக மணி ஆகிய ஏதேனுமொரு ஜபமாலை கைகளில் வைத்துக் கொள்ளவும். பிறகு கண்களை மூடி புருவ மத்தியில் தியானம், ஜபம் செய்ய வேண்டும்.

விநாயகருடைய மூல மந்திரங்களில் மிக முக்கியமான பதினாறு மந்திரங்களில் தங்களுக்கு மனதிற்கு பிடித்த ஏதேனு மொரு மந்திரத்தை தேர்ந்தெடுத்து, அதனையே 108 முறை திரும்பத் திரும்ப ஒலி நயத்தோடு உச்சரிக்க வேண்டும். தியானத்தின் போது பதட்டமோ, அவசரத் தன்மையோ, இருக்கக் கூடாது. ஒரே சீராக வீணையிலிருந்து எழும் நாதத்தைப் (Rhythem) போல வெளிப்பட வேண்டும். 108 முறை உச்சரித்து முடிய குறைந்தத 10 நிமிடங்கள் ஆக வேண்டும்.

| | |
|---|---|
| ஓம் சுமுகாய நமஹ | ஓம் தூபகேதுவோ நமஹ |
| ஓம் ஏகதந்தாய நமஹ | ஓம் கணாத் யஷாய நமஹ |
| ஓம் கபிலாய நமஹ | ஓம் பால சந்திராய நமஹ |
| ஓம் கஜகர்ணிகாய நமஹ | ஓம் கஜானனாய நமஹ |
| ஓம் லம்போதராய நமஹ | ஓம் வக்ரதுண்டாய நமஹ |
| ஓம் விநாயகாய நமஹ | ஓம் சூர்ப்ப கர்ணாய நமஹ |
| ஓம் விக்கின ராஜாய நமஹ | ஓம் ரம்பாய நம |
| ஓம் கணபதியே நமஹ | ஓம் ஸ்காந்த பூர்வ ஜாய நமஹ |

இதனோடு கூடவே ஏகாரமென்ற 'ஓங்காரத்தை தனியே தியானம் செய்யலாம். ஆறெழுத்து மந்திரத்தையும் தியானம் செய்யலாம். பூசை நேரங்களில் மேற்சொன்ன 16 மந்திரங்களை சேர்த்து பூசையை நிறைவு செய்யலாம். தியானம் முடிந்த பிறகு இரு உள்ளங்களையும் ஒன்றை ஒன்று உரசிக் கண்களை திறந்து பார்க்கவும் பிறகு எதிரில் உள்ள விநாயகனை உடல், மனம்,

வாக்கால் நினைக்கவும் பகற் பொழுதில் நற்பணிகளில் ஈடுபட வேண்டும். அன்றைய தினம் முடிந்தளவு உண்ணா நோன்பினைக் கடை பிடிக்க வேண்டும். உடல் பலஹீனமாக இருந்தால் எளிய பால் பழங்களையும், பழரசத்தையும் உண்ணலாம். கண்டிப்பாக பேரீச்ச பழத்தை உண்ணக் கூடாது ஏனெனில் அது பிரம்மச் சாரியத்தை தவறச் செய்துவிடும். மேலும் எண்ணங்களில் ஏற்றத்தை உண்டாக்காது. 'சங்கட ஹர சதுர்த்தி' விரதம் அன்று மாலை சந்திரன் உதயமாகும் சமயத்தில் விநாயகரை முன் மீண்டும் பூசைக்குரிய பொருட்களை வைத்து நிவேதனத்துடன் பூசையை முடிக்க வேண்டும். அன்னதானமும், தர்மமும் அன்று செய்ய வேண்டும்.

விரத நாளிரவு கண் விழித்து விநாயகனின் மகத்துவத்தையும், தெய்வீக கதைகளையும் நினைவில் சிந்தித்தப் படி அல்லது நூல்களைப் படித்தவாறு இருக்க வேண்டும். இதே போன்று ஒவ்வொரு மாதமும் தேய்பிறையில் வரும் 'சதுர்த்தி' நாளிலும் சந்திரோயத்தில் தொடர்ந்து சங்கட ஹர சதுர்த்தி விரதத்தைக் கடைபிடித்து வரவேண்டும். 'சங்கட ஹர சதுர்த்தி, தொடர்ந்து பன்னிரண்டு முறை சதுர்த்தி விரதம் கடைபிடித்தால் சகல சங்கடங்களும் ஒழிந்து மங்கலம் பொங்கும் வாழ்வில். தீர்க்க முடியாத தடைப்பட்ட காரியங்களும், விதி வசப்பட்டு வேதனை அனுபவிப்பவர்களுக்கும் இச் சங்கடஹர சதுர்த்தி விரதத்தால் நலமும் வளமும் பெறுவர்.

விரதத்தையும், தியானத்தையும் வன்னிமரத்தின் கீழ் அமர்ந்து செய்தால் கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல எல்லா பலனும் விரைவாக கிடைக்கும்.

ஒரு முறை பரத்துவாஜர் முனிவரின் புத்திரனான அங்காரகன் விநாயகனின்திருமந்திரத்தை தியானம் செய்து 'சதுர்த்தி' தினத்தில் செவ்வாய் கிழமை, விநாயகரின் அருட்காட்சி பெற்று சகல ஐஸ்வரியங்களையும் பெற்றுக் கொண்டான். மேலும் ஒரு வரத்தை விநாயகர் அங்காரகனுக்கு வழங்கினார். அதாவது 'சதுர்த்தி'யும் செவ்வாய் கிழமையும் ஒன்றிணைந்து வரும் நாளில் 'சதுர்த்தி விரதம்' இருப்பவர்களுக்கு மேன்மேலும் நன்மை

அளிப்பேன் என்ற வரத்தை அளித்தார். ஆகவே செவ்வாய் கிழமை சதுர்த்தி, விசேஷமானது.

சங்கட ஹர சதுர்த்தி நாளில் மாலையில் சந்திரன் உதயமாகும் நேரத்தில் பூசை செய்வது எதற்கு என்றால், ஒரு முறை சந்திரன் பகவான், விநாயகருக்கு எதிராக மனம் புண்படும் வகையில் கயிலாச் சபையில் சிரித்து ஏளனம் செய்து விட்டான். அதனால் கோபம் கொண்டு விநாயகர் சந்திரனைச் சபித்து விட்டார். சந்திரனின் அழுது தொழுது விநாயகரைப் பார்த்து சாபம் நீங்க அருள் புரிய வேண்டினார்.

சந்திரனின் தவறை உணர்ந்து மீண்டும் தவம் செய்துசாப நிவர்த்தி அளித்ததோடு 'விநாயகர்' மேலும் ஒரு வரத்தை அருளினார். சதுர்த்தி விரதத்தை நிறைவு செய்பவர்கள் மாலையில் சந்திரனான உனது வருகைப் பின்னால் அதனைக் கண்டு பூசையை துவங்கி முடிப்பார்கள். எனக்குச் செய்யும் சதுர்த்தி பூசை உனக்கும் கிடைக்கும் என்று வரம் அருளினார். ஆகவே 'செவ்வாய் கிழமை சதுர்த்தி 'விசேஷமானதாகவும் சந்திரோதயத்தில் விரத பூசைகள் செய்வதும் காரண காரியமாகியது. விநாயகர் சந்திரனுக்கு சாப நிவர்த்தி அளிக்கும் பொழுது ஆவணி மாதம் வளர்பிறையில் வரும் 'சதுர்த்தி' அன்று உன்னை யாரும் பார்க்கக்கூடாது. அவ்வாறு பார்த்தால் துன்பத்திற்கு ஆளாவார்கள் என்ற ஒரு விதியையும் வைத்து அருள் புரிந்தார்.

விநாயகர் சதுர்த்தி, சங்கடஹர சதுர்த்தி, ஆகிய பூசைகளைத் தவிர, தினசரி காலை அல்லது மாலை நேரத்திலும் விநாயகர் தியானத்தை செய்யலாம். இதற்கு பூசை, நிவேதனம், போன்றவை இல்லாமல் மானசீகமாக மனதாரச் செய்யலாம்.

***



# விநாயகர் - யோக தத்துவமும் பூசை பொருள்களின் பயன்களும்

உலகியல் அரங்கில் கலை, பண்பாடு, இலக்கியம், மருத்துவம், மொழி, போன்ற எத்தனையோ துறைகளில் ஆய்வு செய்து வளர்கல்வியலில் 'முனைவர் பட்டம்' (Doctorate) பெறுகின்றனர். இப்பட்டம் ஒவ்வொரு ஆர்வாளரும், ஆய்வாளரும் பொருத்து எத்தனையோ துறைகளில் வழங்கப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு துறையிலும் நுட்பமாக செல்லச் செல்ல புதிய புதிய தகவலும், கருத்தாய்வுகளும், கிடைத்துக் கொண்டே இருக்கின்றன. அதுபோலவே விநாயகரின் வடிவமும், தத்துவமும், வழிபடுவதற்கான பொருள்களும் பயன்களும் எத்தனையோ நுட்பங்களை தன்னுள்ளடக்கித் தரணியை செழிக்கச் செய்கின்றன. இறை வழிபாட்டில் இக் பர நன்மைகளை எத்தனையோ தேக்கி வைத்துள்ளனர்.

ஒவ்வொரு மனிதனும் பூர்ணா நாத்திக வாதியாக வாழ்நாள் முழுவதும் இருப்பதுமில்லை. அதுபோன்று பூர்ணச் சரணாகதியாக இறைவனை நம்பி வாழ்வின் பயணத்தில் செல்வதுமில்லை. பெரும்பாலும், இரண்டும் கெட்ட பக்தியும், இரண்டும் கெட்ட பகுத்தறிவுமே இருப்பதால் அவர்களுக்கு என்றுமே மனநிம்மதியை அளிக்காமல் மனத் தடுமாற்றத்தை ஏற்படுத்துகிறது. ஆகவே பக்தி, ஞான, யோக மார்க்கத்தில், சென்று சித்தி அடைய விரும்புபவர்களுக்கு கட்டாயமாக வைராக்கியமும், தன்னல மறுப்பும், சுக போகத்தில் பற்று இன்மையும், நித்திய கர்மத்தில் மனச்சலிப்பும் சோம்பலும் இல்லாமல் இருக்க வேண்டும். அப்பொழுது தான் பூரணத்துவத்தை அடையலாம். அதுபோன்றே வெளி உலகத்தை சுற்றி, சுற்றி ஞானத்தை தேடி நலிந்த பின்னும், உள் உலகமான தன்னுள் அமர்ந்து தியானம் செய்யா விட்டால் 'மயானத்தை' விரைவிலே அடைய வேண்டியது தான்.

சித்தர்களுள் சிம்மாக இருப்பவர் சிவ வாக்கியர். அவர் வாக்கிய பாடல்கள் நாக்கிலிருந்து தெறிக்கும் நன் நெருப்பு போல நெஞ்சினை தாக்கும். அதில் ஓர் பாடல்.

ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதியை
நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழிந்து போய்
வாடி வாடி வாடி வாடி மாண்டுபோன மாந்தர்கள்
கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே

என்கிறார். அதில் நீங்களும் ஒருவராக ஆகிவிடாதீர்கள். அவரே மற்றுமொரு பாடலில்.

பேசுவானும் ஈசனே பிரம ஞானம் உம்முளே
ஆசையான ஐவரும் அலைத்தலைகள் செய்கிறார்
ஆசையான ஐவரை அடக்கி ஓர் எழுத்திலே
பேசிடாது இருப்பிரேல் நாதன் வந்து பேசுமே

என்ற சூட்சுமத்தைச் சொல்கிறார். ஆகவே ஓங்காரத்தை தியானித்து ஆங்காரமான ஐம்புலன்களைக் கட்டுப்பாட்டிற்கு கொண்டு வந்தால் பெருநிலையை அடையலாம்.

இலட்சியமில்லாத படகு, பாயும் கடலில் ஓயாமல் உழன்று கொண்டிருக்கும். இலட்சியமில்லாத வழிபாடும் வாழ்வினில் விழிப்பினை ஏற்படுத்தாது. **ஆகவே தெய்வத்திற்குள் தத்துவத்தை வைத்து, தத்துவத்தால் நித்தியத்தை அறிந்து, நித்தியத்தால் சத்திய வாழ்வை பெறவே சமயமெனும் பாட்டையானது சரியான வழிகாட்டுகிறது.** அதிலொரு பாட்டைதான் விநாயகரின் வழிபாடாகும். அவரின் தத்துவம் பூசைப் பொருள்களின் பயன்களை, இனி காண்போம்.

## விநாயகரின் உருவ தத்துவம்

விநாயகரின் உருவத்தத்துவம் ஐம்பெரும் சக்திகளைக் காட்டுவதாகும். மடித்து வைத்துள்ள ஒருபாதம் பூமியையும், சரிந்த தொந்தி - நீரையும், அவரது மார்ப்புப் பகுதி நெருப்பையும் இரு புருவங்களின் இணைந்த அரைவட்ட வடிவம் காற்றையும், அவற்றிற்கு நடுவே வளைந்துள்ள கோடு ஆகாயத்தை உணர்த்துவ

தாகும். விநாயகர் பஞ்சபூத சந்திரன் அம்சமானவர். மனிதனின் மனத்தை வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளது. மனிதனுள் மிருக குணம், குழந்தை மனம், அருள் தன்மை, பெருந்தீனி, முரட்டுத் தன்மை, மென்மையான குணம், போன்ற அனைத்தையும் வெளிப்படுத்தும் உருவமாகவும் திகழ்கிறது.

விநாயகப் பெருமான் ஐந்தொழில் புரியும் அரும் பெரும் திகழ்கிறார். ஒரு கையானது பாசத்தை ஏந்தியிருப்பதால் படைத்தல் (பிரம்மா) தொழிலைக் காட்டுகிறது. தந்தம் ஏந்திய கை (விஷ்ணு) காத்தலைக் குறிக்கிறது. அங்குசம் ஏந்திய கை (ருத்ரன்) அழித்தலைக் குறிக்கிறது. தும்பிக்கையானது (பரமேஸ்வரன்) மறைத்தலைக் குறிக்கிறது. மோதகம் ஏந்திய கை (பராசக்தி) அருளை காட்டுகிறது. ஆகவே ஐந்து கரத்தான், ஐந்தொழில் வித்தகத்தான் ஆவான்.

### களிமண்ணில் பிள்ளையார் ஏன்?

விநாயகர் சதுர்த்தி தினத்தன்று குளித்துவிட்டுப் பக்தி சிரத்தையுடன், விநாயகரைக் கடை வீதியிலிருந்து பெற்று வருகிறோம். இன்னும் சிலர் அழகிய வண்ணங்களால் உருவாக்கிய பிள்ளையாரை வைத்து பிள்ளையார் சதுர்த்தி தினத்தைக் கொண்டாடுகின்றனர். பிறகு மூன்றாம் நாளிலோ அல்லது அடுத்த சதுர்த்தி தினத்தன்றோ வழிப்பட்ட விநாயகனை பூசை செய்து கடலிலோ, நதியிலோ அல்லது குளத்தில், கிணற்றில் ஏதேனுமொரு நீரில் கரைத்து விடுகின்றனர். இதுவொரு புரியாத புதிராக பலருக்கு தோன்றலாம். இதில் தெய்வீக தத்துவமும், மனித வாழ்க்கைத் தத்துவமும் மறைபொருளாக உணர்த்துவதாகும்.

ஐம்பூதங்களில் ஒன்றான மண்ணிலிருந்து உருவாக்கப்பட்ட விநாயகரை இயம, நியமங்களோடு தெய்வ நிலைக்கு உயர்த்தி, பொன், பொருள், அபிஷேக ஆராதனைகள், நெய்வேத்தியங்களைப் படைத்து தியானித்து பிறகு மீண்டும் ஐம்பூதங்களில் ஒன்றான நீரிலே கலந்து விடுகிறோம். இடையிலே தோன்றி இடையிலே மறைந்து விடுகிறது.

அதுபோலவே மனிதனின் வாழ்வும் இப்புவியான மண்மீது தோன்றுகிறது. பிறகு அவனை பலரும் போற்றுகின்றனர். பொன் பொருளாலும் சுக போகங்கள் பெறுகின்றனர். என்றாவது ஒருநாள் மண்மீது தோன்றிய உடம்பு மண்ணுக்குள் போக போகிறது. அல்லது எரிந்து பஸ்பமாக நீரிலே கரையப் போகிறது. ஆகவே ஞானமும், நற்கல்வியும், நல்செயல்பாடுகளால் நின்னை உயர்ந்திக் கொள் என்பதை உணர்த்துவது ஆகும். விநாயகனில் வழிபாடு களிமண் உருவ தத்துவம் மேலும் நற்பதவிகளும் கிடைக்கும் புற்று மண்ணால் செய்த பிள்ளையாரை வழிபட்டால் இலாபம் கிடைக்கும். சிவவாக்கிய சித்தரின் பாடல்களின் வாயிலாக சிலயோக தத்துவங்களை உணருங்கள்.

விண் கடந்து நின்ற சோதி மேலை வாசலைத் திறந்து
கண் களிக்க உள்ளுளே கலந்து புக்கிருந்தபின்
மண் பிறந்த மாயமும் மயக்கமும் மறந்துபோய்
எண் கலந்த ஈசனோடு இசைந்திருப்பது உண்மையே!

சிவ வாக்கிய்ர் 119

மண்கலம் கவிழ்ந்தபோது வைத்துவைத்து அடுக்குவர்
வெங்கலம் கவிழ்ந்தபோது வேணும் என்று பேணுவர்
நம்கலம் கவிழ்ந்தபோது நானும் என்று போடுவார்
எண் கலந்து நின்றமாயம் என்னமாயம் ஈசனே!

சிவ வாக்கியர் 78

மண்ணிலே தோன்றி மாயத்துள் அலைந்தாடும் மனிதனும்
விண்ணிலே தோன்றி விளங்காமல் நின்றாடும் புனிதனும்
உண்ணாமல் உறங்காமல் ஓரெழுத்தில் ஒடுங்குவாராகில்
எண்ணாமல் எழுதாமல் எந்நாளும் தொழுதிடுவாரப்பா!

கலியுகச் சித்தர்

களிமண், புற்று மண்ணால் செய்த பிள்ளையாரை வழி படுவது போலவே வேறுசில மூலப் பொருள்களான பிள்ளை யாரை வழிப்பட்டால் என்னென்ன பலன்களென்றால் மாவால் செய்யப்பட்டுப் பிள்ளையாரால் வெற்றிகள் கிடைக்கும். வெல்லத்தால் செய்யப்பட்ட விநாயகரால் சகல பாக்கியங்களும்

கிடைக்கும். உப்பால் செய்த விநாயகரால் எதிரிகளை வெற்றிக் கொண்டு ஏற்றமுடன் வாழலாம். கல்லினால் செய்யப்பட்ட விநா யகரை வழிபடுவதால் மனம், புத்தி, திடப்படும். கற்களில் மாவுக் கல், கருப்புக்கல், நன்னிக்கல் (பச்சைக் கல்) ஆகிய கற்கள் இருக் கின்றன. இவைகளில் கருப்புக்கல்லும், பச்சைக்கல்லும் மிகவும் சிறப்பு வாய்ந்தது. வெள்ளெருக்கால் செய்யப்பட்ட விநாயகரை வழிபட்டால் அஷ்ட திக்குகளிலிருந்து வரும் துன்பங்களைப் போக்கி 16 செல்வங்களும் வந்து சேரும். பஞ்சலோகத்தினால் செய்த விநாயகரை தினசரி முறைப்படி தேன், பால், பஞ்சாமிர்தம் போன்றவற்றால் அபிஷேகங்கள் செய்து சிறிதளவு உண்டுவந்தால் ஆயுளும், ஐம்பொறிகளை பற்றிய நோய்களும் விலகும்.

விநாயகரை எத்தனையோ வடிவங்களிலும், மூலப்பொருள் களிலும் செய்து வணங்குவது கலியுகத்தில் கணக்கில்லாமல் பெருகி வருகிறது. அனைத்திலும் அற்புத அருள் தாங்கி நிற்கும்.

### தும்பிக்கை :

முகத்தில் நீண்ட மூக்கினை பிரதிபலிப்பது மனிதன் தெய்வீக நிலையை அடைய மூக்கின் வழியாக பயிற்சி செய்கின்ற வாசி யோகம், சரயோகம், பிராணாயாமத்தை வலியுறுத்துவதாகவும், பிரதிபலிப்பதாகவும், அது போன்றே சுவாசம் 16 அங்குலம் உள் சென்று வர வேண்டும் என்பதை துதிக்கை வலியுறுத்தியுள்ளது.

### ஐங்கரம் :

பெருத்த உருவம் ஐங்கரத்தால் தாங்கி நின்று பெருமைப் படுவது போல மனித வாழ்க்கை ஐம்பூதங்களாலும், ஐம்பொறி களாலும், மனத்தால் தாங்கி நின்று பெருமைப்பட வேண்டும் என்பதை குறிக்கும்.

### ஒற்றைக் கொம்பு :

ஒருமுறை 'வியாச மகரிஷி' புராணங்களை நான் உச்சரிக்கும் வேகத்திற்கு விநாயகரே நீர் கை நிறுத்தாமல் எழுதிட வேண்டும்

என்று உத்தரவு பெற்றார். அதுபோலவே விநாயகரும் நான் எழுதும் வேகத்திற்கு முனிவரே தாங்களும் நிறுத்தாமல் பாட வேண்டும் என்று உத்தரவு பெற்றார். ஆகவே வியாசர் முனிவர் பாட விநாயகர் எழுதிக்கொண்டே வந்தார். இடையில் எழுத்தாணி உடைந்தது. உடனே விநாயகர் தனது கொம்பினை உடைத்து ''எழுத்தாணியாக'' உபயோகித்துக் கொண்டு மகாபாரதத்தை எழுதினார்.

மற்றொரு கதையுமுண்டு. ஒரு தடவை 'கஜமுகாசுரன்' என்ற அரக்கனை அழித்து, அவனது அகங்காரத்தை நசுக்கிட வேண்டி தனது வலது கொம்பை ஒடித்து விநாயகர் கஜமுகாசுரன் மீது வீசினார். அது கஜமுகாசுரனின் மார்பினைப் பிளந்தது. இதனால் ஒற்றைக் கொம்பானது. கஜமுகாசுரனோ மீண்டும் விழுந்து, விழுந்த வேகத்தின் மிகப்பெரிய பெருச்சாளியாக வடிவெடுத்தான். உடனே விநாயகர் பெருச்சாளியான அவனைப் பிடித்தடக்கி அதன் முதுகில் ஏறி அமர்ந்து வாகனமாக்கிக் கொண்டார். விநாயகரின் திருவடி கஜமுகாசுரனின் மீது பட்டதால் அவனது முந்தைய அகங்காரங்கள் அழிந்து ஞான நிலை எய்தினான். அந்த இடத்திலேயே விநாயகப் பெருமான் 'சிவலிங்கம்' ஒன்றை பிரதிஷ்டை செய்து பூஜை செய்தார். அதுவே புண்ணியத் திருத் தலங்களில் ஒன்றான 'கணபதீச்சரம்' என்ற வழங்கப்படுகிறது. கஜமுகாசுரனின் மார்ப்பு பிளக்கப்பட்ட இடத்தை 'மாரொத் தப்பம்' என்று அழைக்கப்படுகிற்து.

யோகத்தத்துவத்தில், உடலின் வலது பாகம் ஆண் அம்ச மாகும். வலது நாசி துவாரத்தின் வழியாக, சென்று வரும் சுவாசம், 'சூரிய கலை' 'பிங்கலை' என்று அழைக்கப்படும். யோகச் சாதனையினால் வலது சுவாசத்தை ஒடித்து (அடைக்கி) ஆயுளை அதிகச் செய்து கொள்ளலாம் என்று தத்துவத்தை உணர்த்துகிறது.

## பெரிய வயிறு :

பிரளயம் முடிவடைந்ததும் ஆதிப் பரம்பொருளான விநாயகர் வக்கர துண்ட விநாயகராக அவதரித்தார். பிறகு

தம்முடைய முக்குணங்களிலிருந்து படைத்தல் - காத்தல் - அழித்தல் ஆகிய மூன்று தெய்வங்களை உருவாக்கினார். இம்மூர்த்திகளும் தங்களது தொழில் ஏதுவென்று தெரியாமல் தவித்து, பிறகு விநாயகப் பெருமானை பலவாறாகப் போற்றி தவமிருந்தனர். அதன்பின் விநாயக பெருமான் காட்சியளித்து அவர்களுக்கு மூத்தொழிலின் இரகசியங்களை விளக்கினார்.

மும்மூர்த்திகளோ மீண்டும் விநாயகரை துதித்து முத்தொழிலை எங்களுக்கு அளித்துள்ளீர்கள். கோடான கோடி ஜீவராசிகளை படைப்பது எவ்வாறு என்று சற்று தடுமாறிய நிலையில் கேட்டார்கள். அதற்கு விநாயகர் தம்முடைய மிகப் பெரிய வயிற்றினைச் சுட்டிக் காட்டி, மும்மூர்த்திகளே நீங்கள் எனது வயிற்றினுள், துதிக்கை வழியாகப் புகுந்து, அங்குள்ள சகல உலகங்களையும் கண்டு அதன்படி முத்தொழிலையும் செய்வீர் களாக என்று அருள் புரிந்தார்.

மும்மூர்த்திகளும் விநாயகரின் வயிற்றினுள் புகுந்து பார்த்த போது ஏழு மேலோகங்களும், ஏழு கீழ்லோகங்களும், நவ இறை வடிவங்களும், சரியை, கிரியை, யோகம், ஞானம், என்ற நான்கு பதங்களும், நான்கு முக்திகளும், பஞ்ச பூதங்களும், ஐந்து வகை நிலங்களும், ஐம்பொன், நவரத்தனங்களும், கண்ணுற்றார்கள்.

எண்ணற்ற மலைகள், தீவுகள், கடல்கள், நதிகளும், எட்டுத் திசை பாலகர்கள், நான்கு வேதங்கள், மந்திரங்கள், சாத்திரங்கள், சோதிடங்கள், நான்கு வருணாசிரமங்கள், பன்னிரெண்டு சூரியர் கள், எட்டு வகையான வசுக்கள், நவக்கிரகங்கள், ஆறு புறச் சமயங்கள், ஆறு அகச் சமயங்கள், பலவகையான கணங்களும், தச வாயுக்களையும், பல்வேறு சீவராசிகளையும் மும்மூர்த்தி களும் விநாயகரின் வயிற்றினுள் கண்டார்கள்.

மும்மூர்த்திகளும், எண்ணிலடங்கா, எத்தனையோ இரகசி யங்களையும், சிருஷ்டிகளையும் தன் வயிற்றுக்குள் வைத் திருக்கும் விநாயகப் பெருமானின் அற்புதங்களை வியந்தனர். பிறகு வயிற்றுள்ளிருந்து வெளிவர விநாயகரை தவம் செய்தனர். விநாயகர் பிரம்மாவை துதிக்கை வழியாகவும், விஷ்ணுவையும், ருத்திரனையும், இரு காதுகளின் வழியாகவும் வரவழைத்து

முத்தொழில் (படைத்தல், காத்தல், அழித்தல்) புரிய அருள் புரிந்தார். அண்ட சராசரங்களும் தன் வயிற்றினுள் அடக்கி வைத்திருப்பதால் பெரிய வயிறாக, விநாயகரின் வயிறும், சராசரி மனிதரின், தொந்திபோல் வயிறு உள்ளது.

மனித சரீரத்தில் எல்லா உறுப்புக்களைக் காட்டிலும் வயிறு பகுதியே மிக பெரிதாக உள்ளது. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களுக்கும் அடிப்படையாக உள்ளது வயிறு.

விநாயகரின் வயிற்றுக்குள் தத்துவார்த்தமாக எத்தனையோ மண்டலங்கள் இருப்பது போல கதைகளில் கூறினாலும், அது மனித வயிற்றை அடிப்படையாக கொண்டே மறைமுகமாக கூறுகிறது. மனிதனின் வயிற்றுக்குள், சுவாச மண்டலம், இருதய மண்டலம், ஜீரண மண்டலம், கழிவு மண்டலம், இனவிருத்தி மண்டலம் போன்ற எத்தனையோ மண்டலங்களையும், சுரப்பிகள், தசைகள், நரம்புகள் போன்றவற்றை வயிற்றுப் பகுதி தன்னுள் அடக்கிக் கொண்டு பார்ப்பதற்கு பருத்து தொந்தி போல காணப்படுகிறது.

ஒரு உயிரை படைக்கின்ற தொழிலான இனவிருத்தி மண்டலம் ஒழுங்காக, முறையாக இயங்கினாலும் அல்லது நல்ல உணவுகளை உண்டால் மட்டும் காத்தல் தொழிலாகிய சரீரத்தை நோயின்றிக் காப்பாற்ற முடியும். அது போன்றே கழிவு மண்டலம், இருதய மண்டலமும், கழிவுப் பொருளையும், அசுத்த இரத்தத்தை நல்ல இரத்தமாக மாற்றி முறையாக செயல்பட்டால் மட்டும், தீயவைகள் உடலிருந்து அழிக்கப்படும்.

ஆகவே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழிலுக்கு ஆதாரமாக உள்ளது வயிறும், அதை சார்ந்துள்ள மார்பும், இதனை வலியுறுத்தவே விநாயகர் பெருமான் பருத்த வயிறுடன், சிரித்த முகத்துடன் பக்தர்களுக்குக் காட்சி தருகின்றார் காண்பிக்கின்றார். மேலும் பருத்த வயிறான தொந்தி ஏற்பட்டால், அதன் விளைவாக வயிற்றுப் பெட்டியினுள் உள்ள அத்தனை உறுப்புகளும் முந்தைய இயற்கை நிலையிலிருந்து சரிந்து பல்வேறு உடற்கோளாறுகளை உண்டாக்கும். ஞானத்திற்கு

ஆதாரமான முதுகெலும்பு கோனாலாகக் குரூர புத்தியையும் உண்டாக்கும். எனவே யானை வயிறும், பானை வயிறும் வராமல் காத்துக் கொள்ளுங்கள். நான்கு கால் விலங்கு கொழுத்தால் அழகு, ஞானி மெலிந்தால் அழ்கு என்ற முதுமொழிக் கொப்ப மென்மையான சரீரம் பெற்று நன்மையாக வாழுங்கள்.

## வயிற்றை சுற்றியுள்ள நாகப் பாம்பு

சிவன் பார்வதி இருவரும் கயிலங்கிரியில் அமர்ந்திருந்திருந் தனர். அவர்களை தேவர்களும் முனிவர்களும், ரிஷிகளும் வந்து அஷ்டாங்க வணக்கம் செய்து வரங்களை வேண்டினர். சிவன் பார்வதி இருவரும் அருளினர்கள். அப்போது சிவனது ஜடை மகுடத்திலிருந்த ஆதிசேஷனான 'நாகம்' மிகவும் மமதை கொண்டு இத்தனை யோகிகளும் வணங்கக் கூடிய சிவனது தலைமுடியின் மீதே நான் உட்கார்ந்து கொண்டிருக்கின்றேன் என்று கர்வம் கொண்டது.

இதனை உணர்ந்த சிவபெருமான் ஆதிசேஷனான நாகத்தை வெடுக்கெனப் பிடித்து தரையின் மீது வீசி எறிந்தார். கேட்பாரற்று கூனி குறுகிக் கிடந்தது நாகம். அதனது முந்தைய புனிதத் தன்மையை இழந்த வாடிகிடந்தது. அப்போது சுர ரதர் சிவனை தரிசனம்காண வந்தார். நாகத்தைக் கண்டு துயரினை விசாரித்தார். பிறகு ஆதிசேஷனான நாகத்தைப் பார்த்து நீ அகம்பாவத்தை அடி மனதில் கொண்டதால் சுகமிழந்து சூம்பிக் கிடக்கின்றாய்.

ஆகவே உனது கதிவிமோசனதிற்கு ஒரு வழி கூறுகின்றேன் கேள். என்று நாரதர் விநாயகரின் தியான மந்திரமான சடாச்சரத்தை உபதேசித்தார். அவ்உபதேசத்தைப் பெற்று ஆதிசேடனான நாகம் சதுர்த்தி விரதத்தையும், தியானத்தையும் செய்து விநாயகரின் தரிசனம் பெற்றார்.

விநாயகப் பெருமான் நீ எனது தந்தையின் ஜடா மூடியின் மீதிருந்து விழுந்த வேகத்தில் உனது தலை ஐந்து தலைகளாக பிளவுப் பட்டிருப்பதால் இனி ஒவ்வொன்றும் ஒவ்வொரு தலைகளாகி எனது தந்தையான சிவனுக்கு ஐந்து தலை நாக ஜடா மகுடமாக்கட்டும் .என்று வரமருளினார். மேலும் உனது சதுர்த்தி

விரதத்தையும், தியானத்தையும் மிகவும் விரும்பி யான் ஏற்றமை யால், நாகமே நான் உன்னை வயிற்றைச் சுற்றி உதர பந்தனமாக அணிந்து கொள்கிறேன் என்று வரத்தை அளித்து அணிந்து கொண்டார். ஆகவே 'வயிற்றை சுற்றி நாகம்' உதர பந்தனமாக காட்சியளிக்கின்றது. இது ஒருபுறம் புராணக் கதை யோக சாத்திரத்தின் உச்ச நிலையைக் குறிப்பிடுவது குண்டலி சக்தியைத் தான். அத்தகைய குண்டலி சக்தியானது நாபிக்குக் கீழே உறங்குகின்ற நாகமான பாம்பினை ஒத்து கிடக்கின்றது. இது தீப் பெட்டியினுள் அடங்கிக் கிடக்கும் தீக்குச்சியைப் போன்று உள்ளது. தீக் குச்சியை உரசாதவரை 'தீ' வெளிப்பட்டு வெளிச்சம் தருவதில்லை.

அதுபோலவே ஒவ்வொரு மனிதனும் உறங்கிக் கிடக்கும் குண்டலி சக்தியான நாகத்தை, ஒத்த நரம்புச் சுருளை நாபியின் கீழே யோகத்தின் வாயிலாக எழுப்பாதவரை ஆன்மீக முன்னேற்ற மும், அஞ்ஞான விழிப்புணர்வும் ஏற்படுவதில்லை. இவ்வித குண்டலி சக்தியின் தன்மையை விளக்கவே புறமுகமாக விநாயகர் தனது தொந்தியின் மீது நாகப் பாம்பினை அணிந்து தத்துவர்த்த மாக காண்பிக்கின்றார். இதனை பாம்பாட்டிச் சித்தர் பாடலில் கூறும்பொழுது.

சூத்திரக்குடத்திலே பாம்பை அடைப்போம்
சுழமுனைக் குள்ளேயே சுகித்திருப்போம்
பாத்திரங் கொண்டுமே பலி இரப்போம்
பத்தெட்டு மூன்று படி கடந்தோம் என்கிறார்.

நாம் பிறப்பதற்கு முன்பாக தாயினது கருவறைக்குள் நமக்கு ஆகாரங்கள் கிடைத்தது 'தாய் கொடி' என்ற நரம்பின் தொடர் பினால் தான். பிறந்த பின் பிறகு அதனை குழந்தைக்கும் தாய்க்கும் இடையில் வெட்டி விடுகிறார்கள். இது தான் 'உதர பந்தம்' என்பதாகும். விநாயகப் பெருமான் தனது வயிற்றின் மீது உதர பந்தமாக நாகத்தை அணிந்து ஆபரணமாக அலங்கரித்துள்ளார்.

ஆகவே யோகப் பயிற்சியின் வாயிலாகவும், இயம, நியம, விரதங்களாலும் நாபிக் கமலத்தில் உறங்கிக் கிடக்கும்

(பாவனையாக) உள்ள குண்டலி சக்தியை, பணப்பற்றுதலில்லா குருவின் வாயிலாக விழிக்க செய்து நாள்தோறும் நற்கதியை அடைவீராக.

## பெருச்சாளி வாகனம் :

ஒருமுறை 'கிரவுஞ்சன்' என்ற கந்தர்வ ராஜன், சவுபரி என்ற முனிவரின் பத்தினியாகி மனோரமையின் அழகில் மயங்கி, மனம் தடுமாறி கைகளைப் பற்றி இழுத்து விட்டான். இதைக் கண்ட சவுபரி முனிவர் மிகக் கோபம் கொண்டு மண்ணைத் தோண்டும் மகா பெருச்சாளி மாறுவாய் என்று சாபம் இட்டார். கிரவுஞ்சனும் பெருச்சாளியாக அலைந்தான்.

அதன்பின் முனிவரே பெருச்சாளியாக திரியும் எனக்கு தயவுச் செய்து சாபவிமோசனம் தர வேண்டும் என்று வேண்டினான். முனிவரும் மனமிரங்கினார். பிறகு உனது வினைகள் தீரும் பொழுதும் விநாயகருக்கு வாகனமாக மாறுவாய் என்று சாப நிவர்த்தி அளித்தார். அதன்படி பராசுவ முனிவரின் ஆசிரமத்தில் மூஷிக வாகனமாகத் திரியும் கிரவுஞ்சனின் வினைத்தீர்த்து விநாயகர் வாகனமாக அமர்ந்து கொண்டார்.

மற்றொரு கதையுமுண்டு. காஜமுகாசுரன் என்ற கொடிய அரக்கனை விநாயகர் அழித்தார். அவன் மீண்டும் பெருச்சாளி வடிவமெடுத்தான். பிறகு அவனது அறியாமையைப் போக்கி விநாயகர் தனக்கு வாகனமாக ஆக்கிக் கொண்டார்.

இறைவனான பரமாத்மா தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான். அதுபோலவே யானையிலும் இருப்பான் எலியிலும் இருப்பவனாக இறைவன் விளங்குகின்றான் என்ற தத்துவத்தை உணர்த்தவே விநாயகர் ரூபம் உள்ளது.

ஊர்ந்து சென்று ஈன்று பல் கொடுக்கும் இனத்தில் மிகச் சிறியது 'எலிதான்' பெருமை மிக்கது, உயர்ந்து கனமாக மிகப் பெரிய பிறவியான யானையும் குட்டிப்போட்டுப் (ஈன்று) பால் கொடுக்கும் உயர்ந்த பெருமை மிக்கதுதான். இத்தத்துவத்தை விநாயகர் விளக்குகிறார்.

யோக தத்துவ ரீதியாக மூஷிகமான எலி வளையை தோண்டித் தான் குறியை (Aim) அடையும் வரை எந்த தடைகள் இருந்தாலும் அதை உடைத்தெறிந்து வளையைத் தோண்டிக் கொண்டே செல்லும் சோர்ந்து சுணக்கம் கொள்ளாது. அதைப் போலவே யோகப்பாதையில் செல்பவர்களுக்கு எத்தனைத் தடைகள் ஏற்பட்ட போதினும் இறுதி உயர்ந்த நிலையை அடையும் வரை சோர்ந்து சுணக்கம் கொள்ளாமல் செல்ல வேண்டும் என்ற தத்துவத்தை உணர்த்துகிறது.

விஞ்ஞான உலகில் எலிதான் எல்லா மருத்துவ ஆய்வுகளுக்கும். ஆய்வு உயிரினமாக (Practical Animal) பயன்படுத்தப்படுகிறது. அது மருந்து செய்முறைகளாலும் அல்லது உளவியல் சோதனைகளானாலும் சரி எலிதான் சோதனைகளுக்குக் கதா நாயகனாகப்படுகிறது.

உயிரினத்தில் ஒரு அற்புத இனமாக இருப்பதால் அதனை சமயத்தில் சவாரி செய்யும் வாகனமாக, அன்று படைத்தார்கள்.

இன்றும் கணிப்பொறியில் புகுந்து உலகமெலாம் மின் அஞ்சல், (E-mail) மின் வலை (Internet) போன்றவற்றில் உட்கார்ந்த இடத்தில் பயணப்பட வேண்டுமானால் அதற்கு எலி (Mouse) வாகனம் தான் அவசியமாகிறது.

கம்ப்யூட்டரை இயக்க வேண்டுமானால் 'மவுஸ்' (எலி) அவசியமாகிறது.

புறவுலகில் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டுமானால் நவீன விஞ்ஞானத்தில் கணிப்பொறியில் மவுஸை பயன்படுத்தி அறியலாம்.

அகவுலகில் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டுமானால் எலி வாகனத்துடனுள்ள விநாயகரை, தினசரி தியானம் செய்து அறியலாம்.

## தலையில் குட்டிக் கொள்ளுதலும் தோப்புக் கரணமும்

காக்கையின் வடிவத்தில் வந்து அகத்தியர் முனிவரின் கமண்டலத்தில் அடங்கிக் கிடந்த காவேரியை கவிழ்த்தார்

விநாயகர். அப்போது அகத்தியர் விநாயகரின் தலையில் குட்டுவதற்காக கைகளை ஓங்கிப் பின்பு உண்மையை அறிந்து வெட்கம் கொண்டு தன் தலையிலேயே குட்டிக் கொண்டார்.

அதுபோன்ற கஜமுகாசுரன் என்ற அரக்கன் தேவரைகளையும், தவசிகளையும் மிரட்டித் தன்னை காணும் போதெல்லாம் தன் கைகளால் குட்டிக் கொண்டு பணிந்து தோப்பு கர்ணம் போட வேண்டும் என்று மிரட்டி செயல்படுத்தி வந்தான். இதனால் தேவர்கள் கஜமுகாசுரனுக்கு பயந்து இவ்வாறு நீண்ட நாட்கள் செய்து வந்தனர். இத்துன்பத்தையும், கஜமுகாசுரனின் கொடுமைகளையும் விநாயகப் பெருமானிடம் கூறி பரிகாரம் செய்ய வேண்டினர். விநாயகர் கஜமுகாசுரனை ஆணவத்தை அழித்து அருள்பலித்தார். அதன்பின் தேவர்களும் தவசிகளும், கஜமுகாசுரனை அழித்த விநாயகனுக்கு நன்றியின் நிமித்தமாக தலையில் குட்டிக் கொண்டு தோப்புக் கர்ணம் போட்டனர்.

யோக தத்துவத்தின் சூட்சும பொருளின் எண் சான் உடம்பிற்கு சிரசே பிரதானமாகும். இத்தகைய தலையான சிரசில் எண்ணற்ற நாடி நரம்புகளுக்கு கட்டளைப் பிறப்பிக்கும் பீடமாக உள்ளது. மூளையின் வலது, இடது, செயலிழக்கமே மனிதனை நன்னிலைக்கு வாழ வைக்கின்றது. மூளையின் வலது பக்கமோ, அல்லது இடது பக்கமோ இரத்தம் செல்லக் கூடிய நரம்பிழைகள் பாதிக்கப்பட்டால் சுய நினைவில்லா (Coma) நிலையும், பக்க வாதமும் (Paralosis) ஏற்படுகின்றது. தலையில் எல்லா சுரப்பிகளையும் கட்டுப்பாட்டில் வைத்து இயக்கக் கூடிய தலைமை சுரப்பிகள் என பீனியல், பிட்யூட்டரி ஆகிய இரு சுரப்பிகளும் உள்ளன.

எனவே தினசரி விநாயகரின் முன் விரல்களை மடித்து தலையின் இரு பக்கங்களிலும் சில குட்டுகள் எளிமையாக குட்டிக் கொள்வதால் சிரசில் ஒரு புத்துணர்வும், நரம்புகளை லேசாக துண்டி விடவும் செய்கிறது. கை விரல்களை மடிக்கும் பொழுது கை விரல்களில் தொடர்புடைய, நரம்புகளான மூளை, தொண்டை, கழுத்து, பினியல், பிட்யூட்டரி, தைராய்டு, பாரா தைராய்டு, முதுகெலும்பு, மூலம், கருப்பை, கருவாய், விதைகள், இடுப்பு, மூட்டுப் பகுதிகள், குடல்கள், போன்றவைகளுக்கு

ஒருவித அழுத்தத்தை ஏற்படுத்தி நல்ல நிலையில் இயங்கச் செய்கிறது இது 'அக்கு பிரஷர்' என்ற தொக்கன சிகிச்சை யாகவும் உள்ளது.

யோகத்தின் உச்ச நிலையில் தலையில் அமுதம் சுரக்கும். அதனை சில துளிகள் உண்டால் மரணமிலா பெருவாழ்வும், நரை, திரை, மூப்பும் இல்லாமல், வாழலாம். இத்தகைய இறந்த அமுதத்தை சுரக்கச் செய்யவும், சுவைக்கவும், 'ஹதயோகப் பயிற்சி முறையில் கேசரி முத்திரை' என்ற பயிற்சி நிலையில் முயற்சி செய்கின்றனர்.

ஆறு ஆதாரங்களின் மேல் உச்ச நிலையிலுள்ள ஸஹஸ்ரத்தில் ஆனந்த நிலையில் அமுதம் ததும்பும். அதனை உடல் முழுதும் செல்லும் பிரண சக்தியின் வழியே செலுத்துவதற்காக, தலையில் குட்டிக் கொண்டு தோப்புக்கர்ணமிட்டு தேகத்தில் பரவிட விநாயகர் வழிப்பாட்டின் மூலமாக மூலத்தோடு கலந்திட செய்யும் முயற்சியாகும்.

## தேங்காய் உடைப்பது

விநாயகப் பெருமான் ஆலயத்தில் தேங்காய் உடைப்பது ஏனெனில் மனிதனுக்கு 'தான்' என்ற அகங்கார உணர்ச்சி விரை வாக அகலாது. அது தேங்காய் ஓட்னைப் போல மிக உறுதியுடன் இருக்கிறது. அதை உடைத்து சிதறியடிக்கும் போது இனிமையான நீரும், வெண்மையான தேங்காயும் கிடைப்பது போன்றே, மனிதன் ஆணவத்தை உடைக்கும் போது ஞானமும், தெளிந்த சிந்தனையும், முக்தியும் கிடைக்கிறது.

மேலும், ரிக், யஜுர், சாம, அதர்வண என்ற நான்கு வேதங் களில், அதர்வண வேதத்தில் மந்திரங்கள், பரிகாரங்கள், பலியிடு தல் போன்றவற்றைக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆறறிவு படைத்த மனிதனின் துன்பங்களைக் களைந்திட வேண்டி, ஓரறறிவு, முதல் ஐந்தறிவு வரையுள்ள சீவராசிகளைப் பலியிட்டுள்ளனர். அதனால் ஓரளவு துன்பங்கள் குறைக்கப்பட்டு வாழ்ந்துள்ளான்.

அதன் பழக்கமாக காரியத்தடைகளைப் போக்கவும், பலரின் தீய எண்ணங்களின் தாக்குதலிருந்துத் தப்பித்துக் கொள்ளவும்

இருக்குமிடத்தில் தீய எண்ண அலைகளை மாற்றவும், தேங்கா யின் மீது கற்பூர மேற்றி சுற்றி, ஓங்கி உடைத்துச் சிதறச் செய்தனர்.

மனிதனுக்கு இக்கலை நாடி, பிங்கலை நாடி, சுழிமுண நாடி ஆகிய மூன்று நாடிகளும் உயிர் வாழ்வதற்கு அவசியமாகும். அது போன்றே மண்டையோடும் மிக முக்கியமானது. எனவே, உயிருக்கு நிகராக தேங்காயின் மீது மூன்று நாடிகளும், உள்ளது நீரும், பிராணத்தைப் போன்று காற்றும், சூழ்ந்து வெட்ட வெளிச்ச மாக, நிர்மூலமாக கபாலத்தை போன்று தேங்காய் ஓடு உள்ளது. ஆகவே தீயவற்றைத் தேங்காய் தாங்கி சிதறி விழும் போது தீயவைகள் சிதறியடிக்கப்படுகிறது.

கற்பூர ஒளி ஏற்றப்படும் பொழுது அதில் எரிந்து வெளிப் படும் லேசான புகையான காற்றில் கலந்து கிருமிகளை நாசப்


'ஹதயோக' சூத்ர நேதி பயிற்சி முறை

படுத்தி, எண்ணங்களையும், உடலையும் தூய்மையடைச் செய் கிறது. ஆதலால் வழிபாட்டில் கற்பூர ஜோதி தேங்காய் உடைத்து பூசை நிறைவு செய்கின்றோம்.

**பாசக்கயிறு:** 'பாசக் கயிறு' என்பது ஒருவர் மீது ஒருவர் வைத்திருக்கும் அன்பையும் உறுதியையும் ஊர்ச்சிதப்படுத்துவ தாகும். இந்து சமயத்தில் 'கயிறு' மிக முக்கிய அங்கம் வகிக்கிறது. பிறந்த பச்சிளம் குழந்தைக்கு இடுப்பில் 'அரை ஞாண் கயிறு' அணிவிப்பார்கள். கோவில் ஊர் திருவிழாக்களுக்குக் கையில் 'காப்புக் கயிறு' அணிவிப்பார்கள். திருமணச் சடங்களின் போது பெண்ணுக்கு கழுத்தில் 'தாலிக் கயிறு' அணிவிப்பதும் ஆணுக்கு 'பூணுல் கயிறு' அணிவிப்பதும். கும்ப கலசத்திற்கு 'நூல் கயிறு' அணிவிப்பதும், சகோதரத்துவத்தை வெளிப்படுத்த 'ரக்ஷா பந்தன்' என்று விழாவின் போது ஒருவர் கைகளில் ஒருவர் 'கயிறு' அணிவிப்பதும், இந்து சமயத்தின் சமயத்தின் தவிர்க்க முடியாத அங்கமாகி உள்ளார்ந்த உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறது.

சமயச் சடங்குகளில் ஆதினங்கள் முப்புரி நூலில் தண்டங் களில் சுற்றி ஞானத்தைப் பரப்புவதும், 'ஹத யோகத்தில்' உயிர்க் காற்றான பிராணவாயு செல்லும் மூக்குத் துவாரத்தில் 'சூத்ர நேதி' என்ற கயிற்றின்மூலம் மூக்குத் துவாரத்தை சுத்தி செய்வதும், கயிற்றின் மகிமையை உணரலாம்.

அதுபோன்றே இராட்டையைச் சுழற்றிக் கயிற்றைத் திரித்து நாட்டையே நற்கதிக்கு சுதந்திரம் பெற்றுத் தந்தார் காந்திஜி. பருத்திக் கயிறு இந்தியாவை சுதந்திர பாசக் கயிறாக ஒன்றிணைத் தது. உடல், மனம், ஆன்மா இவை மூன்றும் பட்டம், கயிறு காற்றினில் பறப்பது போல ஜீவனில் பறந்து கொண்டிருந்தது. விநாயகர் பெருமான் தனது பாசக்கயிற்றால் பக்தனை இணைத்து நற்கதி அடையச் செய்கிறார். அதை வெளிப்படுத்தவே 'பாசக் கயிற்றுடன்' பரிணமிக்கின்றார்.

## விநாயகரின் பூசையில் பயன்படுத்தும் மூலிகைகளும் பயன்களும்

**அறுகம்புல் :** புராணக் காலத்தில் அருகம்புல்லால் ஆரா தனை செய்து 'கதிமோட்சம்' பெற்றவர்கள் அநேகருண்டு. அருகம்

புல்லின் அற்புத ஆற்றல் யாதெனில் தாவர இனத்திலேயே முதன் முதலில் தோன்றியது புல்லினமாக 'அருகம்புல்' தான். இதனை மூதண்டம், பதம், அருகு,தூர்வை, மேகாரி என்ற பெயர்களில் சித்தர்கள் அழைத்துள்ளனர்.

அருகம்புல் விதை ஏதும் விதைக்கப்படாமலே எங்கும் செழித்து வளரக்கூடிய புல்லினம். இதுபோன்று தான் மனிதனின் 'ஆன்மா'விற்கு விதை ஏதுமில்லை. அது தானே ஏற்பட்டது. இவ்வாறு விதை ஏதுமின்றி தானே ஏற்பட்ட 'ஆன்மா' என்ற அறுகம்புல் விநாயகனே அதனை உனக்கு காணிக்கையாக்கி வழிபட்டு வாழ்க்கை நிலையை உயர்த்திக் கொள்கிறேன். என்ற அகப்பொருளால் அறுகம்புல் வைக்கப்படுகிறது.

எத்தனையோ வருடங்கள் மழையின்றி தரையானது காய்ந்து கிடந்தாலும், திடீரென்று மழை பெய்யும் காலத்தில் பூமியிலிருந்த உடனே உயிர் பெற்று பச்சை தரை விரிப்பினைப் போன்று தலை நிமிர்ந்து நிற்பது தான் அறுகம் புல்லின் மகத்துவம்.

அருகம்புல்லில் எத்தனையோ மருத்துவ குணங்களுண்டு. இதை முறைப்படி பக்குவம் செய்து உபயோக்கப்படுத்தும் போது கண் புகைச்சல், கண்ணோய், தலை நோய்கள், சளி, கோழை இவைகளைத் தீர்க்கும். வாதம், பித்தம், சிலேத்துமம், இந்நாடிகளை ஏற்ற இறக்கமில்லாமல் முறை படுத்தும்.

ஏதேனும் பிரயாணம் செல்லும் இடங்களில் காயம் பட்டால், அருகம்புல்லை இடித்து சக்கையாக்கி அதன் மீது கட்டுப்போடுவதால் காயத்தில் இரத்தப் போக்கு நின்று, அருகம்புல்லின் உயிர்சத்தால் உடனடியாக தசைகள் நல்ல நிலைக்கு வந்துவிடும்.

அருகம்புல்லின் கஷாயத்தைக் குடித்தால் மருந்துகளின் விஷத் தன்மையை (Medicine Poision) முறித்து விடும். இரத்தத்திலுள்ள இரசாயனக் குற்றத் தன்மையை நீக்கி இரத்தத்தை சுத்தப்படுத்தும்.

அருகம்புல்லை, ஒரு கைப்பிடி அளவு வேருடன் பறித்து எடுத்து வந்து நன்கு தண்ணீரில் கழுவி, ஒரு டம்பளர் தண்ணீரில் அந்த அறுகம்புல்லை மாலையில் போட்டு விட்டு மறுநாள்

காலை அத்தண்ணீரை மட்டும் குடித்து வந்தால் உடலில் உற்சாகமும், உதிரக் கொதிப்பும் நீங்கும். அதுபோல 40 நாட்கள் குடித்தால் நிச்சயம் மாறுதல் தெரியும். அவ்வப்போது இரு நாளுக்கு ஒரு தடவை அறுகம் புல்லை புதிதாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதுபோலவே தண்ணீரில் ஊறிய பின் எடுக்கின்ற அறுகம் புல்லை த்னியே எடுத்து நிழலில் உலர்த்தின பிறகு சூரணமாக அரைத்து வைத்துக் கொண்டு ஒரு சிட்டிகை தேனில் கலந்து, காலை நேரத்தில் உண்டு வருவதால் காயகற்பமாகும். உடலில் நோய் எதிர்ப்பு சக்தி அதிகமாகும். அதிகமாக உபயோகித்தால் உடல் உஷ்ணமாகும்.

அறுகம்புல்லோடு சிறிது கிழங்கு மஞ்சளை சேர்த்து அரைத்து, அதனை புண், படை, சொறி, சிரங்கு இவைகளுக்கு தடவினால் குணமடையும். அறுகம் புல்லினது கிழங்கினை எடுத்து நீரிலிட்டு நான்கில் ஒரு பங்காக சுண்டாக்காய்ச்சி குடிநீராக்கி குடித்து வர முத்தோஷங்கள் நீங்கும். உடலுக்கு அழகினையும் தரும். இரத்த மூலநோயுள்ளவர்கள் 25கிராம் அருகம் புல்லை அரைத்து பாலில் கலந்து குடித்தால் நோய் தீரும்.

பெருச்சாளி வாகனத்தின் மீதுள்ள விநாயகரின் வழிபாட்டில் அருகம்புல் இணைந்திருக்கிறது. பெருச்சாளி போன்ற கொடிய விஷ ஜந்துக்கள் கடிப்பதால் உடலில் ஏற்படும். விஷத் தன்மையை அறுகம் புல்லின் மகத்துவத்தால் தீர்த்து விடலாம். அதனை வெளிப்படுத்துவதாகவும் உள்ளது.

சித்தர் மருத்துவத்தில் கொடிய தோல் நோய்களுக்கு வெளிப் பூச்சு மருந்தாக 'அருகம் புல்லின்' வேரைக் கொண்டு செய்யப் பட்ட தூர்வாதி தைலம் மிகவும் சிறப்பு வாய்ந்தது.

எனவே உடல் நலமும் ஆன்மீக நலமும் ஏற்படுத்தவே விநாயகர் வழிபாட்டில் அறுகம்புல் இடம் பெற்றுள்ளது.

**எருக்கன் பூ மாலை :** 'எருக்கன்' செடியிற்கு 'அருக்கன்' என்ற பெயரண்டு. அருக்கன் என்றால் மூத்தகுமாரன். அதாவது சிவனின் மூத்த குமாரனான விநாயகரைக் குறிக்கும். எருக்கஞ்

செடியில் இரு வகைகள் உள்ளன. ஒன்று, சிறிது நீலம் கலந்த பூ பூக்கும். பிறிதொன்று வெள்ளைப் பூ பூக்கும்.

விநாயகர் வழிபாட்டில் விநாயகருக்கு கழுத்தில் எருக்கம் பூக்களினால் மாலை தொடுத்து அணிவிப்பது வழக்கம். எருக்கஞ் செடி முழுவதுமே வேர்,தண்டு, பட்டை, இலை, பூ, காய் மற்றும் பால் இவைகள் எண்ணிலடங்கா மருத்துவத் தன்மை உடையது.

அதனால் தான் முன்னோர்கள் வழிபாட்டுடன் இணைத்து வாழ்வை நோயில்லாமலிருக்க வழிச் செய்தனர்.

எருக்க இலையின் குணமானது பாம்புக் கடி விஷம் முதல் குஷ்ட ரோகம் (Lepnasy) வயிற்றுப் புழு,உடல் எரிப்பு தன்மை இவைகளை போக்கும் குணமுடையது. இதன் பழுத்த இலையை பழுக்காத உடற்கட்டிகளுக்கு வதக்கிக்கட்டினால் கட்டி பழுத்து உடைந்து சீழ் துர்நீற்றையும் வெளிப்படுத்தும்.

எருக்கன் இலையைக் காய வைத்து பொடிச் செய்து ஆறாத புண்களின் மேற்பூச்சாக போடத் தோல் நோய்கள் குணமாகும்.

எருக்கன் இலை மலமிளக்கியாகவும், உடலை தோற்றிவிப்ப தாலும் புழுக்களை கொல்லும் தன்மையும் உடையது. இது மட்டுமின்றி ஐந்து, பத்து இலைகளை ஒன்றாக ஒன்றின் மீது ஒன்று வைத்து அடுக்கி அவைகளை சுருளாக உருட்டி ஒரு பக்கம் சமமாக வட்டமாக அறுக்கவும். பிறக வேப்பெண்ணெயை லேசாக சூடு தாங்கும்படி காய்ச்சி சுருளாக உருட்டிய எருக்கன் இலையில் தொட்டு ஒற்றடம் உடலில் தர உடல் வலிகள் தீரும்.

எருக்கம் பூவினால் ஆஸ்துமாவால் அவதிப்படும் மூச்சிரைப் பும், இருமலும் குணமாகும். எருக்கம் பூவினோடு மிளகு, கிராம்பு இவைகளைச் சேர்த்து அரைத்து சிறிதளவு உண்டு வர மூச்சித் திணறல் குணமாகும்.

எருக்கம் பூ ஆண்மையை அதிகரிக்கச் செய்யும். எருக்கஞ் செடியின் சமூலம் என்று சொல்லக்கூடிய இலை, பூ, பட்டை, வேர்,தண்டு, இலைகளை ஒன்று சேர்த்து சிறிதளவு சூரணம் செய்து அதன் அளவிற்கு சமனாக சுக்கு, மிளகு திப்பிலி இவை

களையும் சூரணமாக சேர்க்கவும். இதனை தினசரி ½ கிராம் அளவிற்கு தேனில் குழைத்து காலையில் 40 நாட்கள் சாப்பிட்டு வர நெருப்பாக கொதிக்கும் உடல் நோய்கள் தீரும்.

எருக்கம் பாலை விஷ ஜந்துக்களின் கடித்தலால் உண்டான இரணத்தில் பூசிவிட விஷத்தன்மை உடலில் பரவாமல் தடுத்து விடும். எருக்கஞ் செடியில் ஈயச் சத்தும், உயர்ந்த பாதரச சத்தும் மிகுந்துள்ளது. விநாயகர் வழிப்பாட்டில் விஷத் தன்மையைப் போக்கும் வெற்றி மாலையாக எருக்கம் மாலையைக் கழுத்தில் அணிவித்து மகிழ்கின்றோம். வழிபாட்டின் வாயிலாக விஷத் தன்மையான எதிரிகளிடமிருந்தும் நம்மை உலக வாழ்வில் விநாயகர் காப்பாற்றுகின்றார்.

**அர்ச்சனை இலைகள்** : விநாயகர் பூசையின் போது அருச்சனை செய்வதற்கு 21 வகையான இலைகளை ஒவ்வொன்றாக பயன்படுத்துவார்கள்.வடமொழியில் இலைக்கு 'பத்ரம்' என்று பெய்ர். இவைகளை ஒரு மந்திரம் சொல்லி விநாயகருக்கு அர்ப்பணம் செய்வார்கள். அத்தகைய இலைகளை மருத்துவத்தன்மையையும் மந்திரத்தையும் அறிந்து கொண்டு பயன் படுத்துங்கள். **(அட்டவணை 1 பார்க்கவும்)**

விநாயகரை பூசை செய்வதற்கு முன்பாக இலைகளை பறித்து ஈரத்துணியால் துடைத்துக் கொள்ள வேண்டும். அதில் பூச்சரித்தும் அல்லது பழுத்தும் இல்லாமல் இருக்க வேண்டும். அதன் பிறகு மன ஒருமையுடன் ஒவ்வொரு மந்திரத்தையும் உச்சரித்துக் கொண்டே ஒவ்வொரு இலையாக அருச்சனை செய்ய வேண்டும்.

முன்பெல்லாம் தெய்வீக வழிபாட்டிற்கு வேண்டியே கோயில் அருகிலும், வீடுகளிலும் நந்தவனத்தை அமைத்து அதில் பூசைக்கு வேண்டிய செடிகளையும், மரங்களையும், பூக்களையும் வளர்த்தனர். அதனால் அக்காலத்தில் இந்த இலைகளெல்லாம் மிகவும் சாத்தியமாகியது. இன்றோர் கலியுகம் எங்கும் செயற்கை தனமும், பகட்டும் பெருகி விட்டது. அதனால் வழிபாட்டிலும் வஞ்சனைகள் மலிந்து விட்டது.

அட்டவணை - 1

| மந்திரம் | சமர்ப்பிக்கும் இலை | மருத்துவப் பயன்கள் |
|---|---|---|
| 1. ஓம் சுமுகாய நம: | அருகம் புல் | கண்ணோய்கள் வராமல் காத்து வாத, பித்த சிலேத்தும நாடிகளை முறைப் படுத்தும். |
| 2. ஓம் கணாதிபதியே நம: | மாசிப் பத்திரியின் இலை | மேகநோய், வெட்டை, சூடு, சூட்டு இருமல் போன்றவற்றை குணப் படுத்தும். |
| 3. ஓம் உமா புத்ராய நம: | வில்வ இலை | உடலின் வெப்பத்தை நீக்கி, ஆண் மையை பெருக்கும், வியர்வையை நன்கு வெளியேற்றும். |
| 4. ஓம் கஜானனாய நம: | இலந்த இலை | மேக நோய்களை நீக்கி, மூலாதாரத் தின் வெப்பத்தை நீக்கும். வயிற்று நோய் அகற்றும். |
| 5. ஓம் லம்போதராய நம: | ஊமத்தை இலை | சுவாசக் கோளாறுகள் நீங்கி மூச் சினை நன்கு தடையில்லாமல் இயக் கும் வாந்தியை உண்டாக்கும். |
| 6. ஓம் அரசனுவே நம: | அரச இலை | கருவறை நோய்களை நீக்கும். வாத, பித்த, சிலேத்தும நோய்களை தீர்க் கும். |
| 7. ஓம் கஜகர்ணாய நம: | துளசி இலை | சளி, இருமல், கோழையை அகற்றி, காய்ச்சல், சுவையின்மை, மாந்தம் இவைகளை போக்கும். |

| மந்திரம் | சமர்ப்பிக்கும் இலை | மருத்துவப் பயன்கள் |
|---|---|---|
| 8. ஓம் குஹாக்கிர ஜாய நம: | நாயுருவி இலை | இரத்தக் கழிச்சலையும், வெள்ளைப் படுதலையும் போக்கும். வீக்கத்தை நீக்கும். |
| 9. ஓம் ஏகதந்தாய நம: | வன்னி இலை | சொறி, சிரங்கு, படை, உடலின் நச்சுத் தன்மை இவைகளை போக்கும். அசீரன பேதியை நீக்கும் |
| 10. ஓம் கஜவத்கிராய நம: | மந்தாரை இலை | (சிவப்பு) உடல் பருமனை போக்கும், உடற்குளிச்சி, கண்குளிர்ச்சியை தரும். |
| 11. ஓம் சுராக கிரஜாய நம: | கரிசிலாங்கன்னி இலை | மஞ்சள் காமாலை, பல்நோய், தொழு நோய் தீர்த்து உடலில் புத்தி தெளிவும் பொன்மேனியும் உண்டாக்கும். |
| 12. ஓம் பால சந்தராய நம: | சிறுவழுதலை இலை | தொழுநோய் வெப்ப நோய் கரப்பான் கோழை இவைகள் தீரும். |
| 13. ஓம் விகடாய நம: | மருவு இலை | இதனை அரைத்து எண்ணெய்யில் கலந்து தோல் சொறி சிரங்கு, படையின் மேல் பூசினால் நோய் தீரும். |
| 14. ஓம் விநாயகாய நம | அலரி இலை | உடல் வெப்பத்தால் வரும் கட்டிகள், தொழுநோய், சுரங்களை போக்கும் குணமுடையது. |

| மந்திரம் | சமர்ப்பிக்கும் இலை | மருத்துவப் பயன்கள் |
|---|---|---|
| 15. ஓம் கபிலாய நம: | தேவதாரு இலை | பீனிசம் (sinus) தலை பாரம், போன்ற வற்றை போக்கி, ஞானேந்திரியங்களை காப்பற்றும். |
| 16. ஓம் பின்ன தந்தாய் நம: | வெள்ளெருக்கு இலை | உடலிலுள்ள நோய் கிருமிகளைப் போக்கும் பல்வேறு விஷக்கடிகளை குணப் படுத்தும் |
| 17. ஓம் பத் நிஹினாய நம | மருத மர இலை | சர்க்கரை நோய், வயிற்று நோய்கள் நீர் தாகம் போன்றவற்றை குணப்படுத்தி இதயத்தை பலமாக்கும். |
| 18. ஓம் வடவே நம: | தழுதாழை இலை | மூக்கடைப்பை நீக்கி, 80 விதமான வாத நோய்களை (பிடிப்பு இழுப்பு) நீக்கும் சுரத்தை போக்கும். |
| 19. ஓம் சூர்ப்ப கர்ணாய நம: | சாதி மல்லிகை இலை | வாய் புண், தல்ல வலி, மனக் கலக்கம் இவைகளை தீர்க்கும். உடல் குளிர்ச்சி தரும். |
| 20. ஓம் மூஷிகவா கனாய நம: | மாதுளை இலை | இரத்த மூலம், இரத்த வாந்தி, வயிற்று வலியை நீக்கி, குளிர்ச்சியை உண்டாக்கும். |
| 21. ஓம் சர்வசித்தி ப்ரதாயகாயநம: | விஷ்ணு கிரந்தி இலை | உடல் உரமேற்றும் கோழையை நீக்கும், வியர்வையை பெருக்கி வெப்பத்தை போக்கும். |

எண்ணெய் விளக்கு ஏற்றுவதை விட மின்சார விளக்கினை அலங்காரமாக எரிய விடுகின்றனர். இதனால் அழகாக உள்ளது ஆனால் எண்ணெய் விளக்கு எரிந்துஅதில் வெளிப்படும் அனல் புகை சுற்று புற சூழ்நிலையை தூய்மை செய்வது போல, மின்விளக்கு செய்வதில்லை. விளக்கிலிருந்து வெளிப்படும் புகைகள் வெளியேற மேல்நோக்கி அமைந்த காற்றோட்ட வசதிகளும் இருக்க வேண்டும்.

அன்றலர்ந்த பூக்களால் தொடுத்த மாலையை இறைவனுக்கு அணிவதைவிட, செயற்கையாக பூக்களால்தயாரித்த மாலையையும், மின்சார போலியான ஊதுவத்தி, போன்றவற்றையும் அழகாக பூசை அறையில் வைத்து கடவுளையே ஏமாற்றும் நிலை பெருகியுள்ளது.

மிகப்பெரிய அழகான இடங்களில், தொட்டியில் சோற்றுக் கற்றாழையும் மருள் செடியையும், தொட்டியில் வைத்தால் கூட நீரில்லாமல் நீண்ட நாட்கள் வாழ்ந்து சுற்றுப்புறத்தையும், கண்ணொளியையும் பெருக்கும். ஆனால் அதற்கு மாறாக பெரிய அங்காடிகளில் செயற்கையான செடிகளையும், பூக்களையும் வைத்து மயக்குகின்றனர். இதை நான் சொல்லுவதால் உலகம் தன்னை மாற்றிக் கொள்ள போவதில்லை. ஆனால் இந்நூலைப் படிக்கும் நீங்களாவது உங்கள் வாழ்வில் செயல்படுத்தாமல் இருந்தால் போதுமானது.

விநாயகர் பூசையில் அருச்சனை இலைகளை தினசரி பயன்படுத்தி பூசை செய்ய வேண்டும் என்ற கட்டாயமில்லை. சதுர்த்தி, தினங்களிலும் அல்லது. விசேஷ பூசைகளிலும் பயன்படுத்தலாம். 21 இலைகளும் கிடைப்பது என்பது சில இடங்களில் அரிதான காரியமாகும். ஆகவே மேற்சொல்லியுள்ள 21இல் ஏதேனும் சில கிடைக்கும் இலைகளைக் கொண்டு அர்ச்சனை செய்யுங்கள் விநாயகனுக்கு இலைகளைக் கொண்டு அருச்சனை செய்து முடித்தவுடன் இலைகளை எடுத்து நிழலில் உலர்த்தி பக்குவமாக சன்னமாக அரைத்து சூரணம் செய்து கொள்ளவும். இதனை தினசரி தொடர்ந்து மூன்று மாதங்கள் வரை தேனில் குழைத்து 'துவரை பயிறு அளவில்' காலை உணவிற்கு முன் சாப்பிட்டுக் கொண்டு வரலாம். இதனால் உடலில் நோய்,

எதிர்ப்பு சக்தியும், உளநோய், ஆன்மநோய், யாவையும் விநாயகப் பெருமானாலும், மூலிகை இலைகளாலும் தீர்த்து வைக்கப்படும்.

ஏனெனில் வழிபாட்டின் வாயிலாக மனத்துாய்மை பெரு கிறோம். இவைகளை சூரணித்து உண்பால் உடல் தூய்மை பெருகிறோம்.

## மஞ்சளில் பிள்ளையாரும்

எந்தவொரு நற்காரியங்களும் வழிபாடுகளும், துவங்கிடும் பொழுது மஞ்சள் தூளில் சற்று தண்ணீர் விட்டு பிசைந்து ஐந்து விரல்களையும் ஒன்றிணைத்து பிள்ளையார் பிடித்து வைப்பார் கள். அதனருகே அறுகம்புல் ஒன்றையும் வைப்பார்கள். செய்யப் படும் காரியங்களில் தடைகள் யில்லாமலும், நற்பயன்களுடன் முடிவடையவும். மஞ்சளில் விநாயகர் இருப்பதாக பவித்து அவரை முன் வைத்து வழிபட்டு காரியத்தை துவங்குவதல் நல்லது.

மேலும் 'மஞ்சள் வண்ணம்' மங்கலத்தைக் குறிக்கும். மஞ்சள் கிருமிகளை அழிக்கும் ஆற்றல் படைத்தது. வேப்பிலை யும், மஞ்சளையும் சேர்த்தரைத்து அம்மைக் கொப்புளங்களுக்குப் போட ஆறிவிடும். மஞ்சளை சுட்டால் வரும் புகையை மூக்கில் லேசாக முகர பீனிசமும் தலை பாரமும் தீரும்.

மஞ்சள் தூளைத் தண்ணீரில் கலந்து தரையின் மீது தெளிக்க கிருமிகளும் பூச்சிகளும் விலகு ஓடும். மஞ்சள் தூளைத் தண்ணீரில் கலந்து வெந்நிற துணியில் தோ.ப்த்து ஆறியபின் அத்துணியை ஆடையாக அணிந்திருப்பதால் கடுமையான சுரம், தோல் நோய்கள், குத்திருமல், உடல் அரிப்பு, நீர்கருப்பு ஆகி யவை தீரும். கண்களுக்கு ஒளியைத் தரும். கண்ணில் தோன்றும் வலி, கண்ணருகல் கண் சிவந்து காணப்படுதல். 'மெட்ராய்' ஐ என்று சொல்லப்படும். கண்நோய், களுக்கு சிறிய வெள்ளைப் பருத்தித்துணியில் மஞ்சள் நீரைத் தோய்த்து, காய வைத்து மடித்து கண்களின் மீது அவ்வப்போது வைத்தால் நோயின் வன்மை சற்று குறையும். இந்து சமய வழிபாட்டில் ப்ரார்த்தனை செய்து கொண்டு கோவில்களுக்கு பாத யாத்திரையாகச் செல்லும் பொழுது மஞ்சள் ஆடையை அணிந்து செல்வர். இதனால் வெளியிலிருந்து நோய் கிருமிகள் தங்களைத் தாக்காமல்

இருக்கவும், தட்ப வெப்ப சூழ்நிலையில் தங்களின் உடல் நலம் குறையாமல் இருக்கவும், மஞ்சளில் தோய்த்த ஆடையை அணிந்தனர்.

பெண்கள் குளிக்கும் பொழுது உடலில் மஞ்சளைத் தேய்த்துக் குளிப்பதால் உடலில் ஏற்படும் துர்நாற்றம் நீங்கும். மேலும் உடல் பொன்னொளி வீசும். மஞ்சளில், விரல் மஞ்சள், கஸ்தூரி மஞ்சள், கிழங்கு மஞ்சள் என மூவகை உண்டு.

மஞ்சளின் மகிமையை உணர்ந்து முன்னோர்கள் வழிபாட்டில் பிள்ளையாரைப் பெருமைப்படுத்தி மஞ்சளில் பிடித்து வைத்தார்கள். மஞ்சளில் பிள்ளையாரைப் பிடித்து வைத்து அஞ்சாமல் காரியச் சித்தி பெற்றனர்.

## நெஞ்சங்களை இணைக்கும் நிவேதனப் பொருள்கள்

விநாயகர் சதுர்த்தி, சங்கடஹர சதுர்த்தி போன்ற விரத நாட்களிலும், மற்றும் மிகமுக்கிய வழிப்பாட்டு நேரங்களிலும் இறைவனுக்கு இயற்கையில் கிடைக்கும் பழ வகைகளையும், சமைத்துப் பிரசாத வகைகளையும் இறைவன் முன்பாக அர்ப்பணம் செய்து கற்பூர ஜோதி காட்டி விரதத்தை முடிவடையச் செய்கிறோம்.

அதன் நோக்கம் விரத நாட்களிலும், விசேஷ தினங்களிலும் சிலவகையான உணவுப் பொருட்களை கடவுளின் நிமித்தம் மன ஊக்கத்துடனும், பக்தியுடனும் நோன்பிருந்து செய்கிறோம். பிறகு அதனைக் குடும்பத்துடனும் மற்றும் உற்றார் உறவினர்களும் அக்கம் பக்கத்திலிருப்பவர்களுக்கும் அன்போடு வழங்குகிறோம். அவர்களும் இறைவனுக்குப்படைத்த உணவுப் பொருள்களை நமக்கு தருகின்றனர். இதனால் சகோதரத்துவமும், ஒருமைபாடும் அன்பும் பரஸ்பரமும் மனித நேயமும் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பாகுபாடும் மறைகின்றது.

இறை வழிப்பாட்டின் வாயிலாக இனிப்பும், காரமும், பட்சணங்களும் குடும்பத்தினர் உண்டு மகிழ்கின்றோம். காக்கைக்கும் படைத்து உலக சீவராசிகளை ஒரு நிமிடம் நினைக்கின்றோம்.

உண்ணா நோன்பிருந்து உள்ளொளி பெருக்கி இறைவனுக்கு நிவேதனம் செய்ய வேண்டும் என்ற உந்துதலால் தன்னுடைய

அறுசுவைகளையும் கட்டுப்படுத்தி நிவேதனப் பொருள்களைத் தயாரிப்பதால் உணர்ச்சிகளை அதன் போக்கிற்கு செல்லும் ஆற்றலைத் தடுத்து பக்குவப் படுத்துகிறோம்.

விரதமிருந்தும், கடின நோன்பிருந்தும் நிவேதனப் பொருள் களை பூசையின் முடிவில் இறைவனுக்கு அர்ப்பணித்துப் பிறகு உண்ணும் போது பல்வகையான சத்து நிறைந்த உணவை உண் கிறோம். இதனால் உடல் உறுதியாகின்றது. நிவேதனப் பொருள் களில் அனைத்து வைட்டமின்களும் கலந்துள்ளதால் விழா நாட்களில் மட்டுமாகிலும் நல்ல உணவை உண்ணும் பாக்கியம் பலருக்குக் கிடைக்கின்றது.

விசேஷ நாட்களில் படைத்த உணவுப் பொருட்களையும், பட்சணங்களையும் பலருக்கு தருகிறோம். அன்பும் நல்ல எண்ணங்களும், சகோதரத்துவமும் உள்ளவர்கள் அதை வாங்கக் கொண்டு உண்டு, நம்மோடு பரஸ்பரம் கொள்வார்கள். ஆனால் சிலர் சாகாவரம் படைத்த இறைவனுக்குப் படைத்ததைச் சாத்தான்களுக்குப் படைத்தது என்று நம்மனம் நோகச் செய்து அன்னிய கைகூலிகளாக அலைந்துக் கொண்டிருப்பது வருந்தத் தக்கது. அத்தகையவர்கள் தருகின்ற இறந்து போய் மூன்றாம் நாள் புசிக்காமல் உயிர்பித்தவர்க்கு விழா எடுத்து தரும் உணவு பண்டங்களை மத பிணக்குகளுக்கும் இல்லாமலிருக்கும். நாமும் வாங்கியிருந்தால் அவர்களுக்கும் உண்மை நிலை புரிந்து கொண்டு நல்வழி படுவர். இறைவழிப்பாட்டில் ஏற்றம் இறக்கமு மில்லாமல் உண்மையை அறிந்து உன்னத நிலையை அடையுங் கள் நெஞ்சங்களை இணைப்பதே நிவேதனப் பொருள்களாகும்.

## கொழுக்கட்டை

விநாயகருக்கு படைக்கும் கொழுக்கட்டையின் தாத்பரியம் யாதெனில் பிரம்மம் அண்டத்தின் அனைத்து இடங்களிலும் பரவி நிறைந்திருக்கிறது என்பதை உணர்த்துவது கொழுக்கடையான அண்டமாகும். முட்டை வடிவமுள்ள கொழுக்கட்டை மாவான மேல்புறமும், அதனுள் நிரம்பிய பூரணமும் பிரம்மமாய் இருக்கிறது. இதைத்தான் விநாயகர் கையில் கொழுக்கட்டையாக (மோகதகமா) கையில் வைத்துள்ளார்.

## விநாயகருக்குப் படைக்கும் நிவேதனப் பொருட்கள்

கொழுக்கட்டை : ஊறவைத்து பொடித்த பச்சரிசிமாவில் வெந்நீர் கலந்து பிசைந்து மத்தியில் வெல்லம், எள்ளு, ஏலம் போன்றவற்றை பொடி செய்து நடுவில் வைத்து மேலும் தேங்காய், சர்க்கரை, பயிறு முதலானவற்றை கலந்து உருண்டை செய்து ஆவியில் வேக வைத்தெடுப்பது கொழுகட்டையாகும். இது விநாயகருக்கு பிடிக்கும் என்பது ஐதீகம். சர்க்கரைப் பொங்கல், வெண் பொங்கல், பால் அன்னம், மிளகுச் சோறு, எள் அன்னம், கடுகு அன்னம் போன்ற அன்ன வகைகள் காய்கறியில் சமைத்த அவியல், துவையல்கள், பூசணிக்காயில் செய்த குழம்பு வகைகள், அப்பம், லட்டு, பிட்டு, அடை, வடை பணியாரம், தேன்குழல் போன்ற பட்சணங்கள், மா, பலா, வாழைப் பழம், மதுளம் பழம், பிரப்பம் பழம், நாவற் பழம் போன்ற பழவகைகள் இளநீர், கரும்புச்சாறு, சர்க்கரைப் பாகு, தயிர், நெய், மோர், தேன் போன்ற நீர்தன்மையான பானங்களும் அவல், பொரி, கடலை, மஞ்சள் சோளம், கரும்பு போன்றவைகள் விநாயகர் வழிபாட்டில் இடம் பெறுகின்றது.

தூபப் புகை போடுவதற்கு எறுக்கு, சந்தனம், அகில், கருங்காலி, வில்வம் ஆகியவற்றின் சிறு சுள்ளிகளால் ஐந்து தூபப் புகை காண்பிக்கப்பட வேண்டும். இதனால் மூக்கின் வழியாக தூபப்புகை சென்று உடலைச் சுற்றுருக்கும், சுத்தப்படுத்தும், மேலும் நாமி சூழலையும் சுத்தப்படுத்துகிறது.

விநாயகருக்குப் படைக்கும் நிவேதனப் பொருள்கள் ஒவ்வொன்றிருக்கும் தனித்தனியே எண்ணற்ற மருத்துவப் பயன் கள் உண்டு. வசதி வாய்ப்பு இல்லாதவர்கள் உண்மையான உள்ளன்போடு மானசீகமாக ஒரு பூ, ஒரு இலை, ஒரு சிறு குவளை சுத்தமான தண்ணீரை வைத்தும் பூசை செய்யலாம். இது பகவத் கீதையில் கிருஷ்ண பரமாத்மா கூறும் வழிபாட்டு முறையாகும். நீங்கள் இறைவனுக்கு மனப்பூர்வமாக என்ன செய்கிறீர்களோ; அதனைப் போன்று பன்மடங்காக வாழ்க்கையில் நீங்கள் பலவற்றைப் பெற்றுக் கொள்வீர்கள்.

***



# சித்தி - புத்தி - சக்தி தரும் யோகாசனங்கள்

ஒவ்வொரு சமயத்தினரும் தங்களது முகமன் கூறுவது ஒவ்வொரு விதமாக உள்ளது. இந்து சமயத்தினர் மார்ப்பிற்கு நேராக கைகளைக் குவித்து வணக்கமென்று 'முகமன்' கூறுகின்றனர். மற்றொரு சமயத்தினர் ஒருவரை ஒருவர் ஆறத்தழுவிக் கொண்டு முகமன் கூறுகின்றனர். இன்னுமொரு சமயத்தினர் கைகளை குலுக்கி வந்தனம் செய்கின்றனர்.

காவல் துறை, இராணுவதுறை, ஆசிரிய பெருமக்கள், மடாதி பதிகள், ஆதினங்கள், அரசியல்வாதிகள் போன்ற எத்தனை துறையை சார்ந்தவர்களும் தங்களுக்கென்று ஒவ்வொருவிதமான வணக்கமுறைகளை வைத்துள்ளனர். அதுபோலவே பல்வேறு நாட்டு இனமக்களும் தங்களுக்கென்று ஒரு கலாச்சார வணக்கத்தை வைத்துள்ளனர். இது உலகியல் வாழ்விற்கானது. அது போலவே மெய்யியலான ஆன்மீக வாழ்விற்கு யோகிகளும், சித்தர் பெருமக்களும் இறை வணக்கத்திற்கும், தியானத்திற்கும், பிராணாயாமம் என்ற மூச்சுப் பயிற்சிகளுக்கும் அடிப்படையான ஆசன முறைகளைக் கூறியுள்ளனர். அவற்றில் ஏதேனுமொன்றைத் தேர்வு செய்து தினசரி தியானத்தின் போதும், விநாயகரை வழிபடும் போதும் யோக ஆசனத்தில் அமர்ந்து வழிபட்டால் மூலாதார சக்தி விழிப்படைந்து, வாழ்வின் மர்ம முடிச்சிகளெல்லாம் அவிழ்க்கப்படும்.

யோகா ஆசனத்தில் அமர்ந்து விநாயகரை தியானிக்கும் பொழுது சித்தியும், புத்தியும், சக்தியாவும் உங்களைத் தேடி வந்தடைகின்றன. கை விரல்களும் 'முத்திரைகள்' எனப்படும் சிலவகை நிலையில் ஆசனத்துடன் வைத்து தியானிக்கும் பொழுது உடலுக்குள்ளிருக்கும் எழுபத்தியிராயிரம் நரம்புக்களுக்குள்ளும் ஆன்ம சக்தி அணுக்களாக ஊடுருவி பாய்கின்றது.

வெறும் தரையில் ஆசனமிடாமல், வெள்ளைத் துணி அல்லது பலகையான மனை போன்ற ஏதேனும் ஒன்றின் மீது ஆசனத்தைப் போட்டுக் கொண்டு கிழக்கு அல்லது வடக்கு திசை நோக்கி முகமிருக்க வேண்டும் அல்லது வணங்கும் தெய்வ மிருக்க வேண்டும்.

இறைவழிப்பாட்டிற்குரிய ஒன்பது யோகாசனங்களை இங்கு செய்முறையும் பயன்களையும் கூறுகின்றேன். இதில் உங்கள் உடல் நிலைக்கேற்ப உகந்ததைப் பயிற்சி செய்து கொள்ளுங்கள். எல்லா ஆசனங்களில் கூட தியானம் செய்யலாம். குறைந்தது 5 நிமிடத்தி லிருந்து 20 நிமிடங்கள் வரை ஆசனத்தில் அமர்ந்திருக்க வேண்டும்.

**1. சுகாசனம்:** இந்த ஆசனம் தரையில் உணவு உண்ண உட்காரும் நிலையில் இருப்பதேயாகும். இருகால்களையும் சாதாரணமாக மடித்துக் கொண்டு உட்காரவும் இடுப்பு, கழுத்து, தலை நிமிர்ந்திருத்தல் வேண்டும். கை விரல்கள் ஒன்றுடன் ஒன்று கோர்த்து அழுத்தமில்லாமல், இருக்க வேண்டும். இது 'கற்கட முத்திரை' நிலையாகும். தியானத்தின் போது கண்களை மூடி புருவ மத்தியில் மனதை நிறுத்தவும்.

**பயன்கள்:** இயந்திர கதியான வாழ்க்கை நடைமுறையில் தரையில் உட்காருவதே ஒரு சுகம் தான். கால் மூட்டுகளும், நரம்புகளும் பலம் பெறுகின்றது. ஆசனவாயின் வெப்பத்தை நீக்குகிறது. தியானத்தின் போது மன ஒருமைப்படுகிறது.

**2. பத்மாசனம்:** வலது காலை மடித்து இடது தொடையின் மீதும், இடது காலை மடித்து வலது தொடையின் மீதும் வைக்க வும். இரு குதிகால்களும் முடிந்த வரை அடி வயிற்றைத் தொட்டுக் கொண்டு இருக்கட்டும். (Heals) கால் மூட்டுகள் தரையில் படிந்த நிலையில் இருக்க வேண்டும். இடுப்பு முதுகெலும்பை நிமிர்த்தி நேராக உட்காரவும். இது 'தாமரை' என்று அழைக்கப்படும் 'பதும' ஆசனமாகும். **சின்முத்திரை:** கைவிரல்களில் ஆள்காட்டி விரலை பெருவிரலின் நுனியோடு தொட்டு மற்ற மூன்று விரல்களையும் நீட்டியபடி இருக்க வேண்டும். இதுவே 'சின் முத்திரை' என்று அழைக்கப்படும்.

பரமாத்மாவான பெருவிரலும் சீவாத்மாவான ஆள்காட்டி விரலும் ஒன்றிணைந்தால் மூன்று காலங்களையும் தியானித்தால் அறிந்து கொள்ளலாம் என்ற தத்துவத்தின் அடிப்படையை 'சின்முத்திரை' உணர்த்துகிறது.

**பயன்கள் :** நாபிக் கமலத்தின் அருகில் உறங்கிக் கிடக்கின்ற குண்டலி சக்தியை விழிப்படையச் செய்கிறது. மனமும் உடலும் சுவாசமும் ஒன்றிணைய பத்மாசனம் உதவி செய்கிறது. கால் மூட்டுவலிகள் வராமல் தடுக்கின்றது. அபான வாயுவை வெளிப்படுத்துகிறது.

**3. சித்தாசனம்:** இடது காலை மடித்து ஆசன வாயின் (எருவாய்) அருகில் குதிகால் வைக்கவும். அதன் மீது வலதுகாலை மடித்து (கருவாய்) குறிக்கு மேல் அழுத்தமில்லாமல் வைக்கவும். இரு கால் மூட்டுகளும் விரிந்திருக்க வேண்டும். உடல் நிமிர்ந்து விரைப்பில்லாமல் இயற்கையாக உட்காரவும். இது சித்தாசன மாகும். 'சித்தாசனம்' சிருங்கார எண்ணங்களைப் போக்கி, பெரு நிலையை அடைய வழிகாட்டும். பல்வேறு சித்திகளைத் தருவ தால் இதற்கு சித்தாசனம் என்று பெயர்.

**சிவலிங்க முத்திரை :** இடது கை விரல்களை நாபிக்கு நேராக கொண்டு வந்து வலதுகுதிகாலின் மீது உள்ளங்கை விரல்கள் இணைந்த நிலையில் வைக்கவும். அதன் மீது வலது கை விரல்களில் பெருவிரல் தவிர மற்ற நான்கு விரல்களையும் உள்முகமாக மடிக்க வும். வலது பெருவிரலை நிமிர்த்திய நிலையில் இடது உள்ளங் கையின் மீது நடுவில் வைக்கவும். இது சிவலிங்கமும் பீடமும் போல இருப்பதால 'சிவலிங்க முத்திரை' என்று அழைக்கப் படுகிறது.

**பயன்கள் :** மூலாதாரத்தில் ஏற்படும் வெப்பத்தை தணித்து, அபான வாயுவை நன்கு வெளியேற்றுகிறது. சிதறி ஓடும் எண்ணங் களை சேகரித்து சித்தாசனமானது நுட்பமான எண்ணங்களாக மாற்றுகிறது. போக சக்தியை சேமித்து யோக சக்தியாக மாற்று கிறது. தொடர்ந்து பன்னிரெண்டு ஆண்டுகள் சித்தாசனத்தில் தியானம் செய்தால் பல அரிய சித்திகள் வாய்க்கப் பெறுவீர்கள்.

## MEDITATION - ASANAS - தியான நிலை ஆசனங்கள்



யோகதண்டாசனம்
YOGA DANDASANĀ



வஜ்ராசனம்
VAJRĀSANĀ



வீராசனம்
VIRĀSANĀ



பத்ராசனம்
BHADRĀSANĀ

## MEDITATION - ASANAS - தியான நிலை ஆசனங்கள்



சுகாசனம்
**SUKHASANĀ**



பத்மாசனம்
**PADMĀSANĀ**



சித்தாசனம்
**SIDDHĀSANĀ**



கோமுகாசனம்
**GOW MUKHĀSANĀ**

**4. கோமுகாசனம் :** இருகால்களையும் முன்நோக்கி நீட்டவும். வலது காலை மடித்த இடது இடுப்பிற்கு பக்கத்தில் தரையில் வைக்கவும். பிறகு இடது காலை மடித்து வலது இடுப்பிற்கு பக்கத்தில் தரையில் வைக்கவும். இரு கால் மூட்டு இணைப்புகளும் நாபிக்கு நேராக இருக்கும் படி வைக்கவும். இது கோமுகாசனமாகும். 'கோமுகம்' என்றால் பசு மாடு உட்கார்ந்த நிலையில் இருந்தால் எப்படி இருக்குமோ அந்த நிலையில் இவ்வாசனம் இருக்கும்.

கைவிரல்கள் ஒன்றை ஒன்று பொருத்திக் கொண்டு கற்கட முத்திரையில் இருக்கவும்.

**பயன்கள் :** மூலக் கனலை தோற்றுவித்து ஞானக் கனலாக உடல் முழுவதும் பரவிடச் செய்கிறது. பாலியல் கோளாறுகள் வராமல் தடுக்கிறது. மனதை உள்முகமாக திருப்பி தன்னைத்தான் உணருகின்ற ஆற்றலை அளிக்கிறது. கற்ற முத்திரைக்கு முன்பு கூறிய பலன்கள் அனைத்தும் கிடைக்கின்றது.

**5. சுவஸ்திகாசனம்:** 'ஓம்' என்ற புனித கூறியிடைப் போன்றே ஒரு புனித குறியீடாக 'ஸ்வஸ்திக்' கருதப்படுகிறது. இவ்வாசனம் தியானத்திற்குரிய இருக்கையில் முக்கிய இடம் வகிக்கிறது. இரு கால்களையும் முன்புறம் நீட்டவும் வலது காலை மடித்து இடது தொடை, கணுக்கால் இவைகளுக்கு மத்தியில் வைக்கவும். பிறகு இடது காலை மடித்து கீழ்ப் புறமாகக் கொண்டு வலது தொடை, கணுக்கால் இவைகளுக்கு மத்தியில் வைக்க வேண்டும்.

இரு கால் மூட்டுப் பகுதியும் தரையில் தொட்டுக் கொண் டிருக்க வேண்டும். முதுகு இடுப்பு நிமிர்ந்த நிலையில் வைக்கவும். இது 'ஸ்வஸ்திக்'காசனமாகும்.

இருகை விரல்களை ஒன்றுடன் ஒன்று பொருத்தி 'கற்கட முத்திரையில்' இருக்கவும்.

**பயன்கள்:** கால் பாதங்க்ளிலுள்ள நரம்பு நுனிகளுக்கு இலேசான அழுத்தத்தை ஏற்படுத்தி உடலைச் சமன்படுத்துகிறது. மனதை ஒருநிலைப்படுத்தவும், இறை நிலை பெற இவ்வாசனம்

உதவுகிறது. வாசியின் நிலையை ஆழ்நிலைக்குக் கொண்டு செல்கிறது.

6. பத்ராசனம் : 'பத்திரம்' என்றால் இலை, அதிஷ்டம், அம்பு, மகிழ்ச்சி, செல்வம், நன்மை, திருமுகம் போன்ற எனண்ணற்ற பொருளைத் தரும்.

செய்முறை : இரு கால்களையும் நேராக நீட்டவும். பிறகு இரு பாதங்களையும் ஒன்றுடன் ஒன்று பொருத்திக் கொள்ளவும். முன்புறம் குனிந்து கால் விரல்களை சேர்த்தவாறு குதிகால்கள் ஆசன வாய்க்கு நேராக வருமாறு இழுத்து நிறுத்தவும். உடலுக்கேற்ப செய்யவும். இதுவே பத்மாசனமாகும்.

மச்ச முத்திரை : இடது கை விரல்களில் பெருவிரலை மட்டும் சற்று விரித்து மற்ற நான்கு விரல்களும் இணைந்த நிலையில் குதிகால் மீது உள்ளங்கை வருமாறு வைக்கவும். பிறகு அதற்கு இணையாக வலது கைவிரல்களை முன்போலவே இடது கையின் மீது வைக்கவும். இந்நிலை 'மச்ச முத்திரை' என்று அழைக்கப்படும். பார்ப்பதற்கு மீன் இறக்கை போன்று இரு புறமும் பெருவிரல்களும், கூறிய விரல்கள் மீனின் உடலைப் போன்றும் அழகாக இருக்கும்.

பயன்கள் : இரு கால்களும் விரிக்கப் படுவதால் மூலநோய் கள் வராமல் தடுக்கப்படும். பாதங்கள் ஒன்றை ஒன்று அழுத்தப் படுவதால் அக்கு பிரஷரின் மூலம் உடலில் சக்தி கிடைக்கிறது. கால் மூட்டு இணைப்புகளுக்கு சக்தயை அளித்து வாத நோய்கள் அணுகாமல் காப்பாற்றும், சிறுநீரகங்களுக்கு நல்லசக்தியை அளிக்கும். அடிவயிற்றிலுள்ள 72,000 நரம்புகளையும் நன்கு தூண்டிவிடுகிறது.

மச்ச முத்திரையால் போக இச்சைகள் கட்டுபாட்டிற்கும் ஒழுங்கிற்கும் வருகிறது.

7. வஜ்ராசனம்: இரு கால்களையும் மடித்து குதிக்கால்களின் மீது இடுப்புப் பகுதியை வைத்து உட்காரவும். குதிகால்களை உங்களுக்கு ஏற்ற வகையில் சேர்த்தோ அல்லது விலக்கியோ

வைத்துக் கொள்ளவும். கால்விரல்கள் முழுமையாக தரையில் படும் படி விரித்து வைக்கவும். இரு கால் மூட்டுகளின் மீதும் இரு உள்ளங்களை வைத்துக கொள்ளவும். முதுகெலும்பு, இடுப்பு, தலை இவைகள் நேராக இருக்க வேண்டும். இதுவே வஜ்ராசன மாகும்.

**பயன்கள் :** வஜ்ராசன நிலையில் தியானம் செய்யும் பொழுது ஆறு ஆதாரசக்கரங்களும் விழிப்படைகின்றன. ஜீரணசக்தியை நன்கு துண்டிவிடச் செய்கிறது. மூலம் பிஸ்டில்லா போன்ற குத (Piles) நோய்கள் வராமல் தடுக்கிறது. வஜ்ரத்தைப் போன்று உடல் எல்லா வயதிலும் கட்டுக் குலுங்காமல் பாதுகாக்கிறது.

**8. கூர்மாசனம்:** 'கூர்மம்' என்ற ஆமையை குறிக்கிறது. இது தண்ணீரிலும் தரையிலும் வாழும் உயிரினம். மிக ஆழ்ந்த சுவாசத்தை எடுத்துக் கொள்வதால் நூற்றுக் கணக்கான ஆண்டுகள் வாழுகின்ற அற்புத இனம். அதன் உடலமைப்பை ஒட்டி இவ்வாசனம் இருப்பதால் கூர்மாசனம் என்று அழைக்கப்படு கிறது. இந்நிலை பல்வேறு யோக நூல்களில் பல் முறைகளில் இருப்பினும், தியானத்திற்குரிய ஆசன நிலை 'கூர்மாசனம்' இதுவேயாகும்.

இருகால்களையும் முன்புறம் நீட்டவும். வலது காலை மடித்து வலது புட்டத்திற்கு கீழே வைத்து கால் பெருவிரல் வெளிபுறம் பக்கவாட்டில் இருக்கும் படி வைத்து உட்காரவும். அதுபோன்றே இடது காலை மடித்து இடது புறம் வைத்து உட்காரும். இரு கால் மூட்டுகளின் மீது இரு உள்ளங்கைகளையும் வைக்கவும். உடல் நிமிர்ந்து இருக்கட்டும். இதுவே கூர்மாசன மாகும். ஆரம்ப நிலையில் கால்வலிஉள்ளவர்கள் மெத்தென்ற விரிப்புகளில் சாதாரணமாகப் பயிற்சி செய்யலாம்.

**பயன்கள் :** கால் இணைப்புகள் பலம் பெறுகிறது. ஆறு ஆதாரங்களின் முதல நிலையிலுள்ள மூலாதாரத்தை மூடிக் கொண்டிருக்கும் அழுக்குகளை வெளியேற்றுகிறது. மூலக் கனலை தூண்டி விட்டு முழு ஆற்றலையும் அற்புத சக்தியாக மாற்றுகிறது. மூலநோய்கள் வராமல் தடுக்கிறது.

**9. யோக தண்டாசனம்:** யோக நிலையில் தவம் செய்யும் முனிவர்கள், யோகிகளின் கை தோள்பட்டை இவைகளின் இணைப்பான அக்குளில் 'தண்டம்' என்ற "T" வடிவில் கோலொன் றிருக்கும். நீண்ட தவம் செய்யும் போதும் சுவாசத்தின் நிலை களான சூரியக் கலை, இடகலை இவற்றை மாற்றவும் ஜப மாலை உருட்டவும் இந்த யோக தண்டத்தைப் பயன்படுத்துவர். இவ்வாசனம் முனிவர்கள் யோகதண்டத்தை வைத்திருக்கின்ற நிலையிலுள்ளதால் 'யோக தண்டாசனம்' என்று அழைக்கப் படுகிறது.



யோகாசனத்தால் உடலிலுள்ள சக்கரங்கள் சக்தி பெறும் நிலை

இருகால்களையும் முன்புறம் நீட்ட வேண்டும். இடது காலை மடித்து இடுப்பிற்குப் பக்கத்தில் கொண்டு வரவும். பிறகு வலது காலை மடித்து கால் பாதத்தை வலது கை அக்குளில் வைக்க வேண்டும். இதுபோல இடது காலையும் மாற்றிச் செய்யலாம். இந்நிலையில் கைகளில் ஜபமாலை வைத்து ஜபம் செய்யலாம். அல்லது இறை உருவை பார்த்தவாறும் இருக்கலாம்.

*பயன்கள் :* யோக சித்தி கிடைத்திட வழிசெய்கிறது. கால் மூட்டின் நரம்புகளும் எலும்புகளும் உன்னத பலனைப் பெறு கிறது. இயற்கையாக நடைபெறும் வார சரங்கள் (சுவாச நிலை கள்) சரியாக நடைபெற செய்கிறது. 72 ஆயிரம் நரம்புகளும், ஆறு ஆதார சக்கரங்களும் விழிப்படைந்து சித்திகளை தருகின்றது யோக தண்டாசனம்.

சித்தி, புத்தி, சக்தி தருகின்ற ஒன்பது யோகாசனங்களை செய் முறை பயிற்சியில் செய்து காண்பித்திருப்பது யோகக் குழந்தை அருளீஸ்வரன். இவன் ஆறுமாத குழந்தையிலிருந்து யோகப் பயிற்சிகளை, ஞானப்பயிற்சிகளையும் செய்து வருகிறான். தற்போது 7 வயது நிரம்பிய நிலையில் ஆசனப் பயிற்சிகளை செய்துள்ளான்.

விநாயகர் வழிப்பாட்டில் வயது வரம்பின்றி அனைவருமே உணர்வு பூர்வமாக செய்யலாம். விவேக சிந்தாமணியில் எனும் பாடலில் கூறியிருப்பது இங்கு பொருந்தும்.

அல்லல்போம் வல்வினைப்போம் அன்னைவயிற்றில் பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம் - நல்ல
குணமதிக மாமருணைக் கோபுரத்தில் வீற்றிருக்கும் செல்வக்
கணபதியை கைதொழுதக் கால்.

ஆகவே ஆசனமிட்டு, ஆனை முகத்தானை ஐம்புலன் அடக்கி ஆன்மநலனைப் பெறுவீர்களாக.

***



# ஏற்றம் பெற காற்றையடக்குங்கள்!

**பிராணாயாமத்தில் கும்பகமும் நாடி சுத்தியும்:** பண்டைய வழிப்பாட்டு முறையில் ஒரு பகுதியாக உடலில் உயிராய் நிற்கின்ற பிராணக் காற்றை இயக்கி, அதனுள் மந்திரத்தை இட்டு மனதை திறப்படுத்தினர். இதனால் உடலும் உயிரும் சுபிட்ச மடைந்து சுஷ்ம்னா நாடி திறந்து அருள்நிலை கிடைத்தது. அத்தகைய பிராணாயாமத்தில் இரண்டை உங்களுக்கு இங்கு கூறுகின்றேன்.

அதனை முறைப்படி வயிறு காலியாக இருக்கும் நேரத்தில் பூசையின் போதும் செய்து பூர்ணத்துவத்தை அடைவீர்களாக.

**கும்பகப் பயிற்சி:** மேலே கூறிய ஏதேனுமொரு ஆசனமிட்டு உட்காரவும். தலை முதுகு இவற்றை நேராக நிறுத்தவும். பிறகு மூக்கின்இரு துவாரங்களின் வழியாகவும் ஒரே சீராக ஆழ்ந்து மூச்சை இழுக்கவும். அவ்வாறு மூச்சை இழுக்கின்ற நேரத்தில் மனதுக்குள் 'ஓம் விநாயகாய நம'' என்ற மந்திரத்தை உச்சரித்த வாறு இழுக்க வேண்டும்.

அதன்பின் வலது கை விரலில் மோதிர விரலால் இடது நாசியையும், பெருவிரலால் வலது நாசியையும் மூடிக் கொள்ள வேண்டும். இப்போது மூச்சை அடக்கிக் கொண்டு நான்கு முறை அல்லது எட்டு முறை ''ஓம் விநாயகாய நம'' என்று உதடு அசையாமல் உச்சரித்து விட்டு பிறகு மெதுவாக இரு நாசிகளின் வழியே மூச்சை வெளியேற்ற வேண்டும்.

இவ்வாறு கும்பகப் பயிற்சியில் (மூச்சை அடக்கி) ஈடுபடும் பொழுது மூச்சு திணறுவதாகவோ, அல்லது முகம் விகார மாகவோ இல்லாமல் சிரித்த முகத்துடன் பயிற்சி செய்ய

வேண்டும். கும்பகப் பயிற்சியை வழிபாட்டின் போதுகுறைந்தது 10 முதல் 15 தடவைகள் வரைதியானம் செய்யலாம்.

'ஓம்விநாயகாய நம' என்ற மந்திரத்தைப் போன்றே வேறு உங்களுக்கு பிடித்தமந்திரத்திலும் கும்பகப் பயிற்சியை செய்யலாம்.

**பயன்கள் :** எளிதில்மனம் லயப்படும். சுவாச நோய்கள் வராமல் தடுத்து நுரையீரலுக்கு நல்ல சக்தியை தருகிறது. சில நொடிகள்மூச்சை அடக்குவதால் உடலினுள் உள்ள துள்ளிய நாடிகளில் பிராண சக்தி ஊடுருவி பாய்ந்து தச நாடியில் விழிப்பினையும் ஆன்ம சக்தியையும் அதிகரிக்கச் செய்கிறது.

உயிர் தந்த இறைவனை உயிர் காற்றான பிராணயாமத்தின் வாயிலாக ஒருமித்த உணர்வுடன் வழிபடுகிறோம்.

**நாடி சுத்தியில் கும்பகப் பயிற்சி :** முன்பு போலவே ஆசன நிலையில் உட்காரவும். கண்களை மூடி மூச்சின் மீது கவனத்தை வைக்கவும். மூக்கின் வலது துவாரத்தை வலது கைப் பெருவிரலால் மூடிக் கொள்ளவும். இடது துவாரத்தின் வழியாக மெதுவாக மூச்சை உள்ளிழுத்தவாறு ஓம் விநாயகாய நம' என்று மனத்தினுள் நினைத்தவாறு இழுக்கவும். பிறகு இடது நாசியையும் மூடிக் கொண்டு மூச்சை அடக்கி கும்பகத்தில் மனதுள் 'ஓம் விநாயகாய நம' என்று பலமுறை உச்சரித்து கொண்டு இறுதியாக வலது நாசியின் வழியாக மூச்சை வெளியேற்ற வேண்டும். அப்பொழுதும் 'ஓம் விநாயகாய நம என்று மனதுள் நினைத்துக் கொண்டே வெளியேற்ற வேண்டும்.

பிறகு மோதிர விரலால் இடது நாசியை மூடிக் கொண்டு வலது நாசியின் வழியாக மூச்சை உள்ளிழுத்தவாறு 'ஓம் விநாயகாய நம' என்று நினைத்தவாறு இழுக்க வேண்டும். அதன்பின் வலது நாசியையும் மூடிக் கொண்டு மூச்சை அடக்கி சிலமுறை 'ஓம் விநாயகாய நம' என்று மனதால் கூறிவிட்டு மீண்டும் இடது நாசியின் வழியாக மெதுவாக மூச்சை வெளியேற்ற வேண்டும். அப்பொழுதும் 'ஓம் விநாயகாய நம' என்று மனதுள் நினைத்துக் கொண்டே வெளியேற்ற வேண்டும்.

பிறகு மோதிர விரலால் இடது நாசியை மூடிக் கொண்டு வலது நாசியின் வழியாக மூச்சை உள்ளிழுத்தவாறு 'ஓம் விநாயகாய நம' என்று நினைத்தவாறு இழுக்க வேண்டும். அதன்பின் வலது நாசியையும் மூடிக் கொண்டு மூச்சை அடக்கி சில முறை 'ஓம் விநாயகாய நம' என்று மனதால் கூறி விட்டு மீண்டும் இடது நாசியின் வழியாக மெதுவாக மூச்சை வெளியேற்ற வேண்டும். அப்பொழுதும் 'ஓம் விநாயகாய நம' என்று நினைத்தவாறு மூச்சை வெளியேற்ற வேண்டும்.

இடது பக்க நாசியில் துவங்கி, வலது பக்க நாசியில் வெளியிட்டு மீண்டும்வலதுநாசியில் இழுத்து இட்து நாசியில் வெளியேற்றுவது ஒரு முறை 'நாடி சுத்தி கும்பகப் பயிற்சியாகும்.

இதுபோன்று குறைந்தது பன்னிரண்டு முறை பயிற்சி செய்யலாம். அதிக பட்சமாக சாதகர்களின் நேரத்தைப் பொறுத்து பயிற்சி செய்யலாம்.



சுவாசப் பயிற்சி செய்யும் முறை

**பயன்கள் :** உடலிலுள்ள எழுபத்தியிராயிரம் நாடிகளுக்கும் பிராண சக்தி' பரவுகிறது. மூளையின் வலது இடது பகுதிகளிலுள்ள நரம்புகளுக்கு பிரணக்காற்று சென்று பக்கவாதம் போன்ற நோய்கள் வயதான காலத்தில் வராமல் தடுக்கிறது. சித்தர்களின் தத்துவப்படி, உடலில் 10 இடங்களிலிருந்து தொழில் புரிகின்ற தச வாயுக்களான 1) பிராணன், (உயிர்காற்று) 2) அபாணன் (மலக் காற்று) 3) வியாணன் (தொழில் காற்று) 4) உதாணன் (ஒலிக்காற்று) 5) சமாணன் (நிரப்புக்காற்று) 6) நாகன் (தும்மல் காற்று) 7) கூர்மன் (விழியை இயக்கும் காற்று) 8) இருகரன் (கொட்டாவிக்காற்று) 9) தேவதத்தன் (இமைக் கற்று) 10) தனஞ் செயன் (உடலை இறந்தபின்பு வீங்கச் செய்யும் காற்று) ஆகிய பத்து வாயுக்களையும் நல்ல நிலையில் செயல்படுத்துவதே 'நாடி சுத்தி கும்பகப் பயிற்சியாகும்.

இயற்கையான முறையில்மூச்சை அடக்குதல் வேண்டும். வலுகட்டாயத்தின் பேரில் முரட்டுத்தனமாக, அவசரப்பட்டோ கண்டிப்பாக பயிற்சி செய்யக் கூடியது. ஏனெனில் உயிர்க்காற்றைக் கொண்டு உயிரை வளர்க்கும் பயிற்சி என்பதை ஆழ்மனதில் வைத்து பயிற்சி செய்ய வேண்டும்.

இனிக் காரியச் சித்தியும், உடலில் வீரியச் சக்தியும், நேரிய வழிகளில் தரும் விநாயகரின் மந்திரங்களையும், எந்திர சக்கரங் களையும் பற்றி அறிந்து கொள்ளுங்கள்.

* * *



# மந்திரமும் எந்திரமும் ஏகாந்தமும்...

மந்திரமும், எந்திரமும் மனிதனின் இந்திரியங்களைத் (புலனங்கள்) தூய்மைப் படுத்தி பிராணச் சக்தியின் வாயிலாக எண்ணில்லாத இன்பங்களை கொண்டு வந்து சேர்க்கும். மேலும் புறவுலகிலும் காற்று மண்டலத்தைத் தூய்மையாக்கும்.

எங்கோ ஒரு மூலையில் வெளிப்படுத்துகின்ற ஒலியும், ஒளியும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் காற்றின் அலைகளில் கலந்து நமது தொலைகாட்சியின் ஊடகத்தின் வழியே உல்லாசத்தை ஏற்படுத்துவது போல, எங்கும் நிறைந்துள்ள பரமாத்மாவின் சக்தி அலைகள் மந்திரம், எந்திரம் தியானம் மற்றும் பிராண சக்தியின் வாயிலாக நம்முள் சென்று உள்ளொளியையும் உயிரொலியையும் விருப்பத்திற்கேற்பவும், எண்ணங்களுக்கு ஏற்பவும் மாற்றி அமைக்கின்றது. காற்று மண்டலம் வெற்றிடமாக இருப்பது போல நமது ஊனக் கண்களுக்குத் தெரிகிறது. இருப்பினும் அம்மம்மா எத்தனை கோடி அலைகள் சுழன்று கொண்டிருக்கிறது. இவற்றை அறிய வேண்டுமானால் மின்னணு சாதனங்களையும் யோக நிலையையும், பயன்படுத்தி உணரலாம்.

ஒவ்வொரு மனிதனின் மனத்திலிருந்து வெளிப்படுகின்ற, நல்ல எண்ணங்களும், தீய எண்ணங்களும் காற்று மண்டலத்தில் நாளும் கலந்து கொண்டே இருக்கின்றன. எப்படி பூமியின் மீது வேண்டாத குப்பைகளும், புகைகளும்; நச்சுத்தன்மையான திரவங்களும் சேர்ந்தால் சூழ்நிலையில் மாசுத் தன்மையை (Pollution) அதிகரித்துநோய்களையும் விபரீதங்களையும் அதிகரிக்கச் செய்து விடுகின்றதோ, அதுபோலவே மனிதன் உள்ளிருந்து வெளிப்படுகின்ற தீய எண்ணங்களும், துர்குணங்களும், இச்சா

புத்திகளும் காற்று மண்டலத்தில் புகுந்து மாசுத் தன்மையை (Pollution) ஏற்படுத்தி விடுகிறது. நாம் வாழுகின்ற இடங்களில் நல்ல எண்ண அலைகள் அதிகமாக இருந்தால் அங்கே நல்லவர் களும், நற்காரியங்களும், அமைதியும், ஆத்ம ஞானமும் கிடைக் கின்றது. அதுவே நாம் வாழும் இடங்களில் காற்று மண்டலத்தில் தீய எண்ணங்களின் கதிர்வீச்சு அதிகமாக இருந்தால் எப்போதும் அக்காற்றை சுவாசிப்பதால் நமக்கு மன அழுத்தம், கோபம், இனம்புரியாத வேதனை, ஊக்கம் குறைந்து உலவும் நிலையை காம கசடுகளை ஏற்படுத்துகிறது. உதாரணமாக சுவாசத்தின் வழியே நறுமணம் சென்றால் நம்முள் புத்துணர்வும் ஏகாந்தமும் தோன்றுகிறது. அதுவே சுவாசத்தின் வழியே துர்நாற்றமும், அழுகிய வாசனையும் சென்றால். நம்முள் குமட்டலும், வாந்தியும் நோயையும் ஏற்படுத்துகிறது. எல்லாம் காற்றினுள் கலந்து மூக்கினுள் வரும் காற்றின் விளைவுகள்.

தற்போது நாம் வாழுகின்ற சூழ்நிலை காற்று மண்டலத்தில் அநேக தீய எண்ணங்களின் மாசுகள் கலந்து சுழன்று கொண்டி ருக்கிறது. அதை நாம் மூக்கின் வழியே சுவாசிக்கும் பொழுது அந்த எண்ணங்கள் நம்முடலையும் தாக்கி நமக்குள் மாற்றத்தை நிகழ்த்துகிறது. ஆகவே அதிலிருந்து நாம் தப்பித்து, நம்மையும் நம் எண்ணங்களையும் தூய்மை செய்து, நாம் வாழுகின்ற இடங்க ளின் எண்ணங்களின் தூய்மை செய்திட மந்திரமும் எந்திரமும், யோகமும் தியானமும் உதவுகிறது. இதனால் ஏகாந்தமும் கிடைக்கிறது.

இந்துச்சமய விஞ்ஞானிகளான முனிவர்கள், ரிஷிகள் இத்தகைய காற்று மண்டலத்தின் மாசுகளை (Pollution) தூய்மைச் செய்ய 'ஹோமம்' எனற சடங்கை, வழிபாட்டில் வகுத்தனர். முக்கிய இறை நிகழ்வுகளும், வாழ்வியல் சடங்கள் நடை பெறும் பொழுது, ஒரு அகண்ட அடுப்பான 'ஹோமகுண்டத்தை' ஏற்படுத்தி அதில் பல்வேறு மூலிகைகளையின் உலர்ந்த சருகுகளையும் சுள்ளிகளையுமிட்டு நெய், பட்டுத்துணி, கற்பூரம் போன்ற பல்வேறு பொருள்களை அதனுள் போட்டு தீயில் எரிந்து

புகை மண்டலத்தை ஏற்படுத்தி அதன் வாயிலாக காற்று மண்ட லத்திலுள்ள மாசுகளை (Pollution) களைந்தனர். அப்புகையின் வாயிலாக குழுமியுள்ள கூட்டத்தினரின் உடலையும், உள்ளத்தை யும், தூய்மை செய்தனர். ஏனெனில் ஓமப்புகையான மூலிகையினாலான புகை அவர்களது மூக்கு நாசியின் வழியேச் சென்று நோய் கிருமிகளை கொன்றிடும் ஆற்றலை அவர்களுக்கு அளிக்கும். ஆகவே மந்திரத்தையும், எந்திரத்தையும் அறியும் முன் யோகத்தின் சில அடிப்படைத் தத்துவத்தை ஆழ்மனதில் பதிய வைத்துக் கொள்ளுங்கள்.

மணச் சடங்கின் போதும் 'ஹோம குண்டத்தை வைத்து அதில் தீ வைத்து, மூலிகையையும், நெய்யையும் ஊற்றி அதி லிருந்து வெளிப்படும் புகைக் காற்றால் இளம் திருமண தம்பதி களின்மூக்கில் செல்வதாக அருகில் வைத்தனர். இதனால் 'ஹோமப் புகை' இளம் தம்பதிகளின் மூக்கின் வழியே சென்று அவர்களது உடலைச் சுத்தம் செய்யும். பிறகு சாந்தி மூகூர்த்தத்தின் போது முதன் முதலில் ஒருவரோடு ஒருவர் கலந்திடும் போது பாலியல் நோய்கள் வராமல் தடுக்கும் கவசமாக 'ஹோமப் புகையுள்ளது. மேலும் கணவன் மனைவி இவரது சுத்தமான தேகத்தால் குழந்தை உருவானால் நோயில்லா குழந்தையாக உருவாகும் வாய்ப்பாக ஆகி இருக்கிறது.

ஆகவே முக்கிய நிகழ்வுகளுக்கெல்லாம் ஜனத்திரள் கூடும் பொழுது, 'ஹேமம் வளர்ப்பதால்' பூமியின் மீது மாசுகட்டு பாட்டை குறைப்பதாகவும், வாழ்க்கின்றவர்களை வாசனை மூலிகையால் வாழ்விக்கும் அமிர்தமாகவும், இது உள்ளது. விநாயகரின் வழிபாட்டில் ஹோமப் புகை நம்மை நாமே தூய்மை செய்வதாக உள்ளது. நமது வீடும் துய நல் எண்ணங்கள் அதிகபடுத்தும் வாய்ப்பாகவும் உள்ளது.

உலகம் உற்சாகத்தின் விளிம்பில் உல்லாசமாக ஆடிக் கொண் டிருக்கிறது. நவீன விஞ்ஞானம் மனிதனின் மூல அணுனவ கூறு போட்டு உருப்பெருக்கியில் உற்று நோக்கி ஆயிரம் ஆண்டு களுக்கு மேல் வாழும் வழியை கண்டுபிடித்து காசு பறிக்கும்

கள்ளத்தனத்திற்கு முயன்று வருகிறது. எத்தனையோ நாடுகள் எண்ணற்றவை கண்டு பிடித்தாலும் ஏழைகளின் வாழ்வில் மட்டும் எள்ளளவும் மாற்றமில்லை.

நம்நாட்டுச் சித்தர்கள் செய்துவித்த ஆய்வுகளை அரங்கேற்றினால் அகில உலகமும் அமைதியாக ஆண்டாண்டு காலம் வாழலாம். மனிதன் உன்னத நிலையை அடையவும்,அவனது உடல், உயிர், ஆன்மா இவைகள் பாதிக்கப்படாமல் இருப்பதற்காக மணி, மந்திரம், ஔடதம் என்னும் கலையை உருவாக்கி தன்னைக் காத்து விண்ணுலக தேவர்கள் போல மண்ணுலகம் மாந்தர்கள் வாழ சித்தர்கள் வகை செய்தனர்.

ஒருவனுக்கு உடற்பிணி, உயிர்பிணி, உளப்பிணி, காலப் பிணி, கர்மப் பிணி இவைகளால் பாதிக்கப்பட்டால் அதற்கான மருத்துவப் பரிகாரம், மந்திரப் பரிகாரம், கர்மப் பிணி பரிகாரம் போன்றவற்றால் பிணிகளுக்கு ஏற்ப தீர்வு கண்டால் மீளாதுயரத்திலிருந்து தன்னை மீட்டுக் கொள்ளலாம். இதனை நான்கு வேதங்களான ரிக், யஜுர், சாம அதர்வண வேதம் ஆகியவற்றில் அடங்கியுள்ளது. இதில் மந்திர சாத்திரங்கள் அதர்வன வேதத்தில் அதிகமாக உள்ளது.

ஒரு இயந்திரம் இயங்க வேண்டுமானால் அதற்கென்று சில அடிப்படைத் தத்துவமும் இயக்க ஆற்றலுக்குத் தேவையான கருவிகளும், சக்தியும் தேவைப்படுகிறது. உதாரணமாக ஒரு மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டால் இரண்டு காற்று நிறைந்த சக்கரமும் முக்கிய இயந்திரம் (Enginee) மற்றும் முறையாக இயங்குவதற்கு தேவையான எரி பொருள் போன்ற இத்தனையும் சரி வர முறையாக இருந்தால் அந்த மோட்டார் சைக்கிள் நன்கு திறம்பட ஓடுகிறது. இவற்றில் ஏதேனும் ஒன்று தடைப்பட்டாலும் வண்டியின் இயக்கம் தடைப்படுகிறது.

அதுபோலவே மனித இயந்திரத்தை சித்தர்கள் 96 தத்துவங்களால் வகைப்படுத்தி உள்ளனர். இத்தத்துவ நிலையில் ஏதேனும் முரண்பாடுகள் ஏற்பட்டால் வாழ்க்கை சுழற்சியும், துன்ப நிலையும். மரணமும் சம்பவிக்கிறது. சித்தர்களின் உடற்

தத்துவத்தை 96ஐ உணர்ந்து கொண்டால் உலகத்தையும் தன்னையும் உணரலாம்.

அத்தகைய 96 தத்துவங்கள் யாதெனில் ஆன்ம தத்துவங்கள் - 24, தாதுக்கள் - 7, கோசங்கள் - 5, குணங்கள் - 3, மலங்கள் - 3, வியாதிகள் - 3, விகாரங்கள் - 8, ஆதாரங்கள் - 6, மண்டலங்கள் - 3, நாடிகள் - 10, வாயுக்கள் - 10, அவஸ்தைகள் - 5, வாசல்கள் - 9 ஆகும்.

இவைகளை ஒரு குருவினிடத்திலே முறையாக கற்றுத் தெரிந்து கொள்வது நல்லது.

இந்த 96 தத்துவங்களில் 'கோசங்கள்' என்பது ஐந்தாகும். அதுயாதெனில் அன்னமய கோசம் (உணவு உடம்பு), பிராணமய கோசம் (காற்று உடம்பு) மனோமய கோசம் (மனவுடம்பு), விஞ்ஞானமயகோசம் (அறிவுடம்பு), ஆனந்தமய கோசம் (இன்ப உடம்பு) ஆகியவையாகும்.

ஒரு வெங்காயத்தை எடுத்துக் கொண்டால் ஒன்றின் மேல் ஒன்றாக தோல்கள் போர்த்தப்பட்டு ஒரு முழுமையான வெங்காய மாகத் தென்படுகிறது. அது போலவே மனித உடம்பை ஐந்து கோசங்கள் போர்த்தி உள்ளன. இவைகளில் கண்களுக்கு தெரிவது, முதலாவதான 'அன்னமய கோசம்' தான் பிற நான்கு கோசங்களும் கண்களுக்கு புலப்படுவதில்லை. கண்களுக்குப் புலப்படாத இந்த 'கோசங்கள் தான் தியானம் செய்யும் மனி தனுக்கு கவசங்களாக இருந்து தீய சக்திகளிலிருந்து காக்கின்றன. சித்தர்கள் வகுத்திட்ட எந்திரங்களும் மந்திரங்களும் 'கோசங்களை தூய்மைப்படுத்தி உடலையும் உள்ளத்தையும் காப்பாற்றுகின்றன.

சித்தர்களின் எந்திரத்தையும் மந்திரத்தையும், பொருளாசை யினால் பணம் பண்ண எண்ணுபவர்களுக்கு கர்ம வினைகள் சூழ்ந்து கடைசி காலத்தில் கண்ணீர் விட்டு தேம்புவார்கள் என சித்தர் வேதம் கூறுகின்றது.

தனி ஒருவர் உழைப்பால் உயரும் போது, அல்லது நல்ல பெரும் செல்வாக்கு நிலையை அடையும் பொழுது, வித்தை

ஞானத்தில் சிறக்கும்பொழுது, எண்ணற்ற பரிசுகளும் பாராட்டு தல்களும் குவியும் பொழுது, இல்லறத்தில் குழந்தைகளோடு குதூகலமாக வாழும் பொழுது பணியில் பதவி உயர்வு பெறும் பொழுது சிலவகை துன்பங்கள் மோதுகின்றன. முற்பிறவி வினைகளும், கோள்களின் (Planets) சுழற்சியினாலும் உடலால், மனதால் சொல்லால் செய்கின்ற பாவச் செயல்களாலும் நம்மை துன்பத்தில் தள்ளுகின்றன.

இது ஏதெனில் சிலரின் பொறாமைகள், கண் திருஷ்டிகள், தீய சக்திகளால் தீண்டிவிட முனைதல், உயர்ந்த நிலை உருக் குலைய வைக்க முயலுதல், ஆரோக்கியத்தை சீர் குலைய வைக்க முற்படுதல், குடும்பத்தை சிதறு தேங்காய் போல் சீரழிக்க கங்கணம் கட்டுதல் போன்ற தீய சக்திகளின் தூண்டுதலினால் தோல்விகள் நம்மைத் தழுவுகின்றன. உடல் நலத்தை பாழாக்கு கின்றன. இவைகளை வெல்லுவதற்கு நீங்களாகவே முறையாக, சரியாக தியானத்தோடு, சித்தரின் விநாயகரின் எந்திரத்தை அமைத்து மந்திரத்தால் உச்சாடனம் செய்து எல்லா தீய சக்திகளி லிருந்தும் காப்பாற்றிக் கொள்ளுங்கள். அதற்கேற்ற விரதம், யாகம், பூசைகளை செய்து வினைகளைத் தீர்த்து வெற்றி நிலையை அடையுங்கள் துன்பமில்லா பெருவாழ்வையும், தூய மனதையும் பெறுங்கள்.

உயரமான கட்டிடங்களின் மேல் உச்சியில் செம்புகம்பி அல்லது செம்பு பட்டையை நீட்டி, அதனை தொடர்ந்து கட்டி டத்தின் பக்க வாட்டில் கொண்டு வந்து பூமியின் புதைப்பார்கள். இது இடி தாங்கி என்றுஅழைக்கப்படும். இதன் ஒரு முனை ஆகாயத்தை பார்த்தும் மற்றொரு முனை பூமியில் புதைந்தும் இருக்கும். இது ஏனெனில் மழைக்காலங்களிலோ அல்லது பிற சமயங்களிலோ இடி மின்னல் உண்டாகும். அத்தகைய நேரங் களில் மிகவும் சக்தி வாய்ந்த இடியான உயரமான கட்டிடத்தை தாக்காமல் அங்கு பொருத்தியுள்ள இடிதாங்கியான செம்பு கம்பி கிரகித்து அப்படியே தரையில் புவியீர்ப்பு விசையில் பூமியில் தள்ளிவிடும். இதனால் கட்டிடங்கள் கடுமையான பாதிப்பு

களுக்கு ஏதுவாகாமல் தப்பித்துக் கொள்ளும். கிராமங்களில் சில இடங்களில் பார்த்தால் உயர்ந்த பனைமரத்தின் மீது இடதாக்கி மொட்டை பனைமரமாக எரிந்து நிற்கும். இதில் எந்த உலோகமும் உச்சியின் மீது இல்லாததால் பச்சை மரமே பட்டு போய் விடுகிறது.

உயர்ந்த கோபுரத்தையும், கட்டிடத்தையும் இடிதாங்கி 'தான்' கிரகித்து கட்டிடத்தைக் காப்பது போல, உடலாகிய கோபுரத்தை தீய சக்திகள் தாக்கி அழிக்காமல் இருக்க எந்திரமும், மந்திரமும் மனிதனுக்கு அவசியமாகிறது.

கட்டிடத்தின் மேல் உச்சியில் உலோகக் கம்பிகள் பொருத்தப் படுகின்றன. அது போலவே எந்திர சக்கரங்களை எழுதுவதற்கு செம்புத் தகடு தங்கத் தகடு, பஞ்சலோகத் தகடு, காரீயத் தகடு, வெள்ளித் தகடு, போன்றவைகள் பயன்படுத்தப்படுகின்றன.

தியான நிலையில் உச்ச நிலையை அடைய சில சக்கரங்களை வில்வ பலகை, மாம்பலகை, பலாப்பலகை, தேவதாரு பலகை, ஆலம் பலகை அத்தி பலகை, எருக்கம் பலகை போன்ற பலகைகளில் எந்திரங்களை அமைத்து பூசை செய்து நன்நிலையை அடையலாம்.

எந்திரங்களை அமைக்கும் முறையும், பயன்படுத்தும் முறையும் பற்றி அடுத்து வரும் பக்கங்களில் பார்க்க.



வெற்றிதரும் விநாயகரை வசப்படுத்தி வாழ்க்கையில் வெற்றி பெறவும், தீய சக்திகளிலிருந்து விடுபடவும், நோய்களிலிருந்து விடுதலை அடையவும், சித்தர்கள் எந்திர சக்கரங்கள் அமைத்து, தினசரி பூசை செய்து வெற்றி அடைந்தார்கள். அத்தகைய சக்கரங்களில் மிகவும் சக்தி வாய்ந்த மூன்று சக்கரங்களை இங்கு குறிப்பிட்டுள்ளேன். மூன்று சக்கரங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்து வளர்பிறையில், பிரம்ம முகூர்த்த நேரமான காலை 4.00 மணி முதல் 6.00 மணிக்குள் நீராடிவிட்டு பூசை அறையில் அமர்ந்து விநாயகனை துதித்துச் சக்கரத்தை காரீயத் தகடு, வெள்ளித் தகடு, தங்கத் தகடு, செப்புத் தகடு இவைகளில் தங்களின் வசதிக்கேற்ப

## விநாயகர் வசிய சக்கரம்




மூல மந்திரம் : ஓம் கணபதி ஶ்ரீம், ஹ்ரீம் ஐயும் கிலியும் சவ்வும் சுவாஹா! (108 முறை சொல்லவும்)

# இன்னொரு விநாயகர் வசிய சக்கரம்




## அட்ட கணபதியும் ஒன்றாய் நின்றாடும் மூலமந்திரம்

**ஓம் கணபதி ஸ்ரீம்... ஹரீம் க்லீம்... திரிலோக மோகரணம் குரு குரு கணேசம் ஹரீம்பட் சுவாஹா!**

(108 முறை சொல்லவும்)

ஏதேனும் ஒன்றை 4 அங்குலத்திற்கு நீளமும் 4 அங்குலம் அகலமும் (4 x 4) உள்ளதை எடுத்துக் கொள்ளவும். அதில் வெள்ளி எழுத்தாணி அல்லது செம்பு எழுத்தாணி கொண்டு, படத்தில் உள்ளது போல மன ஒருமையுடன் கவனமாக அமைக்கவும். இவ்வாறு சக்கரம் அமைக்கும் பொழுது தகடு ஒட்டை விழாமல் பார்த்துக் கொள்ளவும். சக்கரம் முழுமைப்பெற்ற பின் அதனை பூசை அறையில் வைத்து விநாயகனுக்குப் பிடித்த அவல், பொரிகடலை, வெற்றிலை பாக்கு, பூ, பழம், திருவிளக்கு வைக்கவும். அதன்பின் சக்கரத்திற்குரிய மூல




## மூலமந்திரம்

**ஓம் கணபதி... குரு கணபதி... ஐயும் கணபதி...**
**கிலியும்யும்... கணபதி வா... வா... கணபதி**
**சர்வமும் வசியமாகட்டும்... சர்வ சித்தியும் கிடைக்கட்டும்**
(108 முறை சொல்லவும்)

மந்திரத்தை 108 முறை மென்மையான ஆத்ம ஒலி நயத்துடன் ஜெபிக்கவும். இது போன்று ஒரு மண்டலங்கள் தினசரி பிரம்ம முகூர்த்த நேரத்தில் ஒரு மணி நேரம் எந்திரச் சக்கரத்திற்கு உருவேற்றி வழிபட்டு வர வேண்டும். ஒரு மண்டலம் முடிந்த பின்பு, இறுதி நாள் பூசையில் கொழுக்கட்டை, பாயசம் போன்ற நிவேதனப் பொருட்களை வைத்து கற்பூர தூபதீபம் காட்டி பூசையை முடிக்க வேண்டும். அன்னதானமும் அளிக்க வேண்டும். அதன்பின்பு உருவேற்றிய சக்கரத்தை வீட்டின் முக்கிய இடத்திலோ அல்லது வியாபாரத் தலத்திலோ வைக்கவும். இதனால் எல்லா வளமும், நலமும் பெருகும். வாரத்திற்கு ஒருமுறை மஞ்சள் தண்ணீரோ அல்லது கோமியமோ தெளித்து வந்தால் சக்கரத்திற்கு என்றும் வீரியம் இருந்து கொண்டே இருக்கும். சக்கரம் உங்களுக்கு இனி தேவையில்லை என்று நினைத்தால் அதனை கடலிலோ அல்லது கிணற்றிலோ போட்டு விடலாம்.

***



# கலியுகமும் கவசமாய் காத்து நிற்கும் யோகமும்!

உலகம் எத்தனை நூற்றாண்டுகளை கடந்து மிக வேகமாக முன்னேறிக் கொண்டு வந்துள்ளது. விஞ்ஞான சாதனங்கள் ஒவ்வொன்றும் மனிதனுக்கு வேடிக்கைகளைக் காட்டி வருகிறது. எது உண்மை? எதுபொய்? எதைப்பின்பற்றுவது எதை விட்டுத் தள்ளுவது? எதை அதிகமாக சேர்ப்பது? எப்படி வாழவேண்டும்? என்ற குழப்பங்கள் நிறைந்த மனிதனாக, இன்று, வாழ்கின்றான் மேலோட்டமாக வெளி உலகிற்கு போலிப் புன்னகைகளைக் காட்டி உள்ளுக்குள் குமுறுகிறான்.

அற்புத முன்னேற்றம் என்று சொன்னாலும், அடிப்படையில் மனிதநேயம் மாண்டு போய்கொண்டிருக்கிறது. பல்லாயிர மாண்டுகளுக்கு முன்பு தோன்றிய திருவள்ளுவ சித்தர், திருக்குறளில் அன்றைய நாளில் எதைக் கண்டித்தாரோ, அதுவே இன்று அதிக அளவில் பெருகியுள்ளது. உதாரணமாக சொன்னால், கள்ளுண்மை, தெருக்கள் தோறும் 'பார்'களாகப் பரிணமிக்கின்றது. 'சூது' 'லாட்டரி' என்ற பெயரில் பெரும்பாலும் அரசாங்கமே மக்களிடம் விளையாடுகின்றது. 'கொல்லாமை' மதத்திற்காக, மொழியிற்காக, சாதியிற்காக, இடத்திற்காக, செல்வத்திற்காக எண்ணெற்றோர் கொல்லப்படுகின்றனர். 'புலால் மறுத்தல்' மனிதனின் சுவைக்காக வேண்டி கோடிக்கணக்கில் ஆடும், மாடும், கோழியும் கொல்லப்படுகின்றது. 'புணர்ச்சி விதும்பல்' 'எய்ட்ஸ்' என்ற பெயரில் பாலியல் நோய் எச்சரிக்கை விடப்படுகின்றன.

ஆகவே, நாகரீகம், முன்னேற்றம், விஞ்ஞானம் யுக்தி என்றெல்லாம் சொன்னாலும் கூட ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய மனிதனின் ஒழுக்ககேடுகளில் திருவள்ளுவர் எவற்றை

கண்டித்தாரோ அதில் எள்ளளவும் மாறி ஏதுமில்லை. ஆனால் 'சட்டம்' என்னும் சாட்டைக்கு பயந்து மட்டும் சிலவற்றை கட்டிப்போட்டு மனிதன் வைத்துள்ளான்.

எல்லாவற்றிலும் முன்னேறி விட்டோம் என்று மிடுக்காக, துடுக்காக, செல்கின்றோம். எந்தவித முன்னேற்றம் என்றுதான் புரியவில்லை. உலகம்முழுவதிலும் உணவு உற்பத்தியில் எத்தனையோ தொழில் நுட்பங்களை புகுத்தி விட்டது. ஆனால் மனிதனின் ஆயுள் தான் ஐம்பதிற்குள் அச்சப்படுத்தி, மருத்துவ மனைகளில் கொச்சைப் படுத்தியுள்ளது.

நோய்களைப் பற்றி ஆயிரக்கணக்கான ஆய்வுகளைச் செய்து கோடிக்கணக்கில் மருந்து உற்பத்திச் சாலைகளையும், மருத்துவ உபகரணங்களையும் தோற்றிவித்து வருகிறது. ஆனால் நோயில்லாமல் வாழ்வதற்கான இரகசியங்களை மக்களுக்கு கற்றுத்தர எந்த நாடும் முன் வருவதில்லை. ஏனெனில் அதை கற்றுத் தந்துவிட்டால் தங்கள் நாட்டில் உற்பத்தியாகும் மருத்துவ உபகரணங்களும் மருந்துகளும் போணியாகாமல் புதைகுழியில் போட வேண்டி வரும்.

ஆகவேதான் ஆங்கில மருத்துவம் ஆலம் விருட்சம் போல் அனைத்து நாடுகளிலும் வேர்விட்டு விசாலமடைந்துள்ளது.

இந்திய நாட்டில் பன்னெடுங் காலத்திற்கு முன்பு தோன்றிய சித்தர் பெருமக்களும், யோகிகளும், ரிஷிகளும், தவசிகளும், முனிவர்களும், தாங்கள் அனுபவத்தால் உணர்ந்து மக்களுக்கு உணர்த்தினர். மனிதன் நோயற்று வாழ்வதற்கும், நோய்கள் வருமுன் தடுப்பதற்கும், குடும்பங்கள் செழித்து வாழ்வதற்கும், நாடும் நகரமும் நல்ல நிலை பெறுவதற்கும் யோகத்தையும், யாகத்தையும், உபதேசித்து வைத்தனர். அவற்றைப் பின்பற்றி வாழ்ந்தவர்கள் வாழ்வாங்கு வாழ்ந்தனர். யோகத் தீயானது பயிற்சி செய்பவர்களின் சந்ததிகளை ஏழு தலைமுறையானாலும் கவசமாகக் காத்து நிற்கின்றது.

கலியுகத்தில் மனிதனின் மன ஓட்டத்தினால் கூட்டுக் குடும்பங்கள் ஆட்டம் கண்டு சிதறிப் போகின்றன. கூட்டுக் குடும்பங்களில் வளரும் குழந்தைகள் 'உலக வாழ்க்கையை நடத்த

பயிற்சி தரும் பட்டறைகளாக மாமன், அத்தை, அண்ணன், அண்ணி, தாத்தா, பாட்டி, போன்ற உறவுமுறைகள் பல ஒத்துழைப்பு தந்தன்.

ஆனால் இன்றோ சுயநலம், அகங்காரம், அதிகாரம், ஆகியவைகள் மேலோங்கிய் குடும்பங்களாக ஆகிவிட்டன. குழந்தைகள் எந்திரங்களோடும், எதிர் வீட்டாரோடும், பள்ளிக் கூடங்களிலும், காப்பகங்களிலும் அன்பின் உறவிற்காக உதிரம் கொதிக்க காத்து நிற்கின்றன. பொருளாதார ஏற்ற இறங்களினால் கணவன், மனைவி, கட்டாயமாக வேலைக்கு செல்லவேண்டி உள்ளது. குழந்தைகளுக்கு குதுகலங்களே இல்லாமல் போய் விட்டன. வளரும் பொழுசூத ஆழ்மனத்தில் தனிமைச் சுமையால் அழுத்தப்பட்டு வளகிறது. ஆகவேதான் சிலநேரங்களில் பெரியவர்கள் ஆனபின் பெற்றோர்களைப் பழிவாங்கும் உணர்ச்சிகளாகக் கூட மாறிவிடுகிறது.

கலியுகத்தில் கவசமாய்க் காத்து நிற்பது யோகம் மட்டும் தான். இறைவழி பாட்டிலும், கூட்டு வழி பாட்டிலும், யாகங்களை வீட்டில் செய்வதாலும், நெய் வேத்தியங்களை நேர்த்தியாக அனைவரும் பாங்குடன் உண்டு மகிழ்வதாலும் மன மகிழ்ச்சியை உருவாக்கிக் கொள்ளலாம்.

'யோகம்' என்றால் ஒன்றிணைத்தல் என்று பொருள். மனதை மாசில்லாமல் வைத்துக் கொள்ளவும், எது நடப்பினும் மனம் சஞ்சலமில்லாமல் சர்வேஸ்வரனுடன் இணைந்திருப்பதற்கும், பல்வேறு சித்திகளைத் தருவதுமானதுதான் அதிலொரு பகுதியான 'தியானம்' (Meditation) ஆகனும்.

தியானத்தில் ஏதேனும் ஒரு மந்திரத்தை தேர்வு செய்து, அல்லது பீச எழுத்துக்களை தினசரி காலை, மாலை, ஆகிய நேரங்களில் ஒரு பத்து, பதினைந்து நிமிடங்கள் செய்யலாம். தனிப்பட்ட ஒருவர் தியானம் செய்யும் பொழுது அவருள் ஆன்ம விழிப்பு ஏற்பட்டு வாழ்க்கை சிறக்கிறது. அதுவே குடும்பத்துடன் கூட்டுத் தியானமாக செய்யும்பொழுது குடும்பமே மேலோங்கி வருகிறது. இது பிரார்த்தனை வாயிலாகவும் செய்யலாம். இது போலத் தான்.

அநேக சிக்கல்களுக்கு நம்முன்னோர்கள் தீர்வு கண்டனர். அதை இன்று பிற சமயங்கள் பின்பற்றி வருகிறது. தேவாரம், திருவாசகம், போன்ற பஜனை கீர்த்தனைகளும், பக்தி பாடல்களும் நிரம்ப பாடப்பெற்று ஞானம் எங்கும் பரவின. அதில் எழும்பிய ஒலி அலைகள் உடலையும், உள்ளத்தையும் தூய்மைப் படுத்தின. ஆகவே தியானமானது உள்ளும் புறமும் தூய்மை யடையச்செய்கின்றன. உள்ளத்தை உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்கின்றன.

'பிராணயாமம்' என்ற சுவாசப்பயிற்சி உடலுக்குள் உள்ள நுட்பமான நரமபிழைகளில் எல்லாம் 'பிராண சக்தியான உயிர்க் காற்றினை' ஊடுருவி செல்ல வைக்கிறது. மனிதனின் உள் சக்தி மையங்களாக இருக்கின்ற ஆறு ஆதாரங்களை நன்கு தூண்டிவிடச் செய்கிறது. பிராண நோய்களிலிருந்து விடுவித்து உடலை லேசாக வைத்திருக்க உதவுகிறது. தூய ஒலி உணர்வுகளோடு உன்னதமாக இணையச் செய்கிறது.

ஆசனங்களோ, உடலை அழகாக வைத்திருக்க உதவும் உடற் பயிற்சி முறைகளாகும். இதில் தேவைகளுக்கு மேலுள்ள தசைகளையும் கொழுப்பையும் கரைக்கிறது. எலும்புகளை நன்கு பலப்படுத்துவதோடு அதில் நெகிழ்வு தன்மைகளை (Flexibility) ஏற்படுத்துகிறது. நோய் எதிர்ப்பு ஆற்றலை அதிகப்படுத்துகிறது. நரம்புகளை சரியான முறையில் இயக்கி நோய்கள் வராமல் தடுக்கிறது. உடலியக்க மண்டலங்களான சுவாச மண்டலம், ஜீரண மண்டலம், கழிவு மண்டலம் போன்றவற்றை நன்கு சீராக இயங்கச் செய்கிறது.

ஆகவே எல்லாவித செல்வங்களையும், உலகியல் வாழ்வையும் முறையாக, நிலையாக அனுபவித்து மேலான மனித நிலையிலிருந்து தேவ நிலையையும், தெய்வீக நிலையையும் அடைய வேண்டும் விரும்புகிறவர்களுக்கு, தியானம் (Meditation) பிராணாயாமம் (Pranayamam) ஆசனம் (Asana) பெரிதும் உதவுகின்றன.

வெற்றி தரும் விநாயகனின் துணைக்கொண்டு வேலைகளின் நடுவே தினசரி யோகத்தில் ஆழ்ந்திடுங்கள். அந்த யோக தவ

வலிமையானது உங்களைக் காக்கின்ற கவசமாக இருப்பதோடு உங்களுக்குப் பின்னால் உங்களது சந்ததிகளைச் சூட்சம ஒளியாக நின்று காப்பாற்றும் கவசமாக நிச்சயம் இருக்கும்.

உலகம் மாறிக் கொண்டே இருக்கிறது. அதில், சேர்த்து வைத்த செல்வங்களும் சுற்றங்களும் நிலையில்லாமல் மாறிக் கொண்டே இருக்கும். ஆனால் யோகமும் இறைவன் திருவருளும் தான தர்மங்களும் மாறாமல் பன்மடங்காக பெருகித் தொடர்ந்து உங்களின் சந்ததிகளைக் காத்து நிற்கும். வெற்றி தரும் விநாயகனின் அருளால் சகல சித்திகளையும் பெற்று எக்காலமும் ஏற்றமுடன் வாழ்வீராக.



